# ஊர்மண்

[முழு நாவல்]

மேலாண்மை. பொன்னுச்சாமி




13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை – 600 017.

## சமர்ப்பணம்

பிள்ளைகளான எங்களைப் பற்றி (நானும், என் உடன்பிறப்பு கரிகாலனும்) கண்ட கனவுகளைக்கூட எங்களிடம் சொல் லாமலேயே... சின்ன இளந்துளிர்களாக இருந்த எங்களை இந்தக் கந்தக மண்ணில் நாதியற்று தவிக்க விட்டுவிட்டுப் ‘போய்ச் சேர்ந்து’விட்ட எங்கள் அப்பா - அம்மா செல்லச்சாமி நாடார் - அன்னபாக்கியம் நினைவுகளுக்கு...

# முதற்பதிப்பு முன்னுரை

முன்னுரை எழுத என் கையில் எதுவுமே யில்லை என்கிற அளவுக்கு என்னுள் ஒரு வெறுமை. என் வண்ணங்கள் முழுமையும் வழித்து இந்த நாவலில் கொட்டிவிட்ட மாதிரியோர்... உணர்வு.

இந்த நாவலை மறுபடியும் படித்துப் பார்க்கிற போது சில இடங்களில் என் கண்களில் நீர்க்கசிவு. 'மானுடப் பிரவாகம்' என்ற எனது சிறுகதை, என்னை அழ வைக்கும்.

இன்னும் நன்றாகச் செய்திருக்கலாம் என்ற அதிருப்தி, ஒன்றிரண்டு அத்தியாயங்களில்.

மீண்டும் கைவைத்தால் பூமாலையின் இந்த அழகு சிந்திச் சிதறிவிடுமோ என்ற பதற்றம்.

நாவல் உங்களிடம் வருகிறது.

தாழையாவும் செம்பகமும் வாடாத பூக்கள்; உதிர்ந்த பின்னும் மணம் வீசுகிற பூக்கள் - என்றென் றைக்குமாக...

அவர்களின் காதல், உன்னதங்களின் உன்னதம். ஆனால், உண்மையிலும் உண்மையானது.

இந்த நாவலை வாசித்துவிட்டு வழக்கம் போல ஓர் அஞ்சல் எழுதுங்கள். வாழ்க்கையிலிருந்து புது

வண்ணங்களைச் சேகரிக்க இருக்கிற என்னிடம் உங்கள் கடிதம் ஒரு தூரிகையாக வந்து பயன்படும்; என்னை உற்சாகப்படுத்தும்; என்னை நெறிப் படுத்தும்.

சாதி என்னும் இந்திய ராட்சஸனை சவப் பெட்டிக்குள் அடைத்து, கடைசி ஆணி அறையப் படுகிற சுத்தியலின் சத்தத்தில் எனது சமூகமும், எனது நாவலும் வெற்றிப் புன்னகை புரியும். அதுவே எனது வியர்வையின் கனவு.

எனது எல்லா நூல்களைப் போலவே, இதையும் அழகாக - கச்சிதான கவித்துவமாக - அச்சிட்டு வெளியிடுகிற 'குமரிப் பதிப்பக' அதிபர் திரு வீ. ஜவஹர் அவர்களுக்கும்---

என்னைத் தன் சொந்தப் படைப்பாளியாக நினைத்து, நெஞ்சுக்குள் உச்சரித்துப் போற்றுகிற த. மு. எ. ச. தோழர்களுக்கும்---

எனது நூல்களையெல்லாம் தோள்களில் தூக்கிப் போட்டு ஒவ்வொரு வீடு வீடாகவும், 'கலை இலக்கிய இரவு'களிலும் விற்பனை செய்கிற முற்போக்கு மனம் கொண்ட நண்பர்களுக்கும்---

எனது இதய நன்றிகள் என்றென்றும் உரித்தாகும்.

நன்றி!

என்றும் உங்கள்,
**மேலாண்மை. பொன்னுச்சாமி**

*மேலாண்மறைநாடு*
*626127*
*காமராசர் மாவட்டம்*

# மறுபதிப்புக்கான முன்னுரை

'ஊர்மண்' எனக்குப் பிடித்த நாவல். எந்த இதழிலும் தொடர்கதையாக பிரசுரமாகாமல், நேரடியாக பதிப்பகம் சென்ற நாவல்.

இந்த நாவலின் மீதுள்ள எனதன்பு இன்னும் குறையவில்லை. இப்போது வாசித்துப் பார்க்கிற போதுகூட, இதன் மொழிநடையும், உரையாடல் நேர்த்தியும் என்னை ஒரு சுயமோகியாக்குகிறது.

இதை நான்தான் எழுதினேனா என்று மலைக்க வைக்கிறது. இன்பப் பிரமிப்பாக இருக்கிறது. இந்த நாவலுக்கு வாசகர்களிடமிருந்து ஏகப்பட்ட பாராட்டுக் கடிதங்கள். அமெரிக்காவிலிருந்துகூட சில கடிதங்கள் வந்தன. ஆனால்---

இதழ்களின் உலகத்தில் உரிய மதிப்புரை களையும், கவனிப்பையும் பெறவில்லை என்பது ஒரு துரதிர்ஷ்டமான சோகம். இந்த மறு பதிப்பிலாவது அந்தக் குறை நீங்க வேண்டும் என்று பேராசைப் படுகிறேன்.

இதைப் போன்ற மண்வாசு நாவல்கள், இன்னும் ஆழமும் செறிவும் உள்ள நாவல்கள் எழுதுகிற ஆற்றல் என்னுள் கிடக்கிறது என்பதை இந்த மறுபதிப்பு எனக்கே உணர்த்துகிறது.

எங்கள் ஊர் 'பல்லக்கு கேஸ்' என்பதற்குள் சமூக நீதிக்கான மல்லுக்கட்டு இருக்கிறது. எங்கள் ஊர் வேதக்காரப் பள்ளிக்கோடம் வந்த கதையும், 'வேதக்காரர்கள் மட்டுமே உறுப்பினராக முடியும்' என்ற நிபந்தனையோடு வந்த விவசாயிகள் கூட்டுறவுச் சங்கம் வந்த கதையும், ஊர் நாடார்கள் முழுக்க வேதக்காரர்களாக இருந்த கதையும், எங்கள் அப்பா பெயரே 'மரிய செல்லச்சாமி நாடாராக' இருந்த கதையும், வேதக் கோயில் விதியின் அந்நியத் தன்மையால் மிரண்டு வெளியே வந்த நாடார்களின் ஆதிப் பண்பாட்டு மனவேட்கைக் கதையும், நாயக்கர்களில் ஒரு பகுதியினர் மட்டும் வேதக்கார நாயக்கர்களாக மாறியதில் நடந்த சமூகக் கதையும் எனக்குள் அலையடித்துக் கிடக்கின்றன.

வெள்ளைக்காரத் துரைகள் குதிரையேறி கிராமத்துக்குள் வந்த கதை பற்றி கதை கதையாகப் பேசுகிற எங்கள் ஊர் பெரிசுகளுக்கு 'காந்தி என்றால் என்ன'வென்று தெரியாத வியப்புக்குரிய பேருண்மை கிடக்கிற பேராச்சரியம் எனக்குத் தெரியும்.

என் ஐயாப்பா சங்கையா நாடார் கடைக்காரர். எங்கள் அப்பா செல்லச்சாமி நாடார் கடைக்காரர். என் தம்பி கரிகாலனும், நானும் கடைக்காரர்கள். மூன்று தலைமுறை கடைக்கதையை கடைக்கார னான நானே எழுதினால்... அந்த நாவலுக்குள் ஜீவத் துடிப்பு இருக்கும். தமிழுக்கு ஒரு புதிய--- உண்மைக் கொடையாக இருக்கும்.

எனக்கு முன்னால் வாழ்ந்தவர்களை நான் வாழ்ந்த நாட்களில் வாசித்திருக்கிறேன். கடந்த காலத் தூரங்கள் எனக்குள் உயிர்த்துடிப்புடன் இயங்கு கின்றன. கிராமத்து நதியின் மீன் நான்.

யோசித்துப் பார்த்தால்... எனக்குள் நிறைய நாவல்கள் பொதிந்து கிடக்கின்றன. யோசிக்கச் செய்கிறது, இந்த மறுபதிப்பு.

'எழுத முடியும்' என்கிற நம்பிக்கையையும், 'எழுதணும்' என்கிற வெறியையும் என்னுள் ஏற்படுத்துவதனாலேயே... இந்த மறுபதிப்பை பெரிதும் மதிக்கிறேன்.

மறுபதிப்பை வெளியிட முன்வந்த கங்கை புத்தக நிலையம் உரிமையாளர் திருமிகு. ராமு அவர் களுக்கும், நாவல் பிரதி தேடி எடுத்துத் தந்த எனது தோழர் செம்மலர் துணையாசிரியர் சோழ நாகராஜ் அவர்களுக்கும், இந்த மறுபதிப்பை செதுக்குவதில் உதவிய என் மகள் வைகறைச்செல்விக்கும், எனக்கு ஆதார பலமாகவும், ஆணிவேராகவும் உள்ள என் தம்பி கரிகாலனுக்கும் என் நன்றிகள் என்றென்றும் உரித்தாகும்.

நன்றி!

என்றும் உங்கள்
**மேலாண்மை. பொன்னுச்சாமி**

மேலாண்மறைநாடு
626127
விருதுநகர் மாவட்டம்.

# ஊர்மண்

## 1

சுருட்டி கொண்டையாய் போட்டிருந்ததை அவிழ்த்து விட்டாள், பொற்கொடி. எண்ணெய் தேய்க்காமலேயே சீப்பால் இழுத்தாள். ‘பர் பர்’ரென்று நாலு இழுப்புதான். ஒற்றைச் சடையாகப் பின்னி, பின்பக்கம் போட்டுவிட்டு, முகத்தைக் கழுவித் துடைத்தாள். அழுத்தமான துடைப்பு. கையகலத்துக்குச் சற்றுப் பெரிதான கண்ணாடியில் பார்த்தாள். கன்றிச் சிவந்த முகம் பளிச்சென்றிருந்தது. பொட்டு வைத்துக்கொண்டாள்.

கண்ணாடியைக் கீழே வைத்துவிட்டு உடுத்தியிருந்த சேலையைத் தளர்த்தினாள். கொசுவ மடிப்பை ஒழுங்கு படுத்திக்கொண்டாள். ஒரு கச்சிதம் வந்துவிட்ட திருப்தி. அவளுள் பரபரப்பு. செயல் துரிதம்.

அடிக்கொரு தடவை வாசலில் வந்து நின்று, மேற்காமல் பார்த்தாள். முத்துலட்சுமியை எதிர்பார்த்து நின்றாள். மனசுக்குள் காத்திருப்பைச் சகிக்காத எரிச்சல்.

“ச்சேய்! இது ஒரு மசமசத்த எருமை. ‘விருட்’டுன்னு வரமாட்டா…” என்ற முணுமுணுப்போடும் சலிப்போடும் பார்க்கிறபோது… தெருவில் முத்துலட்சுமி.

"போவமா...?"

"ம்... இப்பவாச்சும் வந்தியே... தேரு மாதிரி."

"ஏன்? நேரமாயிருச்சா?"

"இருட்டுறதுக்குள்ளே திரும்ப வேண்டாம்? சட்டுன்னு போனாத்தானே... சட்டுன்னு வர முடியும்?"

"சரியம்மா...எம்புட்டு சீக்கிரமா வந்தாலும், ஓங்கிட்ட வசவு வாங்குறது நிச்சயம்."

பொற்கொடியும் பண்ணரிவாளை எடுத்து இடுப்பில் சொருகிக் கொண்டாள்.

"யம்மா... நா புல்லுக்குப் போய்ட்டு வரட்டா?"

"போயிட்டு வெருசா வந்துரும்மா."

செம்பகத்தின் ஹீனக்குரல். ஏதோ ஞாபகத்தில் சொல்கிற மாதிரி அசிரத்தையான குரல்.

ரெண்டு பேரும் தெருவில் இறங்கினர். சாயங்காலச் சூரியன் வெக்கை தணிந்த வெயிலைச் சிந்திக் கொண்டிருந்தது. தரையில் நீள நீளமாய் பொற்கொடியும், முத்துலட்சுமியும் நிழல்களாய்...

முத்துலட்சுமி நல்ல கறுப்பு. கறுப்பிலும் கறுப்பு, அண்டங் கறுப்பு. உடக்கு மாதிரி வளத்தியான உடம்பு. எத்தனை அழுத்தமாக உதடுகளை மூடினாலும், முன்னத்திப் பல் ரெண்டும் வெளியே நிற்கும். கண்களும் கூட செம்மறியாட்டுக் கண்கள் மாதிரி, சற்றுப் புடைத்துக் கொண்டு வெளித்துருத்தி நிற்கும். கழுத்து கொஞ்சம் நீளம். தலை தனியாக ஒட்டவைத்த மாதிரி அந்நியப் பட்டு நிற்கும். பார்த்த முதற் பார்வையிலேயே, லட்சணமற்ற தன்மைதான் கண்ணில் படும். ஆனால் வாலிபம், திரேக

வளமையை தாராளமாய்த் தந்திருந்தது. இடைநெளிவுடன் மேலும் கீழும் விரிந்த திரேகம். கச்சிதமான உடற்கட்டு. பார்வைகளைச் சுண்டியிழுக்கக் கூடிய பருத்த மார்பகம். ரெண்டாவது தடவை பார்க்க வைக்கிற அழகு. கவர்ச்சி.

நடந்தால்... 'திண்,திண்'ணென்று தரை அதிரும். இடுப்பில் கடாப்பெட்டி, பெட்டிக்குள் களை சுரண்டி.

இவளுக்கு நேர் எதிர் பொற்கொடி. செம்பகத்தின் திரேக நிறம். குழைவான தங்கநிறம். தாழையாவின் உடம்பு. சிற்றுடம்பு. கட்டையாய்—ஒல்லியாய்—கண்ணுக்குக் குளிர்ச்சியான தோற்றம். கும்பிடத் தோன்றுகிற கண்ணிய வடிவம். மினுக்கி வைத்த குத்துவிளக்கு மாதிரியோர் லட்சணம். கச்சிதம்.

ஊரைக் கடந்தால்... நீரில்லாத ஓடை. வேலிமரங்களும், பாறைத் திமிறல்களும், மனிதக் கழிவுகளுமாக ஆபாசமாய்...

ஒற்றையடிப் பாதையில் ஊடுருவிச் செல்கிறவர்களின் மேல் துணியைப் பிடித்திழுத்து மாமா மச்சான் முறை கொண்டாடுகிற வேலி மர நீளக் கிளைகள்.

ஓடைக் கரையேறினால்... இருபக்கமும் இறவைத் தோட்டங்கள். கிணற்றுப் பம்ப் செட்டுகளும் சதுர சதுரப் புஞ்சைகளும். புஞ்சைகளில் பருத்திச் செடிகள், மிளகாய்ச் செடிகள். வாய்க்கால்களில் பட்டாளத்துச் சிப்பாய்கள் மாதிரி அணிவகுத்து நிற்கும் அகத்திச் செடிகள். புஞ்சையின் சுற்று விளிம்புகளில் ஆமணக்குகள். பீர்க்கைக் கொடிகள், பூசணிப் பூக்கள்.

சாயங்காலச் சூரியனில் மகிழ்ந்து பூரித்துப் போய் பளிச்சிடும் பீர்க்கைப் பூக்கள். பசிய மஞ்சளாய் ஒளிச் சிரிப்பு, மஞ்சள் தேய்த்துக் குளித்த பொற்கொடி முகம் மாதிரி.

பாதையோரங்களில் புழுதி படிந்த பசுமையாக துத்திச் செடிகள். அவற்றில் ஜில்லென்று பூத்துவிரிந்த துத்திப் பூக்கள், சந்தன மின்னல்களாய்...

பொற்கொடிக்குள் பாவாடைக் கால நினைவுகள்... வேக வைத்த சீனிக் கிழங்கு நிறத்தில் பூத்துக்கிடக்கிற துத்திப்பூக்கள். இவற்றை ஒவ்வொன்றாகப் பறித்து பாவாடையில் மடி கூட்டி...

அம்மா சேலையில் உருவிய நூலில் ஒவ்வொரு பூவாகக் கோர்த்து... பூப்பந்தாக ஆக்குவாள். மழலையைக் கொஞ்சுகிற மகிழ்ச்சிப் பரபரப்பில் மனசு தத்தளிக்கும். பூப்பந்தைத் தூக்கித் தூக்கிப் போட்டுப் பிடிப்பாள்.

தனது படைப்பு. தனது சம்பாத்தியம். உழைப்பில் மலர்ந்த அழகு. துத்திப்பூப்பந்தை தலையில் வைத்துப் பார்க்கிற அழகுக்காகவே, குளிப்பாள். முற்றத்தில் வெளிப் பானைகள் இருக்கும். அந்தத் தண்ணீரை காலி பண்ணுவாள்.

செம்பகம் வேலையும் கையுமாக இருப்பாள். எரிச்சலில் கத்துவாள். “அடியே... சின்னச் சிறுக்கி... ஏண்டி தண்ணீயை சீரழிக்கே?”

“ஆங்... குளிக்க வேண்டாமா?”

“என்ன நாயி, நேரங்கெட்ட நேரத்துலே குளிப்பு வேண்டிக் கிடக்கு? வேலை பார்த்து அலுத்துப் போனீயாக்கும்?”

“பூ வைக்கணும்லே?”

“ஒன்னை எந்தப் புருஷன் இப்பப் பார்க்க வாரான்?”

சிறுமியின் முகத்தில் அசலான கோபம் வெள்ளையாய் வெடிக்கும். முகம் சுண்டிச் சிவக்க வீட்டு வாசலைப் பார்ப்பாள்.

"ஒன்னைத்தான்...ஒம்புருஷன் பாப்பான்."

"அடியே.... என்ன வாய் நீளுது? இரு இரு.... உங்க அய்யா வரட்டும். சொல்லுதேன். வாயைக் கிழிக்கட்டும். சொல்லட்டா?"

"சொல்லு சொல்லு... சோழத்தட்டையை மெல்லு மெல்லு."

ஈரப் பாவாடையை முற்றத்திலேயே கழற்றிப் போட்டு விடுவாள். வேறு பாவாடை சட்டை நொடியில் தொற்றிக் கொள்ளும். எண்ணெய்ச் சீசாவை 'உண்டு இல்லை' என்று பண்ணிவிடுவாள். இழுத்துக் கட்டி, சடைபின்னி... பூவைச் சொருகுவாள். சொருகுவதற்கு முன்பு உள்ளங்கையில் வைத்து அழகு பார்த்து ரசிப்பாள். அந்தக் கணத்தில்—

அவள் மனசே பூப்பந்தாகக் குதிக்கும். மலரும். சிரித்துக் கும்மாளமிடும். மனசுக்குள் சந்தனமின்னல்கள்.

பூவைச் சொருகி முடித்தவுடன் மனசுக்குள் ஏகத் திருப்தி. எல்லாம் கச்சிதமாகிவிட்ட பூரிப்பு. மனக் கெந்தளிப்பு.

'போட்ட' சண்டை ஞாபகத்தில் இருக்காது. அம்மா முன்னால் ஓடிப்போய் நிற்பாள். முகமெல்லாம் அள்ளிக் கொண்டு வருகிற சிரிப்பாணி.

"யம்மா... யம்மா..."

"என்னடி."

அடுப்புப் புகைக்குள் அல்லாடி கண் எரிந்து போய் அவள்.

"நல்லாயிருக்கா?"

"என்னது?"

தரையில் நிற்காமல் 'தறிய முறிய' நெளிவாள்.

“தலையிலே பூ. நல்லாயிருக்கா?”

“இருக்கு, இருக்கு... ஓவியமாயிருக்கு” என்று சள்ளை யோடு வருகிற எரிவார்த்தை. ரசம் போன கண்ணாடியாக அம்மா. தன் மகிழ்ச்சியை—பரவசத்தை— பிரதிபலிக்கத் தெரியாத எரிச்சலில், அம்மா.

“போம்மா... ஒனக்கு ஒரு மண்ணும் தெரியாது” என்று தூக்கியெறிந்து விட்டு கன்றுக்குட்டியாக கும்மாளமிட்டு வாசலைத் தாண்டுவாள். தரையில் கால் நிற்காது. ரெக்கை முளைத்த தட்டான் பூச்சியாக ஜிவ்வென்று தெருவில் பறப்பாள். தம் வயசுச் சிறுமிகளின் முன்னால்...போய் நிற்பாள்.

“ஏய்...இங்கு பாரு...பூ. எப்படியிருக்கு? நல்லாயிருக்கு இல்லே?”

வாழ்க்கையைச் சுமக்காத சிறுமிகள். ரசமுள்ள கண்ணாடிகள்.

“அய்ய! ஏது பூ?”

“நாந்தான் புடுங்கி... பூக்கட்டி... வைச்சிருக்கேன். எப்படியிருக்கு?”

“ரொம்ப நல்லாயிருக்கு.”

“அய்ய்!” என்று கைதட்டிச் சிரிப்பாள், பொற்கொடி. உழைப்புக்கேற்ற பலன் பெற்ற சம்சாரியின் மனசைப் போல ஒரு நிறைவு. ஒரு தளும்பல்...

“என்ன... எழவு விழுந்த வீடு மாதிரி ‘கம்ம்’முன்னு வாரே?”

முத்துலட்சுமியின் சீண்டலில் மன உலகை விட்டு வெளிவருகிற பொற்கொடி. பாதையோர துத்திச்

செடிகளையும், அதன் மலர்ப் புன்னகையையும் பார்த்து ரசிப்பாள்.

"ஒன்றுமில்லே... பழைய நெனைப்பு."

"ஆமா...பெரீய்ய கெழடி! பழைய நெனைப்பை நெனைச்சுட்டா."

"ஏன்? நமக்குப் பழைய நெனைப்பு இல்லியா?"

"என்ன இருக்கு?"

"என்ன இல்லை?"

"நெனைச்சுப் பாக்க என்ன இருக்கு, நம்ம வயசுலே? புருசன்மார்களோட புரண்டெந்திச்சதையா? ஆம்பளை வேர்வையை அனுபிவிச்சதையா? புள்ளை பெத்து 'பட்டமுந்துன' வேதனையையா? என்னத்தைக் கண்டுட்டோம்?"

"ச் சீ...! ஒனக்கு எப்பவும் இதே நெனைப்புதானா? கழுதை."

"கழுதையா பொறந்துருந்தாக்கூட நல்லது. வெக்க மானம் பாக்காம ஆசைப்பட்டதை அனுபவிக்கலாம்... பொட்டாச்சியா பொறந்துட்டு... ஆயிரத்தெட்டு விஷயத்துக்கு பயந்து பயந்து சாக வேண்டியிருக்கு. மனசுலே உள்ளதை வாய்லே கூட கொண்ணாந்து நிறுத்த முடியலே."

"ஏண்டி...?"

"ஆம்பளைப் பயகளாலே கூடிக் கூடிக் கூசாமப் பேச முடியுது. நெனைச்சதைப் பேசிக் கழிக்க முடியுது. பொம்பளையாலே முடியுதா? இந்தா... ஒங்கிட்டே கூடப் பேச முடியலே..."

"இப்ப ஒனக்கு என்ன வேணும்ங்கே?"

“ஒனக்கு ஒன்னும் வேண்டியதில்லையாக்கும்? எங்கே? என் முகம் பாத்துச் சொல்லு. நெஞ்சு தொட்டுச் சொல்லு. ஒனக்கு ஆசையேயில்லையாக்கும்?”

“இல்லே...”

“நெசமா?”

“ம்ஹூம்.”

“சத்தியமா?”

“இல்லே, இல்லே, இல்லே...”

“அப்ப... நீ பொம்பளையேயில்லே. மனுச ஜென்மமில்லே. இரு பிறவி.”

பொற்கொடிக்கு சுள்ளென்று கோபம் வந்தது. மிளகாயை அறைத்து அப்பியது போலிருந்தது. இரு பிறவி... என்றால், அலி.

“அடி செருப்பாலே! நாயே, என்ன பேச்சு பேசுதே? வாயைக் கிழிச்சிடுவேன்... கிழிச்சு...”

“கிழிப்பே... கிழிப்பே... ஏங்கை என்ன கேப்பை நாத்தா நட்டப் போயிருக்கும்?”

“பெறகென்ன... பேச்சா... பேசுதே?”

“பேசுவேண்டி... நீ பெரிய்ய ராசா மகள்னு... ஊர்லே பயப்படுவாக. நா எதுக்குப் பயப்படணும்? உங்க அய்யா ஏந்தலையைச் சீவியிருவாரோ? பேசுவேன். இரு பிறவிக்குக் கூட உள்ளுக்குள்ளே ஆசையிருக்கும். ஆசையில்லேன்னு நீ சொன்னா... அது பொய்யில்லியா?”

“ஆசை போற பாதையிலே யெல்லாம் போயிட முடியுமா? நமக்குன்னு மானம் மரியாதை வேண்டாம்? ஒழுக்கம் வேண்டாம்? ஒரு வரைமுறை வேண்டாம்?

வாய்க்காலுக்குக் கட்டுப்பட்டுப் போற தண்ணிதான், வெள்ளாமைக்கு ஆகும்டி, ஞாபகம் வைச்சுக்க. கரையை உடைச்சுட்டுப் பாயுற தண்ணி நாசமாய்ப் போகும். நாசத்தைத்தான் உண்டுபண்ணும். தெரியுமாடி?"

"வாடியம்மா... அவ்வைக் கெழவி. பொத்திக்கோடி, ஒம் போதனையை..."

"நா ஒங்கிட்டேப் போயி பேசுதேன் பாரு... ச்சே!"

"அடிச்சுக்கோ செருப்பாலே. வேண்டாம்னா நா சொன்னேன்?"

"ச்சீய்... போடி."

வண்டிப் பாதையில் யாரோ பின்னால் வருகிற அரவம். சட்டென்று வாயை நிறுத்தினர், இருவரும். திரும்பிப் பார்த்தனர். சற்றுத் தள்ளி சைக்கிளில் வந்து கொண்டிருக்கும் சங்கையா. நல்ல சிவந்த ஆள். கல்யாணமாகி ரெண்டு பிள்ளைகள். தாறுமாறானவன்.

கல்யாணத்துக்கு முன்னாலேயே ஒரு வயது முத்துன பெண்ணுடன் சிநேகிதம். ஊரறிந்த ரகசியம்.

மன உறுத்தல் இல்லாமலேயே சம்பிரதாயப்படி வேறொரு பெண்ணை மணந்து கொண்டான், குடும்பத்துச் சொல்லை மீறாமல்.

இப்போதும் அவ்வப்போது வேலி தாண்டுவான். ஊர் சுற்றுவான். பெண்டுகள் பின்னால் பல்லையிளித்துக் கொண்டு திரிவான்.

முத்துலட்சுமியை முன்னால் விட்டு, பின்னால் தொடர்ந்தாள் பொறுகொடி. சைக்கிளில் குனிந்து குனிந்து மிதித்தவாறே 'சைடு' பார்வை பார்த்தான், விலகுகிற சாக்கில்.

பொற்கொடியின் முகத்தில் மோதிய பார்வை, சட்டென்று மரியாதையுடன் விலகிக்கொண்டது. முத்து லட்சுமியின் முகத்தில் மோதி நின்ற பார்வை, ஆழச் சொருகிய பார்வை. பீடி குடித்து கறுத்த உதட்டில், ஒரு புன்னகைக் கீறல். ரகசிய மின்னல்.

விலகிப் போய்விட்டான். போன பின்னும் திரும்பித் திரும்பிப் பார்க்கிற அவன்.

தலை குனிந்து பின்னால் நடந்த பொற்கொடிக்குள் ஒருவிதமான குறுகுறுப்பு. முத்துலட்சுமியும் நிமிர்ந்து அவனைப் பார்ப்பதாக ஓர் உணர்வு. அவளது முதுகின் அசைவிலேயே, நுட்பமாய் கண்டுபிடித்துவிட்ட பொற் கொடியின் பெண் மனம்.

முத்துலட்சுமி ஒரு செருமல் செருமினாள். இயல்பான செருமல் போன்ற வேஷம் பொருந்தியிருந்தது. ஆனால் இது வேஷம்தான், இயல்பான செருமலல்ல என்று பொற்கொடியின் மனசுக்குள் ஒரு வினோத நினைப்பு.

இந்தச் செருமல்... ஒரு பாஷையோ, ஜாடையோ? இந்தப் பாஷையில் அவள் என்ன சொல்கிறாள். 'தயார்' என்றா? 'சனியன் மாதிரி பொற்கொடி வருகிறாள், இன்றைக்கு வேண்டாம்' என்றா? அந்தச் செருமலுக்கு என்ன அர்த்தம்? என்ன குறியீடு?

பொற்கொடியின் மன ஓட்டம் அவளுக்கே அசிங்க மாகத் தோன்றியது. 'ஏன்? நம்ம மனசு இப்படிப் போகுது?' அவள் சாதாரணமாகச் செருமிய செருமலுக்கு நாமாக ஏன் அர்த்தம் தந்து பார்க்க வேண்டும்? நம்ம மனசுலே உள்ள அழுக்குதான்... இப்படி நெனைப்பாக வருதா? ச்சே!'

அவளுள் குறுக்கும் நெடுக்குமாக மோதி விலகி யோடுகிற நினைவுகள்...

புஞ்சைகள் முடிந்த இடத்தில் கரிசல் காடுகள். சிவப்புச் சோள நாற்றுகள் ஆள் உயரத்திற்கு அடர்த்தி

யாக... உள்ளே போய் ஒரு கொலையே செய்தாலும் வெளியே தெரியாது. அத்தனை அடர்த்தி. கம்புப்பயிர்கள். மஞ்சணத்தி மரங்கள். குடைபிடித்து கன்னங்கரேலென்று நிற்கிற கருவேல மரங்கள். பருத்திச் செடிகள். உளுந்தஞ்செடிகள். எள் பயிர்கள்...

இங்குதான் புல் பார்க்க வேண்டும். இருவரும் வேறு வேறு தோட்டத்திற்குள் போக வேண்டும். கூப்பிட்ட சத்தம் கேட்காத அளவில் பக்கத்துத் தோட்டங்கள்.

"சரிடி... நீ இந்தப் புஞ்சையிலே புல்லுச் செதுக்கு. நா அந்தப் புஞ்சைக்குப் போறேன்..."

"எதுலே? இந்தப் புஞ்சையிலா?"

"இல்லே... அதுக்கும் தாண்டி. அந்த மஞ்சணத்தி மரம் நிக்கே... அங்கே..."

"சரி..." என்ற பொற்கொடி என்ன நினைத் தாளோ...கடந்து போன முத்துலட்சுமியை எச்சரிக்கை யோடு சொன்னாள்:

"அடியே... முத்து, பேச்சு பேச்சோடயே யிருக்கட்டும். காரியமாயிடக் கூடாது. கேவலக் கூத்தாயிப் போகும்..."

திரும்பிப் பார்த்துச் சிரித்தாள். முன்னத்திப் பற்க ளோடு வேறு பற்களும் வெளித் தெரிய... அவள் முகக் கறுப்பு இன்னும் அடர்த்தியாகத் தோன்றியது.

"குரைக்கிற நாய் கடிக்காது. ஊமைதான் ஊரைக் கெடுக்கும்."

அவள் சொன்ன சொலவடையில் அர்த்தம் இருந்தது. நியாயம் இருந்தது. எல்லாம் இருந்தது. கூடவே ஒரு குதர்க்கமுமிருந்தது. 'நீதாண்டி அப்படி' என்கிற குற்றச் சாட்டும் இருந்தது.

பொற்கொடிக்கு ஒரு மனசாகவில்லை. பெருமூச்சோடு பொழுதுக் காலைப் பார்த்தாள். சூரியன் மேற்குத் தொடர்ச்சி மலையின் முதுகை முத்தமிட யத்தனித்துக் கொண்டிருந்தது.

ஆயாசப் பெருமூச்சோடு புஞ்சைக்குள் கால் வைத்தாள். புல் வஞ்சகமில்லாமல் வளர்ந்து கிடந்தது, கரிசல் மண்ணின் தாய்மனசைப் போல.

கடாப்பெட்டியை கீழே வைத்துவிட்டு பண்ணரிவாளால் புல்லையறுத்தாள். 'சரக், சரக், சரக்...' அறுக்க அறுக்க ஆசையாக இருந்தது. புல் மளமளவென்று சரிந்தது. பசும்புல். தொடத் தொட ஆசை. ஆவிப்பிடித்தால் உள்ளங்கைக்குச் சுகமாக இருந்தது. புல் சாய்கிற மகிழ்ச்சியில் முத்துலட்சுமி பற்றிய பயம், பொழுதுக் காலைப் போல மறைந்தது.

நாளை மறுபடியும் உதிக்குமோ....

முத்துலட்சுமியின் பயமற்ற சுபாவம். மோகத் தாகம். எந்தக் குழியில் போய் விழுவாளோ என்கிற பயம் பொற்கொடிக்குள்.

## 2

**மா**ர்கழி கடைசி. இன்னும் முழுசாக விடியவில்லை. தளர்ச்சி காணாத கிழட்டு இருட்டு. வேதக்கோயிலில் மைக்செட் உயிர் பெற்று... கிராமத்தை உசுப்பியது. "உன்னதமான வல்லமையை—இறைவா எனக்குத் தாரும்" என்ற பிச்சைக் குரல் இந்தியத்தனமில்லாத இசையில் சிணுங்கியது.

பசுமாடுகள், எருமைகள் தெருக்களில். பால் சொஸைட்டி நோக்கி 'தக், தக்'கென்று நடக்கும் அதுகளின் பின்னால் சட்டியும், கன்றுக்குட்டியுமாய் ஆட்கள்.

முற்றங்களில் சாணிப் பால் தெளிப்பு. கல் மாவில் கலர் கலராக—ஓவியம் ஓவியமாக—கோலம் வரைகிற சிறுமிகள்.

மார்கழிக் குணத்தை மாற்றியிருந்தது மேக மூட்டம். பனியைக் கீழே விழவிடாமல் முதுகுகளில் ஏந்திக் கொண்ட சாரல் மேக அடர்த்தி.

வேலை ஜோலி பற்றிய சள்ளைப் பிடித்த நினைப்பு களோடு முறித்துக்கொடுத்துக் கொண்டிருந்தது, மொத்தக் கிராமமும்.

டீக்கடையில் 'ஜே, ஜே' என்று ஜனம். வெள்ளாமை விளைச்சல் பற்றிய பேச்சுகள். பருத்தியில் வந்து விழுந்திருக்கிற சாகா வரம் பெற்ற காய்ப்புழு—அடித்த மருந்துகளையெல்லாம் உறிஞ்சு கொழுக்கிற அந்தப் புழுவின் கொள்ளை வேட்டை. பூ, பிஞ்சை உதிர்க்கிற கொலை பாதகம்.

"புழு சாகாது. மருந்தைக் குடிச்சு சம்சாரி சாக வேண்டியதுதான்" என்று சலிப்புடன் ஒருவர் சொல்ல... அந்தச் சோகத்தையும் சிரிப்பாக மாற்றிக் கொள்கிற கிராமத்து ஜனங்கள்.

"ஆந்திராவிலே... நெசமாவே ஒம்பது பருத்தி சம்சாரி கள் மருந்தைக் குடிச்சு செத்துப் போய்ட்டாக... தெரியுமா?"

"அடக்கொடுமையே... நெசமாவா?"

"பொய் சொன்னா... கிரீடமா கெடைக்கப் போவுது?"

"பரிதாபம்தான்."

"வேற என்ன செய்ய? வருஷா வருஷம் வெளைச்சல் நாசமாகுது. உப்பு உர மருந்துச் செலவு பூராவும், கடனா வட்டியா வளருது. சாவைத் தவிர வேற வழி?"

"நல்லதங்காக் கதைதான்... சம்சாரி பொழைப்பு."

"ஏன்...? சம்சாரி, கண்ணகியா மாறுனா என்ன?"

"எப்படி மாற? அதுக்கு துணிச்சல் வேணுமே."

"ஒன்னு சேர்ந்தா... சம்சாரியும் கண்ணகியா மாற முடியும்."

"இவன் எங்கே ஒன்னு சேர்றது? பொழிச்சண்டை யிலேயே மண்டையை ஒடைச்சிக்கிடுவான். சாதிச் சண்டையிலே மோதிக்கிடுவான். எங்கபோய் ஒன்னு சேர?"

"சம்சாரிகளை காலம் காலமா ஒன்னுசேர விடாம துண்டு துண்டாக்கி வச்சிருக்கிறதே... சாதிச் சண்டைக தான்."

"சாதியில்லாம என்ன நடக்கும்? கல்யாணம், கருமாதின்னா... சாதிதானே வேண்டியிருக்கு?"

"அதுக்குமட்டும் சாதியை வைச்சுக்கிடணும். மத்ததுக் கெல்லாம் சாதி என்னத்துக்கு? சகிப்புத்தன்மையோட புத்தியோட பொழைச்சா, எதுக்கு சாதிச் சண்டை வருது?"

"சாதிச் சண்டைக்கு காரணகாரியமா வேண்டி யிருக்கு? 'சாணாப் பயலே'ன்று நா சொல்லிட்டா... நீ பொசுக்குன்னு கம்பு தூக்கிருவே. நீ 'மறப்பயலே'ன்று சொல்லிட்டா... நா சடக்குன்னு அருவாளைத் தூக்கிரு வேன். பெறகு... அங்கே புத்திக்கு என்ன வேலை? பொறுமைக்கென்ன ஜோலி....?"

"நெசம்தான்... சாதியை மறந்துட்டு சம்சாரிங்குற நெனைப்புலே என்னைக்கு ஒன்னு சேர்றானோ...

[illegible]னைக்குத்தான் சம்சாரி பொழைப்பு விடியப் போகுது. சம்சாரிக்கு பொழைப்பு விடிஞ்சாத்தான்... நாட்டுப் பொழைப்பும் விடியும்.”

“தெனம் தெனம் விடியும்... நமக்கு எப்பவும் விடியப் போறதுல்லே... ஏய்... ஒரு டீ போடப்பா.”

இப்படி நாலா திசைக்கு நகர்ந்து ஓடிப் பாய்ந்து முடங்குகிற பேச்சு. அலைபாய்ந்து கரை நனைக்கிற பேச்சுகள்.

டீக்கடை முன் பக்கத்தில் உட்காந்திருந்த ராமையாத் தாத்தா, அந்தக் கால விவசாயத்தைப்பற்றிக் கதை சொன்னார். குதிரைவாலி, காணப்பயிறு விளைய வைத்த காலம். ஆற்றுத் தண்ணீரில் ஐயிரைமீனைப் பிடித்துத் தின்ற காலம். காலரா வந்து கூட்டம் கூட்டமாக செத்த காலம்...

என்று விலாவரியாகச் சொல்லிவந்த ராமையாத் தாத்தா ‘தீ வைக்கும் கலை’ பற்றி ரொம்பச் சுவாரஸ்ய மாகச் சொன்னார். ரசனையோடு பேசிக்கொண்டிருந்தார்.

தீக் கங்கை அள்ளி ஒரு துணியில் வைத்து பொட்டலம் கட்டி, பழைய துணிகளால் சுற்றிச் சுற்றி, சாக்குத் துணியாலும் சுற்றி பெரும் பந்தாக்கி, வைக்கோல் படப்புக்குள் சொருகி வைத்துவிட்டுப் போய்விட்டால்.... போனவன் பதினைந்து மைல் தூரம் நடந்துபோன பிறகுதான், தீ பிடிக்குமாம்.

தீ வைத்தவனைப் பிடிக்கவே முடியாதாம்... சந்தேகப் படக்கூட வழி இருக்காதாம்.

சாதிச் சண்டைகளில் வெந்து முடிந்த வைக்கோற் படப்புகளைப்பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார், கதை கதையாக.

டீக்கடைச் சுவரில் சாய்ந்துகிடந்த வேல்சாமி இதையெல்லாம் கவனித்தும் கவனிக்கமாலும்... தன் நினைவுகளுக்குள் மிதந்தான்.

'ஒரு காகிதம் எழுதணும், யாரை எழுதச் சொல்றது? மூர்த்தி தம்பி எழுதித் தருவான். அவன் திருச்சிக்குப் போய்ட்டான். யாரை எழுதச் சொல்றது?'

நினைவு அங்கேயே நொண்டியடித்தது...

...வேல்சாமி அப்போ சின்னப்பையன். ஆறு வயசு இருக்கும். விரலைச் சூப்பிக்கொண்டே அம்மா முந்தானையைப் பிடித்துக்கொண்டே அலைவான்.

'பள்ளிக்கோடம் போடா' என்றால்... 'ஆமா... போ.... நா போவமாத்தேன்...' என்று சிணுங்குவான். 'சின்னப் பிள்ளை, சிணுங்கல்தான். போகப் போகச் சரிபண்ணி பள்ளிக்கு அனுப்பிவிடலாம்' என்ற பெற்றவர்களின் நம்பிக்கையில் மண்ணையள்ளிப் போட்டான் வேல்சாமி.

ஒரேயடியாக சாதித்து விட்டான்.

அப்போதெல்லாம்... பத்து மணிக்குமேல் வாத்தியார் பிரம்புக்குச்சியோடு கிராமத்துச் சந்து பொந்துகளில் தேடித் திரிவார்—'தப்பிப்போன ஆடு கண்ணில் தட்டுப் படுதா' என்ற தேடல் மனோபாவத்தோடு.

பள்ளிக்கூட வயசு வந்தும் பள்ளிக்கு வராமல் விளையாடிக்கொண்டு திரிகிற பயல்கள், வாத்தியாரைக் கண்டவுடன் 'அர்ச்சுனன் பேர் பத்து' என்று அலறியடித்துக்கொண்டு ஓடுவான்கள்.

வேல்சாமியும் அப்படித்தான். எங்காவது போய் பம்மிப் பதுங்கிக் கொள்வான்.

சிக்கிய பையன்களை பிரம்புக்குச்சியைக் காட்டி அதட்டுவார் வாத்தியார். அப்புறமும் நழுவ எத்தனித்தால்...

நாலு பையன்கள் காலையும் கையையும் பிடித்துக் கொண்டு தூக்கிச் செல்வார்கள், பன்றியைத் தூக்கிக் கொண்டு போகிற மாதிரி.

பிடிபட்ட பையன் உலக்கையடி வாங்கிய பன்றியாக வீறிடுவான்.

ஒரு நாள்—

வாத்தியார், வேல்சாமியை குறி வைத்துத் தேட ஆரம்பித்துவிட்டார். அந்தத் தாக்கலும் வந்து சேர்ந்து விட்டது இவனுக்கு. ‘எங்க ஓடிப் போய் தப்பிக்கிறது’ என்று தெரியாமல் தத்தளித்தான், வலைக்குள் விழுந்த மைனா மாதிரி. பதற்றத்தில் ஒன்றும் ஓடவில்லை. கையும் காலும் உதறலெடுத்தது. வழி ஒன்றும் திகையவில்லை. அவசரத்தில் அகப்பட மறுக்கிற பாதை...

வாத்தியார் தெருமுனையில் தலையைக் காட்டி விட்டார்.

“என்ன செய்ய?”

பதற்றப் பரபரப்பில் ஒன்றும் ஓடாமல், தண்ணீர் தொட்டிக்குள் விழுந்த நரிமாதிரி...தொழுவத்திற்குள் நுழைந்து மூங்கில் கதவைச் சாத்திக் கொண்டான்.

இருட்டு. கோழிகள் அடைகிற இடம். கோழிச்செல் (கோழிகளுக்குரிய பேன். பேனைவிட மிகச்சிறிய வெள்ளைப்பிராணி) வந்து அப்பிக்கொண்டது. செவி இடுக்குகளில்— கம்மங்கூட்டில்— நடுமுதுகில் ஊர்ந்து போகிற செல்களால் வருகிற அரிப்பு. தாளமுடியாத அரிப்பு. கூச்சமான அரிப்பு.

போதாக்குறைக்கு உடைந்த ஓட்டு மணலில் முட்டைகளின் மேல் படுத்துக் கிடந்த அடைக்கோழி,

கள்ளனைக் கண்ட நாயைப் போல பயத்தோடு 'கோ், கோ்'ரென்று அலறுகிறது.

'காட்டிக் கொடுத்து விடுமோ' என்று வேல்சாமி பதறிய பதற்றத்தில், டவுசரில் ஒன்னுக்கே இருந்து விட்டான்...

நல்லவேளை... வாத்தியார் தொழுவத்தைச் சந்தேகிக்க வில்லை. கவனிக்காமல் ஏமாந்து போனார்.

வேல்சாமிக்கு அன்றைக்குச் சந்தோஷம் தாங்க வில்லை. அடைபடாத சந்தோஷம். தளும்பித் தெறித்த மகிழ்ச்சித் துளிகள்.

ஒரே ஓட்டமாய் ஓடினான். கமலை இறைத்துக் கொண்டிருந்த கிணற்று வாய்க்காலில் குளித்து, செல் அரிப்பிலிருந்து விடுபட்டு... ரொம்பக் குதூகலமாக விளையாடப் போனான்...

அன்றைக்கு வாத்தியாரிடமிருந்து தப்பித்ததற்காக குதூகலித்த வேல்சாமி, இன்றைக்கு டீக்கடையிலிருந்து வருத்தப்பட்டான். 'அன்றைக்கு நான் தோற்றிருந்தால்... வாத்தியார் கையில் சிக்கியிருந்தால்... நல்லாயிருந் துருக்குமே' என்று மனசுக்குள் வருந்துகிறான், இப்போது.

ஒரு காகிதம் எழுதக்கூட முடியாமல், கண்ணிருந்தும் குருடனாக தவிக்க வேண்டியிருக்கிறதே...

சம்சாரிக சாதிச் சண்டைகளிலேயே வாழ்க்கையை தொலைப்பதற்கும்கூட பெரிதும் காரணம்... எழுத்து வாசனை இல்லாமல் இருப்பதுதான்.

கல்வி கெடைச்சிருந்தா... அந்த வெளிச்சத்துலே தொழிலைப் புரிஞ்சிக்கிடலாம். தொழில் நசிவுக்குக் காரணமான அரசாங்கத்தைப் புரிஞ்சிக்கிடலாம். அரசிய லைப் புரிஞ்சிக்கிடலாம். நிலம் தனியார் கைகளில் குவிஞ்சு

இருக்கிற சமுதாய அமைப்பைப் புரிஞ்சிக்கிடலாம். இதை யெல்லாம் மாத்திச் சரிபண்ணுகிற பாதையையும் புரிஞ்சுக் கிடலாம். புரிஞ்சுக்கிட்டா... சாதிச் சண்டைக்கு இடமே யில்லாமப் போயிருமே...

இப்படித்தான், ஒவ்வொரு காகிதத்திலும் விலாவரி யாக எழுதுகிறான், சிந்தாமணி. அவன் தங்கமானவன். நாடாக்கமார்தான். ஏவாரிக் குணமில்லாத மனசுக்காரன். கணக்கு வழக்கு பார்க்காமல், நட்பை மதிக்கிறவன். சிநேகிதக்காரனுக்காக உயிரைக்கூட ஒப்படைக்கத் தயங்கமாட்டான். மனிதன் என்றால் அவன்தான் மனிதன். மனிதக் குணம் மட்டுமே ததும்பி நிற்கிற முழு மனிதன்.

இதோ... பட்டிகாட்டுக்குப் பொருந்தாத ஆடம்பரமாக தான் போட்டிருக்கிற சிவப்புக்கலர் ஸ்வெட்டர், அவன் கொடுத்ததுதான். உள்ளே போட்டிருக்கிற பட்டாளத்துப் பனியன், அவன் தந்ததுதான்.

பட்டாளத்துலேயிருந்து லீவுக்கு வர்றபோதெல்லாம் ஏதாச்சும் ஒரு பொருள் தராமல் போகவே மாட்டான்.

இப்போது.... அவனுக்குத்தான் காகிதம் எழுத வேண்டும். எப்படி எழுத? யாரை எழுதச் சொல்ல?...

இந்த யோசனையே அவனுள் கோழிச் செல்லாக அரித்தது. நமைச்சலெடுக்கிற அரிப்பு.

சாயங்காலம் பாத்துக்கிடலாம். சத்துணவு ராமசாமி கிட்டே சொல்லி எழுதச் சொல்லலாம். பெரிய படிப்பு படிச்சவர். ஹைஸ்கூல் வாத்தியாராகிற அளவுக்கு ஒசந்த படிப்பு.

அவரைத்தான் பிடிக்கணும். அவருதான் சரியான ஆளு.

மூர்த்தி மாதிரியே அவரும் வெவரமான ஆளு.

வெளியே வந்தான். இருட்டைப் பலவீனப்படுத்துகிற மேகத்து வெளிச்சம், மழலைத்தனமாய் தவழ்ந்து படர்ந்தது. ஓடைக்குப் போய்விட்டு வந்தான். வேலி விறகு வெட்டப் போகணும். கூலி முப்பது ரூபாய்.

பல்லைத் தேய்த்துக் கஞ்சியைக் குடித்தான். ரெண்டு லிட்டர் பிளாஸ்டிக் கேனில் தண்ணீரைப் பிடித்துக் கொண்டான். மதியச்சோறு வைத்திருந்த தூக்கு வாளியை எடுத்துக்கொண்டான். பட்டாளத்துத் துணியில் தைத்த டவுசர். பட்டாளத்துப் பனியன், பட்டாளத்துப் பூட்ஸ். தொரட்டி, வெட்டரிவாள், குத்துக்கம்பி எல்லாம் எடுத்துக் கொண்டான்.

பட்டாளத்து அய்ட்டமெல்லாம் பட்டாளத்துச் சிநேகிதன் சிந்தாமணியின் நன்கொடை. அன்பளிப்பு. நட்பில் கரைந்த மனசின் அடையாளம். சாதி உணர்வைக் கடந்த நட்பு.

பாழடைந்த பெருமாள் கோயில், ஆற்றின் கரையில். நீரில்லாத ஆறு. மணற் கொள்ளைக்கு ஆளாகி... விதவையாகிப் போன மலட்டு ஆறு. அதன் கரையில் கோயில். வெள்ளையடிக்காத கோயில். கன்னங்கரே லென்று நரைத்துப் போன கிழட்டுக் கோயில். சாமி சிலையில்லாத கோயில்.

இந்தக் கிராமத்தில் கால் பரப்பிய கறுப்புச் சட்டை இயக்கத்தின் துடியான வாலிபர்கள்... 'சமூகத்தின் முழு எதிரியே சாமி சிலைகள்தான்' என்ற திசை நழுவிய கோபத்தில்... நடத்திய தாக்குதலில் சிதிலமாகிப்போன பெருமாள் கோயில். கோயிலைச் சுற்றிலும் வேலி மரங் களின் அடர்த்தி, புதரைப்போல. கொப்பும் கொழையுமாக அடர்த்தி.

அதைத்தான் வெட்ட வந்திருக்கிறான், வேல்சாமி. இவனுக்குப் பெயரே, விறகு வெட்டி வேல்சாமிதான். இவனைக் கண்டால்... வேலிமரம் பட்சியாகப் பயப்படும். பதறி நடுங்கும்.

மஞ்சணத்தி மரத்தில் சோற்றுச்சட்டியை மாட்டினான். நிழலில் கேனை வைத்தான். பூட்ஸ் கால்களோடு வேலி முட்களை நறநறவென்று மிதித்துக்கொண்டு புதருக்குள் நுழைந்தான். தொரட்டியைப் போட்டு முட்கிளைகளையெல்லாம் இழுத்து ஒதுக்கினான். கனத்த அரிவாளையெடுத்தான். கட்டைகளில் ஓங்கிச் சாயலாகப் போட்டான். அல்வாக் கட்டிக்குள் பாய்ந்த கத்தியாக 'சதக்'கென்று விழுந்தது.

பழுத்த வேலி இலைகள் அவன்மேல் விழுந்து வியர்வை நசநசப்பில் ஒட்டிக்கொண்டன. புள்ளி புள்ளியாக. விறகு மளமளவென்று சாய்ந்தது, குவிந்தது. புதர் இருட்டுக்குள் வெயிலின் வெளிச்சம் சுதந்திரமாய் முன்னேறியது.

அவனுக்குள் சிந்தாமணி. தாழையா நாடாரின் ஒன்றுவிட்ட சகோதரியின் மகன். பட்டாளத்தில் இருப்பவன். இன்னும் கல்யாணமாகவில்லை.

ராணுவப்பணி முடிந்த பிறகுதான் கல்யாணம் என்ற வைராக்கியத்தில் இருப்பவன்.

அவனுக்குக் காகிதம் எழுதவேண்டும். ராமசாமியைப் பார்த்து எழுதச் சொல்லணும். முத்துலட்சுமி விஷயத்தைச் சொல்லணும்.

எப்படிச் சொல்ல? அந்தரங்கமான விஷயத்தை அந்நியனான ராமசாமியிடம் எப்படிச் சொல்ல?

ம்ஹூம்... சொல்லக்கூடாது. அது நல்லதுல்லே. ஒரு பெண்ணோட— வாழவேண்டிய பெண்ணோட— அந்த

ரங்கத்தைத் தண்டோரா போடுறதுவும், பச்சைப் புள்ளை கழுத்தை நெரித்துக் கொல்வதும் ஒன்னுதான். பாவ காரியம்.

வரட்டும். லீவுக்கு வருகிறபோது நேரில் பேசிக் கொள்ளலாம். அதற்குள் கை மீறிப் போய்விட்டால்... காரியம் கெட்டுப் போய்விட்டால்... சிந்தாமணி ஒருவனால்தான் இதைத் தடுக்க முடியும்.

அவனுள் நடுக்கம். ஒரு குழப்பம்.

நம்ம சாதிக்காரப்பய சங்கையா... சாதிச் சண்டையாக வெடிச்சிட்டா...?

அவனுக்குள் எறும்புகள் ஊர்ந்தன.

## 3

சாப்பிட்டு முடித்து கை கழுவினார், தாழையா. ஈரக் கையாலேயே மீசையையும் நீவி விட்டுக்கொண்டார். பருக்கை இணுக்குகளை நீவுதலில் சுத்தம் பண்ணினார்.

வட்டிலை எடுத்துக்கொண்டு வெளியே போனாள், பொற்கொடி.

உட்கார்ந்த இடத்தில் கிடந்த மேல்துண்டை எடுத்து ஈரக்கையையும் மீசையையும் துடைத்துக் கொண்டார்.

குலைந்து போயிருந்த நரைத்த மீசையை கெழுறு மீனை தொடுகிற ஜாக்கிரதையுணர்வோடு தொட்டு... நீவி... முறுக்கிவிட்டுக் கொண்டார். விழிகளை அடியில் இறக்கி, மீசையின் மேல் நுனிகளை திருப்தியுடன் பார்த்துக் கொண்டார்.

*மீசை அவருக்கு இஷ்டமான விஷயம். ரொம்பப் பிடிக்கும். கள்ளப் பெண்டாட்டி மாதிரி... அதன்மேல் ஒரு மோகம்.*

*செம்பகம் முன்பே சொல்வாள். மீசையைப் பற்றி ரொம்ப இளப்பமாகச் சொல்வாள்.*

*"ஆனா... வீமன் தடியன் கணக்கா இருக்கீராக்கும்? கைத் தண்டியிலே (கை கனத்தில்) மீசை வைச்சு... செந்தட்டிவீரன் சாமி கணக்கா ஓங்குதாங்கா இருக? சீத்தைக்குஞ்சு கணக்கா இருக்கீரு. இதுலே முறுக்கு மீசை வேணுமாக்கும்?"*

*ஆசைப் பெண்டாட்டியை மோகத்துடன் தழுவு வதைப் போன்ற போதைப் பெருமிதத்துடன் பதனமாய்—இதமாய்—மீசையைத் தடவிக் கொள்வார். "மீசை இருந்தா... ஒன்னை என்ன செய்யுது? மீசைதான் ஆம்பளைக்கு அழகு."*

*"அதுக்கும் ஒரு பொருத்தம் வேண்டாமா?"*

*"ஆளு ஒல்லியாயிருந்தாலும்... மீசையை முறுக்கி விட்டுக்கிட்டா... மனசுக்குள்ளே ஒரு வீரம் வரும். தைர்யம் வரும். மீசையைப் பார்த்தா... எதிரே நின்னு பேசுறவனுக்கும் ஒரு மரியாதை வரும். அதுலேயே ஏங் காரியத்தை நா சாதிச்சிக்கிடுவேன். தெரியுமா?"*

*"ஆமா... இந்த வாய்ப் பேச்சுக்கு ஒன்னும் கொறைச்சலில்லே..."*

*"வாயுள்ள புள்ளைதான் பொழைக்கும்னு சொல வடை. அது ஒனக்குத் தெரியுமா?"*

*"அதான்... ஊருக்குள்ளே எல்லாரும் வாயடி நாடா ருங்காக."*

"சொல்லட்டுமே... என் சாமர்த்தியத்துலே சம்பாதிச்ச பேருதானே, அது? அதுவும் ஒரு பெருமைதானே?"

அந்தப் பெருமிதம் இப்போதும் உண்டு, அவருக்கு. நரைத்து செம்பட்டை பாய்ந்துவிட்டாலும், மீசையை முறுக்கிவிட்டுக் கொள்வார். சவரம் செய்கிற நாவிதன்கூட அவர் மீசைக்குத்தான் ரொம்ப நேரம் எடுத்துக் கொள்வான்.

மீசை மேல் அப்படியோர் மயக்கம் அவருக்கு.

மேல் உதட்டில் ஒட்டிக் கிச்சலம் காட்டிய ரோமங் களையெல்லாம் விரலால் தொட்டு எடுத்து மீசையுடன் சேர்த்துக் கோதிவிட்டுக் கொண்டே செம்பகம் படுத்திருந்த கட்டில் பக்கமாய் வந்தார்.

அவளும் அப்போதுதான் காலைக் கஞ்சியைக் குடித் திருந்தாள். உப்பில்லாத சுடு அன்னக்கஞ்சி. அத்துடன் சுடவைத்த பசும்பால். சுவாரில் தலைவைத்துச் சாய்ந்து கட்டிலில் உட்கார்ந்திருந்தாள். முகத்தில் ஒரு தெளிர்ச்சி. எலும்பும் தோலுமாகத் துவண்டிருந்த அந்த நோயாளியின் முகத்தில் ஓர் உயிர்க்களை. ஈரல்குலையில் போய் விழுந்த பருக்கைகளினால் வந்த மலர்ச்சி.

கட்டிலைச் சுற்றிலும் தரை சுத்தமாகக் கழுவி விடப் பட்டிருந்தது. செங்கல் பாவிய தரை. சிரட்டையில் புது மணல், தூசுகளுடன்.

"சரி... மாத்திரையும் டானிக்கும் சாப்ட்டியா?"

"இல்லே."

"சாப்டுதீயா? எடுத்துத் தரட்டா?"

"வேண்டாம். பொற்கொடி இருக்காள்லே?"

அந்நேரம்—

வீட்டு முற்றத்திலிருந்து பொற்கொடி கூப்பிடுகிற குரல்.

"....ய்யா...."

"என்னம்மா."

"உங்களைத் தேடிக்கிட்டு வந்துருக்காக."

"யாரு?"

"வந்து பாருங்க...ய்யா."

"மாமா..." உள்ளூர் இளவட்டக் குரல்."

"என்ன?"

"உங்களைத் தேடி அசலூருக்காரரு வந்துருக்காரு."

வெளியே வந்தார், தாழையா. வாசலுக்கு வந்தவுடன் தாழையா முகத்தில் பளிச்சென்று ஒரு வெளிச்சம். ஒடுங்கிய சின்ன முகத்தில் மின்னுகிற மகிழ்ச்சி. சிரிப்பில் உதட்டுடன் சேர்ந்து விரிந்து நீள்கிற மீசை.

"அடடே... சன்னாசித் தேவரா? வாருமய்யா...வாரும். சொன்னபடியே வந்துட்டீரே..."

"ஆமாய்யா... ஒம்ம வீட்டைக் கண்டுபிடிக்குறதுக் குள்ளே பெரும்பாடாப் போச்சு..."

"என்னத்துக்கு? எம்பேரைச் சொன்னாப் போதுமே... வவுத்துக்குள்ளே கெடக்குற புள்ளைகூட வழிகாட்டுமே."

"சிக்கலே... அதுதானே...ய்யா."

"என்ன சிக்கல்...?"

இனி நடக்கப் போகிற உரையாடலை முன்னுணர்ந்து கொண்ட உள்ளூர் இளவட்டம், தர்மசங்கடமாக நெளிந் தான். நழுவிக்கொள்ள பரபரத்தான்.

"சரி... நீ போ... மாப்ளே. சரி... இப்பச் சொல்லும், என்ன சிக்கல்?"

“ஊர் மடத்துலே ஆளுகளா இருந்தாக. ஒம்ம பேரைச் சொல்லிக் கேட்டேன், ஒருத்தருக்கும் தெரியலே.

அப்படியோர் ஆளே இந்த ஊர்லே கெடையாதுன்னு ஒரு பையன் அடிச்சுச் சொல்லிட்டான். நா தெகைச்சுப் போயிட்டேன்...”

“ம்... அப்புறம்?”

“பெறகென்ன? ஒம்ம அடையாளத்தை மெல்லச் சொன்னேன். அப்புறம் ஒரு பெரியாளுதான் ஒம்ம வீட்டைக் காட்டச் சொன்னாரு.”

“ம்... அப்படியா...?”

“ஊர் பூராவும் வாயடி நாடார்னாத்தான் தெரியுது. தாழையா நாடார்னா... ஒருத்தருக்கும் தெரியலியே...”

“அதுவா? ஆமாமாம், அது அப்படித்தான். வாயடின்னுதான் ஊர் பூராவும் கூப்புடுவாக. அது நமக்குப் பட்டப் பேரு. படடப்பேரு துலங்கிருச்சு. சொந்தப்பேரு மங்கிருச்சு...”

“வாயடி நாடாருங்குறதுதான் ஒமக்குப் பொருத்தமான பேரு...”

தாழையா நாடார் அந்தப் பாராட்டில் கிறங்கிப் போனவராக மகிழ்ந்து போய்ச் சிரித்தார்.

“வாயடியிலேயே... எப்பேர்ப்பட்ட கொம்பாதி கொம்பனையும் அடிச்சுச் சாய்ச்சிருதீர்லே?”

“சரி... நம்ம பொழைப்பு தரகுப் பொழப்பு. வாய்தானே நமக்கு மூலதனம்? அதை வைச்சுத்தானே முழம் போடணும்?”

“அதுவும் ஞாயந்தான்...”

பேர் விஷயம் பேசிக்கொண்டிருக்கும் போதே ...மழையாவுக்குள் தாவுகிற நினைவோட்டம். தக்கையின் அசைவைக் கவனிக்கிற தூண்டில்காரனின் துல்லியத்தில், அவர் மனசு.

"சரி... வாசல்லே நின்னு பேசுனா... எப்படி? வீட்டுக் குள்ளே வாரீரா... வெளியே போவோமா?"

"போவோம்..."

"அப்ப நடையைப் பிடியும். சைக்கிள்லே வந்தீரா?"

"ஆமா. மடத்துக்கிட்டே நிப்பாட்டிட்டு வந்தேன்..."

"ம். என்னவிஷயமா வந்தீரு? காரியத்தைச் சொல்லும்."

"ஓமக்குத் தெரிஞ்சதுதானே? நா எதுக்கு வந்துருக் கேன்னு ஓமக்குத் தெரியும்லே?"

"அடச் சொல்லும், தேவரய்யா..."

"ஏதோ... ஒரு பசு கெடக்குன்னு சொன்னீர்லே?"

"ஆமாமா... நேத்துச் சொன்னேன்..."

"அது கெடக்குதா?"

"கெடக்கு, கெடக்கு..."

"போய்ப் பாப்பமா?"

"பாத்துட்டுப் போகவா... பத்திக்கிட்டுப் போகவா?"

"மாடு மனசுக்குப் பிடிச்சு... வெலை நெலவரமும் படிஞ்சு வந்துச்சுன்னா... பத்திக்கிட்டே போயிர வேண்டியதுதான்."

"மடியிலே கனமிருக்கா?"

"இருக்கு."

"அப்பச் சரி... தேவரய்யா, நீரு மடத்துலே சித்தே இரும். நா ஒரு நிமாண்டுலே வந்து சேருதேன்."

"ம்... ரொம்ப நேரமாகுமா?"

"ஆமா... கொஞ்ச நேரம் ஆகத்தான் செய்யும். காரியத்தை முடிக்கணும்லே?"

"நா... மடத்துலே இருக்கேன். சட்டுன்னு வந்து சேருமய்யா... வீட்லே வேலைசோலி கெடக்கு, தலைக்கு மேலே."

"மூடி முழிக்கும் முன்னாலே வாரேன்."

சன்னாசித் தேவர் மடத்துப் பக்கமாகப் போனார். ஆணிகள் அறைந்த தோல் செருப்பு 'சர்ரக்... சர்ரக்' என்று கர்ஜித்தது. நாலுமுழ வேட்டியை மடித்துக் கட்டியிருந்தார். மேலே ஷர்ட். அதுக்கு மேலே பச்சையும் சிவப்புமாகக் கட்டம் போட்ட துண்டு. தலையிலும் உடம்பிலும் குளுகுளுவென்று எண்ணெய் தேய்த்திருந்தார். வெள்ளி, செவ்வாய் பிள்ளையார் மாதிரி எண்ணெயில் நனைந்து மின்னினார்.

தாழையா, அவர் போவதைப் பார்த்துவிட்டுத் திரும்பினார். மனசு முழுக்க ஒரு துல்லியத்தில் குவிந்தது. அவருள் ரத்தம் பரபரத்தது. வீட்டுக்குள் பாய்ந்தார். சட்டையைத் தூக்கி மாட்டினார். கழுத்து வழியாக போடுகிற அரைக்கைச் சட்டை.

கழுத்துப்பட்டனை மாட்டிக்கொண்டு, துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு—

"சரி... செம்பு."

"போய்ட்டு வாங்க."

"மாத்திரையை சாப்புட்டுக்கோ. அயத்துராதே."

“..ஓட்டும்.”

“பொற்கொடி.”

“நா... பாத்துக்கிடுதேன்ய்யா...”

அப்பவும் அவருக்கு ஒரு மனசாகவில்லை. அத்தனை பரபரப்பிலும்... மனசு முழுக்க ‘செம்பு, செம்பு...’ என்று மருகித் தவித்தது. உயிரின் இழையாய் உணர்வைப் பிணைக்கும் ஆத்ம தோழியின் நினைவு.

செருப்பை மாட்டிக்கொண்டு வாசல்படியைத் தாண்டுவதற்குள், மூன்று தடவை திரும்பித் திரும்பிப் பார்த்தார். பார்வையின் மருகல். கண்களின் அசைவிலேயே செம்பகம் தெம்பு சொன்ன பிறகுதான், ஒரு மனசோடு படிதாண்டினார்.

எல்லாம்... தெருவுக்கு வரும் வரைக்கும்தான். தெருக் காற்று அவர்மீது பட்டவுடன்... தாழையா நாடார், வாயடி நாடாராகிவிட்டார். தொழிலைச் சுற்றி மட்டும் பின்னிப் பின்னி வலை செய்து, நெருங்கிக் குவிகிற மனசு. மனத் தீவிரம்.

கீழத்தெரு நோக்கி நடையை எட்டிப் போட்டார். இளமதிய வெயில், உறைக்காமல் அடித்தது. மார்கழி மாதத்து வெயில். பருவம் தப்பிய முறையில் மாரி மூலைக் காற்று வீசுகிறது.

வேட்டியைத் திரட்டி மடித்துக் கட்டிக்கொண்டார். துண்டை கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொண்டார். ‘விசுக், விசுக்’கென நடையை எட்டிப் போட்டார்.

முந்தா நாளே மாட்டை விலை பேசி முடித்து விட்டார், வாயடி. நல்ல இளம் பசு. சிவலை நிறம். நாட்டுச் சரக்கு. ரெண்டாம் ஈற்று ஈண்டிருக்கிறது. ஒரு மாதம் கூட

ஆகவில்லை. பால் மூன்று லிட்டருக்குக் குறையாது. நல்ல பரம்பரை. சைசான கொம்பு வரிசை.

வந்த வியாபாரிகள் எல்லாரும் 'ஆயிரத்தைந்நூறுக்குக் கீழே வெலை சொல்லு' என்று ஒரே பல்லவியைத்தான் பாடினார்கள். பசு வைத்திருக்கிற முனியசாமிக்கு பணத்துக்கு ரொம்ப அவசரம்.

எப்படியாவது உடனடியாக விலையாடியாகணும். வயிற்றுப் பசி. தீப் பசி. ஆனால் வியாபாரிகள் கேட்கிற விலை, அடிதண்டமாக இருக்கிறது. அடிமாட்டு விலையாய்... கொடுமை.

பணத்துக்கு அவசரம்தான். அதற்காக கொடுமையின் காலில் விழுந்து பணிய மனசில்லை, முனியசாமிக்கு.

வழியற்றுப் போன நிலையில்... வாயடியிடம் நம்பிக் கையோடு தஞ்சமடைந்தான். கெஞ்சிக் கூத்தாடி மருகித் தவித்தான்.

"என்னப்பா... செய்யணும்ங்கே?"

"துட்டுக்கு ரொம்ப அர்ஜென்ட், கழுத்தாம்பிடியான நெருக்கடி."

"அதுக்கு நா என்ன செய்ய?"

"நீங்கதான்... எப்படியாச்சும் ஒரு ஏற்பாடு பண்ணி யாகணும்."

"சரி. சொல்லிட்டேல்லே? ரெண்டு நாள் பொறு. ஏதாச்சும் பாப்போம்."

"பாப்போம்னா? இழுத்தாப்புலே சொல்லுதீகளே..."

"ரைட், முடிச்சிருவம். சர்த்தானா?"

"ஆங். அப்படிச் சொல்லுங்க. நீங்க மனசு வைச் சிட்டா... காரியம் முடிஞ்ச மாதிரிதான்."

இதுதான் வாயடி நாடார். ஊரிலுள்ள சகல சாதி சம்சாரிகளுக்கும் அப்படியோர் நம்பிக்கை. அழுத்தமான பற்று, மோசம் பண்ணமாட்டார் என்கிற வைர நம்பிக்கை. இந்த ஊரிலுள்ள சம்சாரிகளுக்கு மட்டுமல்ல, சுற்றுப்பட்டி பத்து ஊர் ஜனத்துக்கும்தான்.

அன்றைக்கே வாயடி கம்மாய்ப்பட்டிக்குப் போனார். அங்கே ஒரு சம்சாரியிடம் இருபது மூடை நெல் இருப்பதாகத் தகவல். இன்னொருத்தரிடம் எம்.சி. 5 பருத்தி ஒரு அம்பாரம் கிடக்கிறது.

ரெண்டும் படியுமா என்று விசாரித்துவிட்டு, பசுவுக்கும் ஆள் கிடைக்குமா என்று துப்பு துலக்கினார். வாயடி காரியம் பூராவும் இப்படித்தான்.

ஒரு ஜோலியாக மட்டும் எங்கும் போகமாட்டார். 'ஆடு மேய்த்த மாதிரியும் இருக்கணும். அண்ணனுக்குப் பொண்ணு பாத்த மாதிரியும் இருக்கணும்' என்கிற மாதிரித்தான் பயணப்படுவார். எங்கு குறிவைத்தாலும்... கொத்துக் காய்கள் மீதுதான் கல்லெறிவார்.

இப்போதும் அப்படித்தான்.

அப்படி விசாரிக்கிற போதுதான், இந்தச் சன்னாசித் தேவர் சிக்கினார். அவருக்கு ஒரு பால் மாடு வேண்டியிருந்தது. தூண்டிலில் மீன் சிக்கியிருப்பதை தக்கை ஆடுவதிலேயே கண்டுவிடலாம். இல்லையா? வாயடியின் உள்ளுணர்வு விழித்துக் கொண்டது. தூண்டிலைச் சுண்டியிழுப்பதைப் போன்ற நுட்பத்துடன் சாமர்த்தியமாகப் பேச ஆரம்பித்தார்.

"பசு நல்ல சிவலை. ஒமக்கேத்த ஐட்டம். பாலு மூணுக்குக் குறையாது."

"மாடு... முத்தலா?"

"என்னை யாருன்னு நெனைச்சீரு? முத்துன மாட்டை ஒம்மகிட்டே காட்டுவனா? ரெண்டாம் ஈத்து. இளசு. பசு வந்து ஒம்ம தொழுவிலே நின்னா... தொழுவே ஒரு அழகாயிரும், மகாலட்சுமியே வந்து நின்ன மாதிரி. அப்படிப்பட்ட லட்சணம்."

"சரி... வெலை என்ன பாட்டத்துலே... இருக்கும்?"

"நீரு என்ன நெலவரத்துலே இருக்கீரு? அதைச் சொல்லும் மொதல்லே."

"ம்ம்... என்னத்தைச் சொல்ல?"

"சொல்லும்."

"என்ன... அந்தா இந்தான்னு... ரெண்டுக்குள்ளே அமைஞ்சா நல்லது."

"ரெண்டாயிரமா?"

"ம்."

"சரி... நாளைக் கழிச்சு வாரும். ரெண்டாயிரத்துக் குள்ளே அமையுறது, கொஞ்சம் கஷ்டம்தான். கொஞ்சம்... முன்னேப் பின்னே... இருக்கும்."

"அதெல்லாம் நம்மாலே முடியாது. ரெண்டாயிரத்துக் குள்ளேதான் பாக்கணும்."

"சரி தேவரே, ஒமக்குச் செய்யாம யாருக்குச் செய்யப் போறேன்? வாரும். நம்மளை எப்பவும் மனசுலே நெனைச்சுக்கிட்டிருக்குற மாதிரி... ஒரு பசுவை கொண்ணாந்து உம்ம தொழுவத்துலே கட்டிருதேன்."

"அதுக்குத்தான்... நாடாரு வேணுங்குறது."

சன்னாசித் தேவருக்கும் உள்ளுக்குள் மகிழ்ச்சி. ஒரு காரியம் முடிந்த நிம்மதி. ஊர் ஊராகத் தேடியலைகிற அலைச்சல் இல்லாமல் போன திருப்தி.

வாயடிக்கும் ரொம்ப சந்தோஷம், ஒரு வேட்டை கிடைத்த மகிழ்ச்சி. வைத்த குறியில் கொத்துக் காய்கள் மடியில் விழுந்த வெற்றிப் பெருமிதம்.

மறுநாளே... முனியசாமியிடம் பத்துப் பைசாவை அட்வான்ஸ் போட்டு வைத்தார். விலை ஆயிரத்து எழுநூற்றைம்பது. அந்த விலை முனியசாமிக்கும் நியாயமாகப் பட்டது. கழுத்தாம்பிடியிலிருந்து தப்பித்த நிம்மதி. வாயடியை குலதெய்வமாக நினைத்தான்.

இப்போது முனியசாமியைத் தேடித்தான் 'விசுக், விசுக்' நடை. நல்ல வேளை, இருந்தான்.

"யப்பா... முனியசாமி, ஆளு வந்தாச்சு. நீ ரெண்டா யிரத்து நூறு சொல்லி, ரெண்டாயிரத்துக்குக் கீழே எறங்காதே. மத்ததை நா பாத்துக்கிடுதேன்."

"ஆட்டும்."

"நேத்து நாம பேசிக்கிட்டது, அட்வான்ஸ் குடுத்தது எதையும் மூச்சு காட்டாதே. அது நமக்குள்ளேயே இருக்கட்டும்."

"ஆட்டும்... ஆட்டும்."

"ஆளை சாயங்காலம்தான் கூட்டிக்கிட்டு வருவேன்."

"வந்துட்டாருன்னு சொன்னீகளே?"

"வந்தவுடனே மாட்டைக் காட்டக் கூடாதப்பா. இழுத்தடிச்சு, காக்க வைச்சுட்டு... அப்புறந்தான் காட்டணும். அப்பத்தான் மாடு மனசுக்குப் பிடிக்கும். சரி... வுடு... அதெல்லாம் தொழில் சூச்சுமம்."

"காக்க வைச்சா... புடிக்குமா? அதெப்படி?"

"மனசு சலிச்சுப் போகும். அலுத்துப் போன மனசுக்கு 'சரி... இதையே முடிச்சிருவோம். அலைஞ்சது போதும்'னு தோணும்."

"அடேங்கப்பா..." என்று ஆச்சரியத்தில் மனம் பிளந்து போனான், முனியசாமி.

வாயடி நாடார் நடந்து போகிற தினுசையே இமை தட்டாமல் பார்த்தான். அவனுக்குள் வியாபிக்கிற வியப்பு.

'சில்லாங்குச்சி (கிட்டிப்புல் குச்சி) கணக்கா ஆளு இருக்காரு. உள்ளே எம்புட்டு சரக்கு வைச்சிருக்காரு. மனுசர் பெரிய கில்லாடிதான்.'

பிரமிப்போடு வந்தான். தொழுவத்திற்கு வந்தான். பசுவைப் பார்த்தான். அதன் கரிய—பெரிய—விழிகள். காதுகள் விடைக்க மருட்சியுடன் இவனைப் பார்த்தது. இளம் கன்றுக்குட்டி தூணைச் சுற்றிச் சுற்றித் துள்ளி விளையாடுகிறது. அந்தப் பசுவின் கண்ணிலிருந்து ஒரு நீர்க்கோடு.

கன்று ஈன்ற நேரத்தில் பசு பட்ட சிரமம். கத்திய கதறல். பால் தந்த பக்குவம். நடைச் சத்தத்திலேயே ஆளைப் புரிந்துகொண்டு பாசத்துடன் கனைத்த அதன் நுட்பம். புல் இல்லாத சமயத்தில் உரிமையோடு கத்திய அதன் கதறல்.

பசுவின் முதுகை ஒரு பரிவுடன் வருடினான். உள்ளங்கையின் ஸ்பரிசத்தில் புல்லரிக்கிற பசுவின் சலனம்.

இதைப் பிரியப் போகிறோம் என்கிற நினைவுப் பாரம் மனசை என்னவோ செய்தது. மனப் பாரம், நீரின் உறுத்தலாகக் கண்ணோரங்களில் வந்து முட்டியது.

# 4

ஓடையைக் கடந்து ஊருக்குள் நுழைகிற வாயடியின் நடையில் ஒரு துள்ளல். ஒரு சுதாரிப்பு. ஒரு காரியம் கைகூடி வருகிற சந்தோஷம். ஒரே பாய்ச்சலில் இரு நூற்றைம்பது ரூபாய் லாபம் கிடைக்கப் போகிறது. ஒரு பசுவை கைமாற்றி விட்டதில் சுளையாக ஒரு வருமானம்.

வாயடியிலேயே வருமானம். மூலதனம் இல்லாத வருமானம். இதில் 'இதுக்குத்தான் வாயடி நாடார் வேணும்' என்று ரெண்டு சைடிலும் பாராட்டு வேறு.

மகிழ்ச்சி ததும்பும் மனசுக்குள், நெருடலாக ஓர் உறுத்தல். ருசியான கறிக் குழம்பில் உப்பு கூடிப் போனது போல, ஓர் அந்நியமான உணர்வு. எத்தனை அமுக்கி னாலும் முடங்க மறுத்து, தலை நீட்டுகிற மனச்சாட்சி.

'ச்சே' என்று சலித்து வந்தது. வாழ்ந்து கொண்டிருக்கிற வாழ்க்கையே ஒரு பாரம் போலப் போட்டு அமுக்குவதைப் போலிருந்தது. நடையின் வேகம் குறைந்தது. மனசுக்குள் விழுந்துவிட்டார்.

மனச் சுத்தத்துக்கு நியாயமில்லை. பொய்யும் புரட்டுமாய்... ஏமாற்றும் திருட்டுமாய் மாறிப் போன தொழில் பிழைப்பு. வெள்ளை மனசோடு வந்து தஞ்ச மடைகிறவர்களின் அடிமடியிலேயே கைவைத்துப் பிடுங்குகிற மாதிரி. பாசத்தோடும் பாதுகாப்புணர்வோடும் எச்சில் வழிகிற புன்னகையோடு மடியில் ஏறி உட்கார்கிற

குழந்தையின் கழுத்தைத் திருகுவதைப் போல, சகிக்க முடியாத குரூரம்.

'இதுக்குத்தான் நாடார் வேணும்' என்று ஆறுதலடைந்த நிம்மதியோடு வந்திருக்கிற வெள்ளந்தியான இந்தத் தேவரை, ஏமாற்றணும். பொய்களைச் சொல்லணும். அவர் முன்னிலையில் நாடகம் போடணும். முனியசாமியிடம் 'கசறி'ச் சண்டை போடுகிற மாதிரி பாவலா காட்டணும். பாய்ச்சல் காட்டணும்.

அவரிடம் 250 ரூபாய் பிடுங்குவதை... அவரே உணராத மாதிரி... இது பிக் பாக்கெட்தானே? அதைவிட இழிவான மோசடிதானே?

என்ன செய்றது? பிழைப்பு நியாயம். ஜீவன மல்லுக்கட்டு. வாழ்க்கையை நகர்த்துகிற மூர்த்தண்ய முயற்சி. வயிற்றுப்பாடு. வேறு வழியில்லை.

நோயில் கிடக்கிற செம்பகம். மாத்திரை மருந்துச் செலவு. குடும்பத்தின் அன்றாட அரிசி பருப்புச் செலவு. அடிவயிற்று நெருப்பாக தகித்து, அழகுச் சிலையாக நிற்கிற மகள் பொற்கொடி. கையில் அரிவாளை தூக்கிக் கொடுத்து 'வேட்டைக்கு' அனுப்புகிற நிர்ப்பந்தம்.

சத்தியம் பேசி, மனசுக்கு உண்மையாய் நடந்து, தர்ம நியாயத்துடன் கர்மம் செய்தால்... கதை நடக்காது. நாள் நகராது. பொழுது போய் அடையாது. பைதா உடைந்து வண்டி முடங்கிவிடும். நல்லவன் என்ற பேர் வராது. 'சாமர்த்தியக்காரன், கெட்டிக்காரன்' என்ற கியாதி கிடைக்காது.

தொழில் நடக்காது. குடை சாய்ந்துவிடும். வயிறு காயும். வாழ்க்கை நகராது. தேங்கும். நிற்கும். வற்றிப் போகும். கொக்குகூட வந்து நிற்காது. ஊர் கைகொட்டிச்

சிரிக்கும். 'பிழைக்கத் தெரியாத பேப்பயல்' என்ற பட்டம் கட்டி, மூலை சேர்த்துவிடும்.

வாழ்க்கைக் களத்தில் சோர்வில்லாமல் போராடுவது என்றால்... ஆயுதங்கள் தரித்திருக்கணும். தந்திரம் வேணும். சூது வேணும். சூழ்ச்சி வேணும். நெருப்பை பொட்டலம் கட்டிய குளிர்ப் பேச்சு வேணும். இதுகளையெல்லாம் 'யோக்கியம்' என்று சாதிக்கிற வாய்ச் சாமர்த்தியம் வேணும்.

நாடாருக்குள் கசந்து அழறுகிறது. தரகுத் தொழிலின் அடிப்படையே அதர்மம். மனசுக்குள் ஏதோ ஒரு பிசைவு. குற்ற உணர்வின் முட்கள். அதன் உறுத்தல். சூழல் குறித்த குற்றச்சாட்டு. உள் நமைச்சல்.

வாழ்க்கை வாழ்க்கையாகத் தோன்றவில்லை. மனிதர் வாழ்கிற மனிதத் தன்மையுள்ள வாழ்க்கையாக இல்லை. அன்பு, பாசம், நட்பு, நம்பிக்கை, நாணயம், தோழமை என்கிற உள்—வெளி லட்சணங்களோடு ஒளிர்கிற இயல்பான மனித வாழ்க்கையாக இல்லை. மனிதர் களோடு கலந்து மனிதத்தன்மையோடு வாழ்கிற மனித வாழ்க்கை... நமக்கு லபிக்கவில்லை.

கீரியும் பாம்புமான வாழ்க்கை. மிருகங்களோடு மிருகமாக உறுமிப் புரண்டு, சதைகளைக் கடித்துக் குதறி, ரத்தம் குடிக்கிற உக்கிரத்துடன் மரண பயங்கரமாகத் தோன்றுகிற வாழ்க்கை.

வனமாகிப் போன சமூகம். போர்க்களமான வாழ்க்கை. கொல்ல வேண்டும். இல்லையேல், கொல்லப்பட வேண்டும். கடிக்க வேண்டும். இல்லையேல், கடிபட வேண்டும். சுரண்ட வேண்டும். இல்லையேல், சுரண்டப்பட வேண்டும்.

பலிபீடமாகிப் போன சமூகம். நல்லதுகளை மதிக்காத சமூகம். வல்லமைகளைப் போற்றுகிற சமூகம். யோக்கிய ஏழைகளைத் தின்கிற சமூகம். அயோக்கிய வெற்றியாளர் களை ஆராதிக்கிற சமூகம்.

இந்தக் களத்தில்... கொஞ்சம் அசந்தால்கூட... கொஞ்ச மாய் தர்ம நியாயம் பார்த்தால்கூட... நம் கதை கந்தல்தான். கடித்துக் குதறப்பட்டு சதைப் பிண்டங்களாகக் கிடக்க வேண்டியதுதான்.

ச்சே! நாய்ப் பொழைப்பு. அதைவிடக் கேவலமான பொழைப்பு. மனுசப் பய வாழ்வானா... இந்தப் பொழைப்பை?

எதிர்த்தாற்போல் கந்தையா நாயக்கர் வந்து கொண் டிருந்தார். வேட்டி, சட்டை, துண்டு எல்லாம் ஏகக் கதரில் 'பளிச்'சென்று வந்தார். வெள்ளையும் சொள்ளையுமாக வருகிறார் என்றால்... ஏதோ வெளியூர் பயணம் போலும். 'பஸ் வந்துருமோ' என்கிற பரபரப்பில் வந்து கொண்டிருந்த அவர், வாயடியைப் பார்த்தவுடன் ஓர் இனிய புன்னகையைச் சிந்தினார்.

வாயடியும் ரொம்ப மரியாதையாக, "ஐயா... தூரவா போறீக?" என்றார். வெளியூர் புறப்படுகிறவர்களிடம் 'எங்க போறீக' என்று கேட்பது சகுனக் குறைவு. மரியாதைக் குறைவு.

அது தெரிந்த இங்கிதத்தில் இவர் கேட்கவும், நாயக்கருக்கு முகம் பூராவும் படர்ந்த சிரிப்பு. "சும்மா... செவகாசி வரைக்கும்."

"பன்னெண்டரை பஸ்ஸுக்கா?"

"ம். வாயடியாலே நமக்கு ஒரு காரியம் ஆகணும். விடிஞ்சதுலேயிருந்து ஒம்மைப் பாத்துப் பேசணும்னு

இருந்தேன். தேடிப் போன தெய்வம்போல தெருவுலே தட்டுப்பட்டுட்டீரு..."

"சொல்லுங்க ஐயா, உங்களுக்குச் செய்யாம... வேற யாருக்குச் செய்யப் போறேன்?"

"பருத்திக்கு ஏவாரி, யாரும் வரல்லியா?"

"கெடக்கா?"

"ஆமா. ஏழெட்டு கு(வி)ண்டால் தேறும்."

"ஏவாரி வந்தா... கூட்டிட்டு வரவா?"

"அதென்ன அப்படிச் சொல்லிட்டீரு... ரூவாய்க்கு ரொம்ப அவசரம். இன்னும் ஏழெட்டு நாளைக்குள்ளே எட்டாயிரம் பொரட்டியாகணும்."

"அப்படியா? அம்புட்டு ரூவா... 'லம்ப்'பா தேவைப் படுதோ?"

"ம். நம்ம பய பட்டாளத்துக்குப் போகணும்னு ஒத்தைக்கால்லே நிக்கான்."

"யாரு...? ரெண்டாவது புள்ளையாண்டனா?"

"அந்தப்பயதான். ஏழாயிரம் குடுத்துட்டா... 'பட்டா ளத்துலே சேத்துவிட நானாச்சு'ன்னு செவகாசியிலே ஒருத்தரு சொல்றாரு."

"பட்டாளத்துக்குப் போறதுக்கும்... லஞ்சமா?"

"லஞ்சம் இல்லாமத்தான்... இந்தக் காலத்துலே ஒரு தூசிகூட நகராதே."

"அடக் கொடுமையே! சரி... நீங்க பெறப்படுங்க. நமக்கொரு ஜோலியிருக்கு."

"ம். ஜோலியோட ஜோலியா நா சொன்னதையும் யாவகத்துலே (ஞாபகத்தில்) வைச்சுக்கணும்."

"ஆட்டும், ஆட்டும். ஏவாரிதானே? பத்து நாளைக் குள்ளே பருத்தி துட்டாயிரும். போதுமா?"

"அதுக்குத்தான்... வாயடி நாடார் வேணுங்குறது."

கந்தையா நாயக்கரைக் கடந்து வந்த வாயடிக்குள், நெருஞ்சி முள்ளில் கால் வைத்துவிட்ட உணர்வு.

'பட்டாளத்துலே சேர்றதுக்கும் பணச்செலவா?' இந்தக் கேள்வி முள்முள்ளாகக் குத்துகிறது. மனம் பதறி வருகிறது.

'என்னாச்சு? நாடு எங்க போகுது? அழிவு காலம் நெருங்கிருச்சா? சனியன் பிடிச்சிட்டானா? பிடிச்சு ஆட்டுதானா?'

பத்து வருஷத்துக்கு முந்தி—

இதே கந்தையா நாயக்கரின் கடைக்குட்டித் தம்பி. வீட்டில் ஏதோ சண்டைசத்தம். கோபதாபம்.

ராத்திரி களத்தில் கம்பங்கதிர் அம்பாரம். மாட்டு வண்டிக்கு எட்டு வண்டிக் கதிர். மலை மாதிரி குவித்துப் போடப்பட்டிருந்தது. காவலுக்குப் படுத்திருக்க வேண்டியவன். போர்வையும் தலையணையும் கொண்டு வந்தவன்.

வயசுக் கோளாறு. இளவட்டச் செட்டுகளோடு கூட்டுச் சேர்ந்து, யாருக்கும் தெரியாமல் திருவேங்கடத் துக்கு சினிமாவுக்குப் போய்விட்டான், ரெண்டாவது ஆட்டத்துக்கு.

விஷயம் தெரிந்துவிட்டது, வீட்டுக்கு. ஆள் ஆளுக்குச் 'சத்தம்' போட்டிருக்கின்றனர். கசமுசா வென்று வீட்டில் சண்டை. இளவட்டப் பயல். 'சுருக்'கென்று சொல் கேட்கச் சகிக்காதவன். கோபித்துக் கொண்டு போய்விட்டான். வீட்டில் யாரும் தேடவில்லை. 'குமரிப்பிள்ளையா, பதறுவதற்கு?' என்று அலட்சியமாக இருந்துவிட்டனர்.

"இளவட்டப்பய. கழுதை எங்க போகும்? நாலு காடு சுத்திட்டு வரட்டும். வவுறு காய்ஞ்சதுன்னா... தானாக வீடு வந்து சேரும்" என்ற மிதப்பான நினைப்பில், பொருட் படுத்தாமல் இருந்துவிட்டனர்.

பத்து நாளாயிற்று. வீட்டாள்களுக்கு மெல்லப் பயம் தட்டியது.

அப்போது—

ஒரு கடிதம் வந்தது.

'பட்டாளத்தில் சேர்ந்து விட்டதாகவும், பஞ்சாப்பில் டிரெயினிங்கென்றும், ஆறாவது பட்டாலியன்' என்று கடிதம் சொல்ல—

அவ்வளவுதான்! வீடே ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டது. எதோ பிள்ளையை சாகக் கொடுத்து விட்டதைப் போல பதறித் தவித்து, அழுது அரற்றினர்.

வீட்டிலுள்ள பெரியவர்களுக்கும் ரத்தம் கிடந்து கொதித்தது. தகுதிக்குப் பொருந்தாத—தராதரமில்லாத அவமான காரியத்தைச் செய்துவிட்ட மாதிரி அவனைத் திட்டித் தீர்த்தனர். குடும்பத்துக்குக் கேவலத்தைக் கொண்டு வந்துவிட்ட மாதிரி கொதித்தனர்.

"ஒரு சம்சாரி வீட்டுப் புள்ளைக்கு இப்படியா புத்தி போகணும்? வெறும் பயலாயிருக்குற கூலிக்காரன் மாதிரி... என்னத்துக்கு பட்டாளத்துக்குப் போகணும்... இவ? 'சொக்கனுக்குச் சட்டியளவு சோறு'ங்கிற மாதிரியான மாசச் சம்பளத்துக்கு, கண்டகண்ட பயலுக்கெல்லாம் கும்பிடு போட்டுக்கிட்டு இருக்கணும்னு இவனுக்குத் தலையெழுத்தா? காடு கரைக கிடக்கு, நாலா தெசையிலும். சமுத்திரம்போல சம்சாரித்தனம். பத்துப் பேருக்கு நிதம் வேலை குடுக்கலாம். ஏழு தலைமுறைக்கும் ராசாப்போல

இருந்து சாப்புடலாம்... பாடுபட்டா. சம்சாரிப்பயலுக்கு இந்த ஈனப் புத்தி வரலாமா?" என்று 'தங்கு, புங்'கென்று தரைக்கும் ஆகாயத்துக்குமாகக் குதித்தார்கள்.

விவசாயக் குடும்பத்தின் கௌரவமே இழிவுபட்டுப் போனதாக ரௌத்ரமானார்கள். பெண் பிள்ளைகள் அதற்கும் மேல்.

"இந்தக் கணமே எங்க புள்ளையை நாங்க கண்ணுலே பாத்தாகணும்" என்று காளியாட்டம் ஆடினர். வீடே ரணகளமாயிற்று. கண்ணீரும் கதறலுமாய் ஒரே குழலுபடியாயிற்று.

வேறு என்ன செய்ய?

ஆயிரம் ரூபாயை எடுத்து மடியில் கட்டிக்கொண்டு, கந்தையா நாயக்கர் புறப்பட்டார். நாலு விபரமறிந்த—நாடு கோடு கண்ட—பெரிய மனிதர்களைக் கண்டு பேசி, 'என்ன, ஏது' என்று வழிவகைகளை விசாரித்து அறிந்து கொண்டு—

'அப்பாவுக்கு இழுத்துக்கிட்டு கிடக்கு. இப்பவோ அப்பவோன்னு நிலவரம்' என்று தந்தி அடித்து, பணம் செலவழித்து, போலீஸ் ஸ்டேஷன் மூலமும் தகவல் தந்து... சீதையை மீட்கிற ராம்யுத்தம் போல பெரும் போராட்ட இழுபறிக்குப் பிறகு... தம்பியை மீட்டிக்கொண்டு வந்தார்.

பையனைப் பார்த்தபிறகுதான், எல்லாருக்கும் சமாதானமாயிற்று. வீடு, வீடாயிற்று...

**ப**த்து வருஷத்திற்குள் என்ன ஆகிப் போய்விட்டது? அதே கந்தையா நாயக்கர் தன் மகனை பட்டாளத்தில் சேர்த்துவிட ஆலாய்ப் பறந்து அலைகிறார். ஏழாயிரம்

வஞ்சமாய் அழுதாவது, பட்டாளத்திற்கு அனுப்பிவிட பிரம்மப் பிரயத்தனப்படுகிறார்.

வெறும் பயலாயிருக்கிற கூலிக்காரன் மாதிரி பட்டாளத்தில் சேர்ந்து, 'சொக்கனுக்குச் சட்டியளவு சோறு' என்கிற மாதச்சம்பளத்துக்குச் சாகணும்னு, சம்சாரிகளுக்கும் தலையெழுத்து வந்துருச்சா? ஏழு தலைமுறைக்கும் ராஜயோகம் தந்துகொண்டிருந்த சமுத்திரமான சம்சாரித்தனம், இந்தத் தலைமுறையிலேயே ஆடி மாச வருணியாக வற்றி வறண்டு போயிற்றா? விவசாயத் தொழில் மதிப்பிழந்து போயிற்றா? பட்டாளத்துச் சம்பளம் கௌரவத்திற்குரியதாகி விட்டதா?

சம்சாரிகள் வாங்கப் போகிற பொருள் விலையெல்லாம் உச்சியிலே. இவன் விளைய வைக்கிற பொருள் விலையெல்லாம் பள்ளத்திலே. உலகம் பூராவுக்கும் சோற்றைத் தருகிறவன் இவன்தான். உலகம் பூராவும் ஏமாற்றி வஞ்சிப்பதுவும் இவனைத்தான். இவன் பாடுகளை சர்க்கார் ஒரு தொழிலாகவே மதிக்கலே.

அதனாலேதான்... வருஷா வருஷம் வெளைச்சல் உயருது. வாழ்க்கை நிலைமை சரியுது. மண்ணைப் பொன்னாக்குற இந்தச் சம்சாரித்தனமே மண்ணாகிப் போச்சே...

சம்சாரி வீட்டுப் பிள்ளைகள் எல்லோரும் சம்சாரித்தனத்தைக் கண்டு ஓட்டமாய் ஓடிப் பறக்கிறார்களே... 'விட்டால் போதும்' என்று பாய்ந்து விடுகிறார்களே... விவசாயத்தைச் சுமக்கப் பயந்து சாகிறார்களே...

சம்சாரித்தனம் சரிந்தது என்றால்... நாடு எதைத் தின்று வாழப் போகிறது? சம்சாரியை சாகடித்துவிட்டு, நாடு மட்டும் வாழ்ந்து விடுமா?

சம்சாரித்தனம் மதிப்பிழந்து போனால்... சர்வ நாசமானால்... அந்தக் குளத்தை நம்பி வாழ்கிற கொக்குகள்

போன்ற வாயடிகள் எங்கே போய் மீன் கொத்த? எப்படி வாழ? யாரை நம்பிப் பொழைக்க?

வாயடிக்கு எதிர்காலத்தை நினைத்தால், பயம் வந்தது.

பட்டாளத்துக்குப் போவதற்கும் லஞ்சமா? இதென்ன அக்கிரமம்? ஏழாயிரம் கொடுத்து பட்டாளத்துக்குப் போகிறவன், பட்டாளத்துக்குரிய வீரத்துடன் இருப்பானா? கடமை உணர்ச்சியோடு இருப்பானா? தேசப்பற்று வருமா? உயிரைத் துச்சமாக எண்ணுகிற தியாக மனசு வருமா?

நாடு காக்க வேண்டிய பட்டாளத்தானே ஒப்புக்கு மாரடிக்கத் துவங்கிவிட்டால்... நாடு என்னாகும்?

'அதிகாரிகள் லஞ்சம் வாங்கவில்லை, இடைத்தட்டுக் காரர்கள்தான் வாங்குகிறார்கள்' என்பது வாஸ்தவம்தான். இருந்தாலும்... அப்படிப்பட்ட இடைத்தட்டுப் புரட்டர்கள் முளைக்கலாமா? முளைக்க விடலாமா? முளையிலேயே கிள்ளியெறிய வேண்டாமா, கவர்மெண்ட்? பட்டாளத்து மேலே மனுச மக்க வைச்சிருக்கிற நம்பிக்கையைக் காப் பாற்ற வேண்டாமா?

மடத்துக்கு வந்தார். தேவர் உட்கார்ந்திருந்தார். காத்துக் கிடந்து, காத்துக் கிடந்து சலித்துப் போயிருக்கிறார் என்பது அவரது முகத்தில் துல்லியமாய்த் தெரிகிறது.

இவரைக் கண்டதும் தேவர் முகம் பிரகாசமாயிற்று.

"என்ன... ஆளு மாயமாய் மறைஞ்சு போய்ட்டீரு?"

"ரொம்ப நேரமாயிருச்சோ?"

"ஆமா... நானும் 'பொட்டு, பொட்டு'ன்னு காத்துக் கிடக்கேன். கண்ணுதான் பூத்துப் போச்சு. சரி, போய் மாட்டைப் பாப்பமா?"

"மாட்டுக்காரன் புஞ்சைக்குப் போயிருக்கான். சாயங்காலம் ஆகும்."

தேவருக்கு முகம் இருண்டது. அருள் கெட்டுப் போயிற்று. சட்டென்று வந்து அறைந்த ஏமாற்றத்தின் உள்அதிர்வு.

"அப்ப... இன்னிக்கு நா வேலை முடியாம... வெட்டியலைச்சலாத்தான் வீடு திரும்பணுமோ?"

"அதென்ன அப்படிச் சொல்லிட்டீரு...? பசு... இன்னிக்கு உம்ம வீட்டுத் தொழுவத்துலே நிக்கும். அதுக்கு நா காரெண்டி போதுமா?"

ஆணியடித்த மாதிரி கணீர் குரலில் வாயடி கேட்க, தேவர் திகைத்துப் போனார்.

"நெசமாவா?"

"நா சொல்லிட்டா... அதுக்கு அப்பீல் உண்டா?"

"அப்பச் சரி... இப்ப என்ன செய்ய?"

"வாரும்... டீக்கடைக்குப் போவோம்..."

டீக்கடை வந்தார்கள். மதியப் பள்ளிக்கூடம் விட்டிருந்தார்கள். தெரு நிறைய அடைத்துக் கொண்டு மலர்ச் செண்டுகள். கை வீசி கால் வீசி துள்ளிக் குதிக்கிற பூப்பந்துகள். பூச் சூடிய பெண்ணைப் போல... தெருவே ஒரு லட்சணமாயிற்று.

கடையில் முட்டைக்கோஸும், வடையும் சுடச்சுட இருந்தது. அதில் இரண்டு, இதில் இரண்டு என்று பிய்த்துவாயில் போட்டார்கள், டீ குடித்தார்கள். தேவர்தான் காசு கொடுத்தார்.

'அது, இது' என்று மூச்சு விடாமல் கதையடித்தார் வாயடி. அவர் வாங்கிக் கொடுத்த பசுக்கள் 'ஜே ஜே' என்று இருந்து நல்ல பெயர் வாங்கிக் கொடுக்கிற கதைகள்.

இவரை நம்பாமல் போய்... 'தொத்தல்' மாடுகளில் விழுந்து ஏமாந்தவர்களின் கதைகள். அவர் பாட்டுக்கு அள்ளி விட்டார்.

தேவர் வாயில் ஈ போவது தெரியாமல் 'ஆ'வென்று கேட்டுக் கொண்டிருந்தார். அவர் உள்ளுக்குள் ஆச்சரியம்.

'மனுசர்... பிடிச்சா உள்ளங்கைக்குள்ளே அடங்கிருவார். ஆனா பேச்சு என்னமாய்ப் பொறிகிறார். இதுலே எது பொய்யோ... எம்புட்டுப் பொய்யோ...!'

வாயடி சொன்னபடியே பசுவை முடித்து தேவரைத் திருப்தியோடு அனுப்பிவிட்டார். இவரது பைக்குள் முழுசாக ரெண்டு மூன்று நூறு ரூபாய்த் தாள்.

50 ரூபாயை குறைத்துக் கொண்டதில்... இவரது மனச்சாட்சி சற்று சமனப்பட்டிருந்தது. உறுத்தலைக் கடந்திருந்தது.

வீட்டுக்குப் போகிற போது... 'செம்பகத்துக்கு மருந்து மாத்திரை வாங்கப் போகணும்' என்று நினைத்துக் கொண்டார்.

'பட்டாளத்திலிருந்து சிந்தாமணி வரப் போவதாக கடிதம் எழுதியிருந்தானே... எப்போ வருவான்?... வரட்டும், நல்ல பயல். அவனுக்கும் ஒரு 'ஏற்பாடு' செய்யணும்.'

அவருடன் நினைவுகளும் நடந்தன, கூடவே.

ஆனால், இவருக்கே அவன்தான் 'ஏற்பாடு' செய்யப் போகிறான், என்கிற காலக் கூத்தைக் கண்டாரா, அவர்!

# 5

**ஊ**ருக்குப் புறத்தேயுள்ள வெட்டவெளி மைதானம் தான், பஸ்ஸ்டாண்ட். 'அண்ணா பேருந்து நிலையம்' என்று கண்ணு மூடிய ஒரு மங்கலான நிறத்தில் ஒரு போர்டு. உளுத்துப் போன கட்டைகள் பலத்தில் நின்றது. 'நிக்கட்டா, விழுந்துரட்டா' என்று அரட்டிக் கொண்டிருந்தது.

ஊர்ப் பொதுவான இடம். நிறையப் பேர் குப்பை போட்டிருந்தனர். 'ஊருக்கு முதன்முதலாக பஸ் வரப் போகுது' என்ற மகிழ்ச்சி, ஊர்ஜனத்துக்கு பெரும் போதை. கண்மூக்கு தெரியாத போதை வெறி. மொத்த ஊரே ரெக்கையடித்துத் திரிந்தது.

ஆள் ஆளுக்கு அரிவாளைத் தூக்கி, ரோட்டோர வேலி மரங்களை வெட்டி ஒதுக்கினர். கூடை மம்பட்டிகளோடு போய் மண்ணை வெட்டியள்ளி ரோட்டைச் செம்மை பண்ணிய இளவட்டங்கள்.

'பஸ் வந்து எங்கே வட்டமடிச்சுத் திரும்பணும்' என்று ஊருக்குள் பெரும் விவாதம். மகிழ்ச்சியான சர்ச்சை. எல்லோரும் எதையும் விட்டுக் கொடுக்கிற அளவுக்கு மனம் கனிந்திருந்த சூழல். பொது மகிழ்ச்சியில் கூட்டாக மனிதர்கள் சங்கமித்துக் கரைகிறபோதுதான்... மனித மனம் உன்னத நிலை பெற்றுவிடுகிறது.

குப்பை மேடுகளாகவும், வேலிமரச் செடிகளாகவும், பன்றிகள் உலவுகிற இடமாகவும் இருந்த இந்தப் பகுதி பொருத்தமான இடம் என்று முடிவான போது, குப்பைக்காரர்கள் முகம் சுளிக்காமல் அள்ளிக் கொண்டு

போனார்கள். எல்லாரும் இடத்தைத் துப்புரவுப்படுத்து வதில், சமப்படுத்துவதில் மும்முரமாக ஈடுபட்டனர்.

அப்படியமைந்ததுதான் இந்த மைதானம்.

அந்த மைதானத்தில் அகலம் இப்போது ரொம்பச் சுருங்கிவிட்டது. ஆள் ஆளுக்கு விளிம்புகளைக் கடித்துக் கடித்துக் கரைத்துவிட்டனர். பால்பண்ணைக் கட்டடம், ஒரு வீடு, டீக்கடை, உரக்கடை, குடிசை என்று நிறைய்ய, சுற்றிலும். ஆளுக்குக் கொஞ்சமாய் சுற்றுவட்டக் கத்தரிப்பாக... ஆக்ரமிப்பு.

முற்றம் போட்டு, மரம் வைத்து, சாய்ப்பு இறக்கி, திண்ணை போட்டு என்று ஏக விதங்களில் ஆக்ரமிப்பு. மைதானம் விசாலமற்றுப் போய்விட்டாலும், பஸ்ஸுக் காகக் காத்திருக்கிற ஜனங்கள் ஒதுங்கி நிற்க நிழல்கள் கிடைத்திருக்கின்றன.

மதிய வெயில் உக்கிரம் குறைந்து, பொழுது மேற்கில் சாய்ந்துவிட்டது. மணி மூன்று. நிழல்கள் நீளநீளமாய்... கிழக்கில்.

'பஸ் வருமோ, வராதோ' என்ற சந்தேகத்தில் பதைப் புடன் ஆலாய்ப் பறந்த ஜனங்கள். வெள்ளையும் சொள் ளையுமாய் எண்ணெய் வழிகிற கிராமத்தாட்கள். அண்ணாந்து அண்ணாந்து ரோட்டின் திசையைப் பார்த்தார்கள், 'புழுதிப் படலம் தெரிகிறதா' என்று. செவிப்புலன்கள் ரொம்பக் கூர்மைப்பட்டிருந்தன.

ரொம்பத் தூரத்து டிராக்டர் இரைச்சலைக்கூட உற்றுக் கேட்டனர், 'பஸ் வர்ற சத்தமாக இருக்குமோ' என்ற யூகத்தில்.

பஸ்ஸின் ஹாரன் சத்தம், நீள அலறலாய் ஒலித்தது. 'அப்பாடா... பஸ் வந்துடுச்சு' என்று ஒரு நிம்மதி. ஆசுவாசம். அதனால் வந்த பரபரப்பு.

புழுதிப் படலத்தைக் கிளப்பிக் கொண்டுவந்த வெள்ளைப் பஸ், வட்டமடித்து திரும்பி நின்றது. பஸ்ஸை வந்து 'மொளோர்' என்று மொய்க்கிற ஆண்கள், பெண்கள். இறங்குகிறவர்களின் கூச்சல். ஒரே ஆரவாரமும், சந்தடியுமாய்...

"அடப் பாதகத்திகளா... எங்களை எறங்க விடுங் களேன்... இப்புடி வந்து மறிச்சு அடைச்சுக்கிட்டா... எங்கிட்டுக் கூடி எறங்க?"

நெட்டித் தள்ளிக்கொண்டு இறங்குகிறவர்கள். முட்டி மோதிக்கொண்டு முண்டியடித்து ஏறுகிறவர்கள். கொஞ்ச நேர தள்ளுமுள்ளு.

இறங்குகிறவர்கள் எல்லாம் இறங்கி, ஏறுகிறவர் களெல்லாம் ஏறி உட்கார்ந்த பிறகு... அதுவரை காத்திருந்து விட்டு நிதானமாக இறங்கினான், ஒரு முழுத்த வாலிபன். அவன் ரொம்ப விநோதமான டிரஸ்ஸில் இருந்தான், வேற்றுலகவாசிபோல.

கரும்பச்சை பேண்ட், அந்தக் கலரிலேயே முழுக்கை ஷர்ட், அதே கலர்த் தொப்பி. கனத்த பூட்ஸ். ஒட்ட வெட்டப்பட்ட பட்டாளத்துக் கிராப்பு. சன்னமான முறுக்கு மீசை. கரும்பச்சைக்கு அந்நியமாகாத கறுப்பு நிறத் திரேகம்.

லக்கேஜ்களை இறக்கினான். பிசாசு மாதிரியான தோர் ட்ரங்க் பெட்டி. ஒரு வீட்டையே உள்ளே பார்சல் பண்ணிவிடலாம். அத்தனை பெரிசு. கரும்பச்சையில்—கனத்த—வட்டமான—உயரமான பை. உச்சியில் சுருக்குக் கயிறு. பார்த்தால்... ஒரு உப்புமூட்டை மாதிரியிருந்தது. ராட்சஸத்தனமான சூட்கேஸ் வேறு.

எல்லாமே கனம். பேய்க் தனம். கூடமாட இறக்கு வதற்கு சிலர் உதவினர். இறக்கி முடித்தவுடன் நிமிர்ந்து

பார்த்தான். பார்வையில் துள்ளுகிற மகிழ்ச்சி மின்னல். சொந்த மண்ணில் கால் பதித்த மனப்பூரிப்பு. தாயின் மடியில் முகம் புதைத்த மழலையின் ஆனந்தத் துள்ளல். ததும்பி வழிகிற குழந்தைத்தனமான சந்தோஷத்தோடு சுற்றிலும் கழுத்தைத் திருப்பி மனித முகங்களைப் பார்த்தான்.

முகம்.... முகம்... முகங்கள்....

கிழக்கிலிருந்து வந்த ராமையாத் தாத்தா, இந்த வினோத உலகவாசியைப் பார்த்துத் திகைத்தார். பார்வை சரியாகப் பிடிபடவில்லை. மேற்குச் சூரியன் கண்ணில் ஊசியாகப் பாய... உள்ளங்கையை கண்ணுக்குக் குடையாக்கி இடுக்கிக்கொண்டு கூர்ந்து பார்த்தார், அண்ணாந்து.

"யாரது... புதுசாயிருக்கே?"

"தாத்தா... என்னைத் தெரியலியா?"

குரலில் உருவமும் உறவும் பிடிபட, அவர் முகத்தில் ஒளிப்பரவல்.

"அடடே... நம்ம சிந்தாமணிப் பயலா?"

"ஆமா... தாத்தா."

"எப்படா... வந்தே?"

"இப்பத்தான்... வாரேன் தாத்தா."

"முந்தா நாளே உங்க அம்மாக்காரி அலைபாய்ஞ்சு வந்தாளே... 'எம்மகன் வரப்போறான், வரப்போறான்'னு. அம்மாவைப் பாத்தீயா?"

மகிழ்ச்சிப் பரவசத்தில் அசட்டுத்தனங்கள் சகஜம் போலும். அவன் அதைக் கூட ரசித்துச் சிரித்தான்.

"இப்பத்தானே தாத்தா வந்துருக்கேன்... இனிமேத்தான் அம்மாவைப் போய் வீட்லே பாக்கணும்."

“போடா... உங்கம்மாக்காரி உசுரைக் கையிலே புடிச்சுக் கிட்டு ஒனக்காகக் காத்திருக்கா. போய்ப்பாரு.”

“சரி, தாத்தா.”

“அவளுக்கு ஒன்னைவிட்டா... வேற நாதி ஏது? நீயும் அவளை ரொம்பத் தவிக்க வைச்சுட்டே.”

“ஏன் தாத்தா... நீங்கள்லாம் இல்லியா? உங்களை மாதிரியான பெரியாளுக ஒத்தாசை இருக்கும்ங்கிற நம்பிக்கை... எனக்கு இருக்கு தாத்தா.”

“நாங்க இருக்கோம். இருக்கத்தான் செய்தோம். இருந்தாலும், பெத்த புள்ளையாயிருமா... மத்த ஆளுக?”

“அதான்... வந்துட்டேன்லே தாத்தா?”

“சரி... சாமான் செட்டுகளை வீடு கொண்டு போய்ச் சேரு. ஏலேய், இளவட்டங்களா... ஆளுக்கொன்னா தூக்குங்கடா.”

ராமையாத் தாத்தா நகர்வதற்காகவே காத்திருந்தவர் களைப் போல, இளவட்டங்கள் மொய்த்துக் கொண்டனர். தடபுடலான உபசரிப்பு. தாறுமாறான விசாரிப்புகள். நச்சரிப்பான உபசரிப்பு.

“வாங்க அண்ணே...”

“வாங்க மாமா...”

“ட்ரெயின்லே வந்தீகளா?”

“பிரயாணம் எம்புட்டு நாள்?”

ஏகப்பட்ட கேள்விகளின் முற்றுகை. வந்து மொய்க்கிற மகிழ்ச்சியான துள்ளல்கள். சிரித்தமுகம் மாறாமல் சலிக்காமல் பதில் சொன்னான், சிந்தாமணி. ஆளுக்கொரு சாமானாகத் தூக்கிக் கொண்டனர். ரெண்டு மூன்று பேர் ட்ரெங்க் பெட்டியை...

தொப்பியைக் கையில் எடுத்துக்கொண்டு நடந்தான், சிந்தாமணி.

நடக்க நடக்க இனிய திடுக்கிடலாய் நிமிர்ந்து பார்ப்பது போல தரை அதிர்ந்தது. பூட்ஸ் கால்கள் 'ஜர்ர்ர்க்... ஜர்ர்ர்க்'கென்று கனகம்பீரமாய் ஒரு சத்தம். ஒரு ராஜகம்பீரம்.

தெரு நெடுக ஆட்கள் அவனைப் பார்த்தனர், வியப்பாக. அவனது வாட்ட சாட்டமும், நிமிர்ந்த தோற்றமும், தேகக் கச்சிதமும் அப்படியிருந்தது.

வழிநெடுக பூக்களை அள்ளித் தூவுகிற மாதிரியான சிநேகிதமான உபசரிப்புகள். அன்புமயமான விசாரிப்புகள். கிராமத்தின் பேரழகான அந்நியோன்யம் ததும்புகிற வரவேற்புகள்.

சிரித்த முகத்தின் மலர்ச்சி மங்காமல் பதில் சொல்லிக் கொண்டே நகர்ந்தான். சற்றுப் பெருமிதமாகவும்தான்.

அவனுக்கு முன்னால் ஒரு சிறுவன். அவிழ்ந்தோடுகிற டவுஷரை ஒரு கையால் பிடித்துக்கொண்டு ஓட்டமாய் ஓடினான், சிந்தாமணியின் அம்மாவிடம் 'தாக்கல்' சொல்ல. அவன் வாயில் காரின் மோட்டார் இரைச்சல். "ட்ர்ர்ர்ர்... ட்ர்ர்ர்ர்... ட்ர்ர்ர்."

ஊர் மடத்தைத் தாண்டுகிறபோது—

அதை நிமிர்ந்து பார்த்தான். வழக்கம்போல அது பூட்டியே கிடந்தது. உள்ளோடும் பழைய நினைவுகள். அலை அலையான வெக்கை நினைவுகள். மனசின் உள்ஜவ்வுகளையெல்லாம் சுட்டுத்தகித்த அக்கினியலைகள்.

முழு மடத்தையும் உள்ளே அள்ளி வைத்துக் கொள்வதைப் போல... ஆழமாய்ப் பார்த்தான். அர்த்தம் பொதிந்த பார்வைத் தீவிரம்.

மனசுக்குள் மடைதிறந்த மாதிரி நினைவுப் பிரவாகம். அனலாய் வாட்டி வதைத்த சம்பவங்கள். இவனை அடித்து இழுத்துச் சென்ற நிகழ்ச்சிப் பிரவாக உக்கிரம். பதினேழு வயசுச் சிறுவனை அச்ச நரகத்தில் முக்கியெடுத்து பீதியூட்டிய கொடிய தருணங்கள்.

காய்ந்த உதடுகளில் வெடித்த ஒரு சின்னப் புன்னகை. கறுமையான உதடுகளில் சோக ரணமாய் உடைகிற புன்னகை.

**ஊ**ர் மடம் அன்றைக்குத் திறந்து விடப்பட்டிருந்தது. ஊரிலுள்ள முக்கியமான நாடார் பிரமுகர்கள் சகலரும் கூடியிருந்தனர். குழப்பமான கொதிநிலை. திடுமென்று கூடியிருக்கிற அவசரக் கூட்டம்.

பதினேழு வயசுக்காரன், சிந்தாமணி. இப்ப இப்பத்தான் பொசுபொசுவென்கிற மெல்லிய மயிர்களை மீசை என்று ஒதுக்கிவிடுகிறான். அவன்தான்... இன்றைய விசாரணைக்குரிய குற்றவாளி.

விசாரணை என்ன... விசாரணை, அதெல்லாம் சும்மா ஒரு பாவனைதான். தண்டனை மட்டுமே சர்வநிச்சயம்.

சிந்தாமணியைத் தேடிக்கொண்டு நாவிதன் ரெண்டு மூன்று தடவை போய்விட்டு, "ஆளு தட்டுப்படலே, முதலாளி" என்று பணிவடக்கமாகச் சொல்லிவிட்டான்.

ஊர் மடத்து வாசலுக்கு எதிரில்—நேர்ப் பார்வையில், சற்றுத் தள்ளி—ஒரு வேப்பமரம். பள்ளிக்கூட மைதான வேம்பு. பெரிய மரம். யாரும் வந்து ஒரு இலையைக் கூடக் கிள்ளிவிட முடியாது. கண்டிப்பான பாதுகாப்பு. அதனால் அடர்த்தியான கிளைகள். இலைகள். ராட்சஸக் குடையாக இருந்த அந்த மரத்தின் உச்சி இருட்டுக்குள்—கிளையில்—பல்லிபோல அப்பிப்போயிருக்கிறான், சிந்தாமணி. பறவை

எதுவும் அடையாத மரம் என்பதால்... அவன் ஒளிவதற்குத் தோதாக இருந்தது. முகத்தில் சரசரவென உரசும் வேப்பிலைகளை விரலால் ஒதுக்கிவிட்டுக் கொண்டு, ஊர்க் கூட்டத்திலேயே கண்ணாக இருந்தான்.

பேசுகிற சப்த இரைச்சல் எதிரொலியதிர்வோடு கேட்கிறது. கலவையாகிப் போன ஒரே கூட்டுக் கூச்சல். காட்டுக் கூச்சல். தண்டிக்கிற நோக்கம் தெளிவான கொடூரமாகத் தெரிகிறது.

இவனுள் பயம். நெஞ்சுக் கூடு விம்மி விம்மித் தணிகிறது. உள்ளங்கைகளில் வேர்வைப் பிசுபிசுப்பு. பயம் என்றால்... பயம், அம்புட்டுப் பயம். கேவலத்தை நேருக்கு நேர் சந்திக்கப் போகிற நடுக்கம். அவமானப்பட வேண்டுமே என்கிற கிலி.

கூட்டத்தின் மொத்தப் பார்வையில் கூனிக்குறுகிப் போய் நிற்க வேண்டும். ஆள் ஆளுக்கு முறைப்பார்கள். இளப்பமாய் பார்ப்பார்கள். திட்டுவார்கள். "சாதியைக் கேவலப்படுத்திட்டியே... சாதி கெட்டப் பயலே" என்று நாறவசவுகளாய் வைது தீர்ப்பார்கள். அடிக்க அடிக்கக் கையை ஓங்கிக்கொண்டு, மட்டியைக் கடித்துக்கொண்டு பாய்ச்சல் காட்டுவார்கள்.

அத்தனையையும் 'வாங்கி'க் கட்டிக்கொள்ள வேண்டும். நிமிர்ந்து பார்த்து விடக்கூடாது. பணிந்து குழைந்து நிற்கணும். அப்பவும் சில சண்டியர்கள் "சபைக்குப் பயந்து வணங்கி நில்லுடா" என்று அதட்டு வார்கள்.

நாட்டாமை 'ஆயிரம் ரூபாய்' என்று அபராதம் போடுவார். கொத்திப் பிடுங்குகிற அத்தனை பெரிய கூட்டத்தில், அம்மணமாய் நிற்கிற அவமான அவஸ்தை யோடு, நெடுஞ்சாண் கிடையாக விழுந்து விழுந்து

கும்பிடணும். புலம்பிக் கெஞ்சணும். ஒரு முறையல்ல... பலமுறை மரணம்.

செத்து செத்துப் பிழைப்பதுபோல வணங்கி எழ, வணங்கி எழ ஆயிரம் ரூபாய் சன்னஞ் சன்னமாய் இறங்கி வந்து... நூறு ரூபாயில் வந்து ஆணியடித்து நின்று கொள்ளும். அதைக் கட்டியாகணும்.

ஊர்க்கூட்டத்தில் குற்றவாளியாக நிற்பதே, நரகா வஸ்தைதான்.

இத்தனை அவமானங்களையும் எப்படித் தாங்க? சாவைவிடக் கொடிய இந்த வதையைத் தாங்கிக்கொள்ள மனசில் பலம் உண்டோ? அந்த அளவுக்கு மான உணர்வற்று, மரத்துக்போயா கிடக்கிறது, மனசு?

அதைவிடக் கொடுமை... இப்படியெல்லாம் காலடிச் செருப்பாக கேவலத்தில் இழுபடுகிற அளவுக்கு அவன் எந்தக் குற்றமும் செய்ததாகவும் அவனுக்குத் தோன்ற வில்லை. இன்னும் சொல்லப்போனால்... அவன் செய்தது குற்றமேயில்லை. நியாயம். நியாயத்துக்கான யுத்தம். சாதியின் மானத்தைக் காக்கும் போராட்டத்தில், ஒற்றை யாளாய் நின்று பயப்படாமல் போட்ட சண்டை.

பாராட்ட வேண்டிய ஊர்க்கூட்டம், தண்டிக்கக் காத்திருப்பதுதான், விநோதம்; அல்லது அவன் விதி. கோழைத்தனமான ஜனங்கள், தன்மானமில்லாத நடவடிக்கை. பயந்தாங்கொள்ளித்தனம்.

பயத்தையும் மீறிக்கொண்டு அவனுள் திமிர்கிற ரௌத்ரம். நடந்தது இதுதான்:

மேலக்காட்டில்—ஓடைக்குள்—செம்மறியாடுகள் மேய்ந்துகொண்டிருந்தன. ஓடையின் கரை இருமருங்கிலும் இறவைத் தோட்டங்கள். ஆடு மேய்த்துக்கொண்டிருந்த

ஆட்டுக்காரன் சுப்ரமணி, தேவமார் பையன். ஓடைக்கரை பூராவும் புதர்க்காடாய் செடிகள். பெரிய பெரிய வேலிமரங்கள், அடர்த்தியாய். வேலிக்கிளை நீள உச்சியில் ஏறிக்கொண்டிருந்த கரட்டானை இறங்கவிடாமல் 'சத்தக்காடு' போட்டு விளையாடிக் கொண்டிருந்தான். அதைத் துரத்திக்கொண்டு கொடுமை பண்ணிக்கொண் டிருந்தான். கொடி போன்ற மெல்லிய சாட்டையாய் வளைந்து அந்தரத்தில் தொங்கிய கிளையில் கரட்டாண் ஏற.... அதன் கனம் தாளாமல் அக்கிளை தாழ்ந்து தாழ்ந்து ஊஞ்சல் போல ஆட, கரட்டாண் பதறித் தவித்தது. பின்பக்கமாய் இறங்கவிடாமல் இவன். முன்பக்கமாய் போய் கீழே விழ முடியாமல், தரை ரொம்பக் கீழே. சாவு நிச்சயம் என்று அது முழித்த பயமுழி. அதில் சுப்ரமணிக்குக் குரூரக் கொண்டாட்டம்.

இவன் இந்தக் குஷியான விளையாட்டில் மனம் ஒன்றிப்போய் முழு மூச்சாய் ஈடுபட்டிருக்க... ஆடுகள் பத்துக்குமேல் நாடார் தோட்டத்திற்குள் விழுந்து வெறி வேகமாய் ஆவல் ஆவலாய் மேய—

நாடாரின் மகன், ரொம்பச் சின்னப் பையன். அவன் பருத்திச் செடிகளுக்குள் ஓட முடியாமல் தத்தளித்து ஆடுகளைப் பத்தினான். அழுகையும் வசவுமாய் ஓடி ஓடிப் பத்தி... பசுங் கொழை மேய்கிற ஆவலில் ஆடுகள் அவனை ஏமாற்றின. இவன் பருத்திச் செடிகளுக்குள் விழுந்து தடுமாறி... கூவ(ல்)க் காடு போட்டான்.

அந்தச் சின்னவன் போட்ட கூப்பாட்டில்தான், சுப்ரமணி சுதாரித்தான். பதறயடித்துப்போய் ஆடுகளை மடக்கிப் பத்தினான். சின்னவன் தாறுமாறாக வைதான். வயசைப் பார்க்காத வசவுகள்.

சுப்ரமணியும் பதிலுக்குத் திட்டினான்.

பக்கத்தில் விறகு வெட்டிக்கொண்டே பார்த்துக் கொண்டிருந்தான், சிந்தாமணி. பக்கா சாதிவெறியன். அடுத்த சாதியாட்களையெல்லாம் கடித்துத் துப்ப வேண்டுமென துடிக்கிறவன். அவன் ரத்தம் கொதித்துக் கொண்டிருந்தது. பார்வை பூராவும் அவனுக்கு இங்கே தான்.

சுப்ரமணி ஆடுகளை மடக்கிக்கொண்டே அந்தச் சின்னவன் வசவுக்கு பதிலாகத் திட்டுகிறபோது... நாடார் சாதி குறித்த ஓர் இழிவுச் சொல், தவறிப் போய் தெறித்துவிட்டது.

அவ்வளவுதான். சிந்தாமணி பாய்ந்து வந்தான். சகலத்தையும் மறக்கடிக்கிற சாதி வெறி.. அவனுள் தீயாக. சுப்ரமணியை இழுத்துப்போட்டு, 'சாத்து சாத்து' என்று பயங்கரமாய் மொத்திவிட்டான். சாதாரண மொத்து இல்லை... சுப்ரமணி கிழிந்து போகிற மாதிரி, புரட்டிப் புரட்டி எடுத்துவிட்டான்.

இதுதான் சம்பவம்.

தேவர் பிரமுகர்கள் ஆத்திரமும் ஆவேசமுமாக வந்து நாடார் பிரமுகர்களிடம் மோதினர்.

"என்ன சொல்தீக... இதுக்கு? கேட்டுக் கொடுக்கப் போறீகளா... இல்லே நியாயத்தை நாங்களே பாத்துக் கிடவா?"

ஒதுங்கிக் கொள்வது அத்தனை சுலபமல்ல. "நீங்களே அவனை என்ன வேணும்னாலும் செய்துட்டுப் போங்க" என்று பொறுப்பில்லாமல் ஒதுங்கிட முடியாது.

இதே விவகாரத்தை இதன் போக்கில் வளரவிட்டால் நாடார்—தேவர் சாதிச்சண்டையாக வெடித்துவிட்டால் என்ன செய்ய? பொறியைத் துவக்கத்திலேயே அணைத் தாக வேண்டும்.

நாடார் பிரமுகர்கள் பதற்றத்தோடு ஒப்புக்கொண்டனர். "சரி சொல்லிட்டீக. நாங்களே அந்தப் பயலை விசாரிச்சு, ஞாயப்படி தண்டிச்சிருதோம்."

"இந்த ஊரைப் பொறுத்தளவுலே தேவமாரும் நாடாக்கமாரும் தலைமுறை தலைமுறையா அண்ணன் தம்பிகளாக இருந்து வாரோம். அதனாலேதான் உங்ககிட்டே வந்து பொறுமையா சொல்லிக்கிட்டிருக்கோம். இல்லேன்னா... இப்ப நடக்குறதே வேற."

"ஒன்னும் மனசுலே வச்சுக்காதீக. உங்க பையன் வேற, எங்க பையன் வேறயா? யார் செய்ஞ்சாலும்... தப்பு, தப்புத்தானே? தண்டிக்காம விடுவோமா? சிந்தாமணிப் பயலைக் கூப்புட்டு விசாரிச்சு தொலியை உரிச்சு தொங்க விட்டுருதோம். சர்த்தானே?"

"அப்பச் சரி"...

இதற்குத்தான் மடத்தில் இந்த அவசரக் கூட்டம்.

சாதியின் மானத்தைக் காப்பாற்ற சண்டை போட்ட சிந்தாமணிக்கு... சாதியே தண்டனை தரக் கூடியிருக்கிறது. அவமானகரமான தண்டனை. சாவைவிடக் கொடிய அவமானம். தாங்கவே முடியாத ரணச் சாவு. சரணாகதி போன்ற இழிவான ரணம்.

சாதி வெறிபிடித்த சிந்தாமணிக்குள் இள ரத்தம் கொதித்தது. இந்தக் கூட்டமே தொடை நடுங்கிக் கூட்டமாகத் தெரிந்தது.

"அடிச்சதுக்கு நாங்க பைசல் பண்றோம். சாதி சொல்லி திட்டுனதுக்கு நீங்க என்ன செய்யப்போறீக?"ன்னு துணிச்சலாக ஒரு கேள்வி கேட்க, ஒருத்தன் நாவிலேயும் வீரமில்லாமப் போச்சே...

இந்தக் கோழைக் கூட்டத்தின் காலில் விழவே கூடாது. அதைவிட, உயிரை விட்டுவிடுவது ரொம்ப மேல்."

சிந்தாமணியின் கொதிக்கிற மனசுக்குள்... அம்மா. இவனைத் தவிர, வேறு நாதியில்லாத அம்மா. கூலிக் காரியாக உடம்பைக் கடம்பாகக் கடைந்து, இவனை வளர்த்த— வளர்க்கிற— அம்மா.

அய்யா முகம் தெரியாமல் வளர்த்த அம்மா. அய்யா முகத்தை மனசு தேடாத அளவுக்கு, எல்லாமாக நிறைந்து காத்துப் போஷித்த அம்மா.

அவனுக்கு என்ன செய்வது என்று தெரியாத குழப்பம்.

மூச்சு முட்டல். தகிப்பு. மொத்த வாழ்க்கையும் நிர்ணயித்த கடின கணம். வலிய தருணம்.

வேப்பமரக் கொண்டைக்குள் சிக்கிக்கொண்ட பேனாக... அவன் தவிப்பு.

## 6

என்ன செய்றது? எந்த முடிவுக்கு வர்றது?

சிந்தாமணிக்கு ஓர் இழவும் புரியவில்லை. எல்லா வழிகளும் அடைபட்டுக் கிடக்கிற இறுக்கம்... எந்தப் பாதையுமற்றுப் போன திணறல்... ஆனால், எங்காவது நகர்ந்தேயாக வேண்டிய கட்டாயம்.

திகைப்பு... திகைப்பு... திகைப்பின் முற்றுகைகள்...

வேப்பமரத்துக் கொண்டை இருட்டுக்குள் எம்புட்டு நேரம் இருப்பது? கட்டெறும்புகள் வேறு பனியனுக்குள் ஊர்கின்றன. உடம்பெல்லாம் ஊர்ந்து 'நறுக், நறுக்' என கடிக்கிற சிற்றெறும்புகள் வேறு.

சொறியவும் முடியவில்லை; சொறிந்தால் வேப்பிலை கள் கூப்பாடு போடும். கிளைகள் ஆடும். காட்டிக் கொடுத்துவிடும்.

அம்மா இப்பவும் பதற்றமும் கண்ணீருமாக தலை யிலடித்துப் புலம்பிக்கொண்டிருப்பாள். "வழியிலே போற சனியனைப் பிடிச்சு, பிடறியிலே ஏத்திக்கிட்டானே, பாவிப்பய. பெத்த வவுத்துலே தீயை வைச்சிட்டானே" என்று நெஞ்சில் அடித்து அழுது சாவாள்.

அம்மா... அம்மா... அம்மா.,.

அம்மாவின் நம்பிக்கையும் இவன்தான். ஆறுதலும் இவன்தான். அம்மாவுக்காகப் பணியுறதா? பணிஞ்சு இந்தத் தொடை நடுங்கிக காலலே வுழவா? சாதி உணர்வில்லாத கோழைக காலலே விழுந்து கும்பிட்டு வணங்கி, அவமானப்பட்ட பிறகு... இந்த ஊர்லே இருக்கவா? அவமானத்துலே கிழிஞ்ச மூஞ்சியோட, இந்த ஊர் ஜனங்களோட பழகி வாழவா? முடியுமா? முகம் கொடுத்து உறவாட முடியுமா?

அவமானத்தீயிலே அவிஞ்சுபோன மனசுக்குள்ளே, ஊர் ஜனங்களோட பரிகாசப் பார்வை முள்முள்ளாய் குத்திக் கிழிக்குமே... காலமெல்லாம் ரத்தம் வழியுமே... அசிங்கப்பட்டு பிரேதமா உயிர் வாழ்றதைவிட, பிரேத மாகவே செத்துப் போயிடலாம்.

அம்மா?

அம்மா என்னை நம்பி மண்ணில் பிறக்கலே. அவா வவுத்துலேதான் நான் பொறந்தேன். அம்மா கூலிக்காரி. உழைப்பாளி. உடம்புலேயும் மனசுலேயும் வைராக்கியம் இருக்கும். வாழ்க்கையோட மல்லுக்கட்டுகிற வலிமை இருக்கும். சமாளித்துக் கொள்வாள்.

இளவட்டங்கள் நாலைந்து பேர் சேர்ந்தாற் போல மரத்தைக் கடந்து போகின்றனர். நடையில் ஒரு தீவிரம். ஒரு வேகம்.

"எங்க போய்த் தொலைஞ்சான்... அந்தப்பய?"

"மாயமாயிட்டானே. எங்கே தேடுனாலும், ஆப்புடவே மாட்டேங்கானே..."

"ஊர்ப் பெரிசுக நம்மளையும் 'உஸ்ஸு'ன்னு உக்கார விடமாட்டேங்குறாக... சிந்தாமணியை இழுத்துட்டு வாங்கன்னு உசுரைப் புடுங்குறாக."

"ச்சேய்! இந்தப் பிசாசு எங்க போய்ப் பம்மிக் கிட்டானோ?"

இருட்டின் நிழற் கற்றைகளாக அவர்கள் போய் விட்டனர். கரைந்து மெலிகிற பேச்சு. தெரு முக்கைத் தாண்டிவிட்டனர். ஊர்முழுக்க வலைவிரித்துவிட்டார்கள். அலசித் தேடுகிறார்கள். தீவிர வேட்டை. சிக்கினால்... சிக்கல். இழிவு. ஏழு தலைமுறைக்கும் தீராத அவமானம். ஏழுவண்டிக் கேவலம்.

ஒரு முடிவுக்கு வந்துவிட்டான். வேறு வழியற்ற வழி. சூழலின் வெக்கை வெள்ளத்தில், தக்கையாக மிதக்கிற பயணம். எதையும் சிந்திக்க மறுக்கிற வெறித்தனப் புறப்பாடு.

மரத்திலிருந்து பூனை போல அரவமற்று இறங்கினான். கிழக்குத் திசையில் ஓட்டம் பிடித்தான். பாதைகளைத் தவிர்த்துவிட்டு, புஞ்சைகளின் நெஞ்சுகளில் குறுக்காக ஓடினான். பொழிகளில் வழுக்கி விழுந்தான். உழவுக் கட்டிகள் அவனை இடறிவிட்டன. உருட்டிப் புரட்டியது. எதையும் பொருட்படுத்தாமல், கண்ணை மூடிக்கொண்டு ஓடினான், கண்டமேனிக்கு. அவனுக்குத் துணையாக இருட்டு. பயம். ரோஷம். தார்மீகக் கோபம்.

மூன்றுமைல் தூரம். பாதை தெரியாத கரிசல் காட்டு ஒற்றைத் தடம். குத்துமதிப்பாக நடந்தான். முள்ளுக் காடுகள். தொடைகளைக் கிழிக்கிற இலந்தைமுள். கண்மாய்க் கரைப்பாதை. பாதமெல்லாம் குத்தி வலிக்கிற சலங்கை முட்களாக கரிசல் கட்டிகள். எல்லா ரணங் களையும் பல்லைக் கடித்துச் சகித்துக் கொண்டான்.

'கிய்ய்ய்ங்'கென்று இருட்டு. எல்லையற்ற பரந்த வானக் கறுப்பு. அள்ளி இறைத்த நெருஞ்சிப் பூக்களாக நட்சத்திரங்கள். ஊளைக் காற்று. காட்டுநரிகளின் நீட்டி முழக்கிய ஊளைகள்.

கண்டமேனிக்கு கலைந்து பாய்கிற செம்மறிகளாக தறிகெட்டோடுகிற எண்ணங்கள்.

திருவேங்கடம் வந்து விழுந்தான். அகால நேரம். சாமத்தை நெருங்கும் சமயம். திருவேங்கடம் பஜாரில் ஓட்டல். சாப்பிட்டு முடித்த திருப்தியோடு சிகரெட் புகைய, ஆக்ஸிலேட்டரை மிதிக்கிற லாரி டிரைவர். கோவில்பட்டி போகிற முனைப்பில் உறுமுகிற செங்கல் லோடு லாரி. டிரைவரிடம் கெஞ்சிக் கூத்தாடினான். "சரி... ஏறித்தொலை."

லாரி கடகடத்த கிழட்டு உறுமலோடு பாய்ந்தது. அவன் தலைக்கு மேல் கன்னங்கரேலென்று புளியமரத் தலைகள் பின்னோக்கி ஓடின.

அம்மாவிடமிருந்து— பிறந்து, தவழ்ந்து, விளையாடிப் புரண்ட ஊரிடமிருந்து இவனைப் பிய்த்துக் கொண்டு... தூரம் தூரமாகப் போகிற லாரி.

எங்க போறோம்? என்ன செய்யப் போறோம்?

இந்தக் கேள்விகள் அவன் மனசை அதிரச் செய்தன. 'மனமெல்லாம் சூழ்ந்து கவிந்துகொண்ட சூன்யம்.

இந்த நினைவுகளே பிரம்மாண்டமாய் அவனைச் சுற்றி வளைத்தன. நெரித்தன. நெஞ்சுக்குள் திணறல். தவிப்பு, லாரி அதிர அதிர... அவனுள்ளிருந்து விம்மி விடைத்து வெளிப்படுகிற மனசாக அழுகை. அம்மாவை நினைக்க நினைக்க நினைக்க கேவிக் கேவி அழுதான். அம்மா... அம்மா...

மகனைக் காணாமல் தேடித் தவிக்கிற அம்மா. ஆட்களிடம் ஓடி ஓடிக் கேட்டலைகிற அம்மா. தொலைந்து போன ஒற்றைப் பிள்ளையை எண்ணி எண்ணிப் புலம்பிக் கதறுகிற அம்மா. "என்னைத் தவிக்க விட்டுட்டு ஓடிப்போக எப்புடிடா மனசு வந்தது, அடப் பாவிப் பயலே?" என்று தலைவிரிகோலமாக அழுது அரற்றுகிற அம்மா.

சிந்தாமணி கன்னத்தில் வழிகிற கண்ணீரைப் புறங் கையால் துடைத்துக் கொண்டான். விம்மி வெடிக்கிற கேவல்கள். விக்கலைப் போல தொடர்கிற விசும்பல்கள்.

எந்தத் திசையில் போகிறோம்? பிழைப்புக்கு என்ன வழி? அடுத்த வேளைச் சோற்றுக்கு என்ன செய்றது?

சுற்றிலும் கற்றை இருட்டு. கண்களை இருட்டிக் கொண்டு வந்து மொய்க்கிற நினைவுக் குழப்பம். பயம். மனசின் உள் ஆழத்தில் கவ்விப் பிடிக்கிற நிராதரவுணர்ச்சி.

கோவில்பட்டி ரயில்வே ஸ்டேஷன். வந்து நின்ற ரயிலில் குருட்டாம் போக்கில் ஏறிப் பம்மிக் கொண்டான். திருச்சியில் டி.டி.ஆர். கறுப்புப் பூதமாக நெருங்கிவர பதற்றத்தில் இன்னது செய்வது என்று திகையாமல் பீதியில் இறங்கிவிட்டான்.

ஒன்றும் புரியவில்லை. பழக்கமில்லாத அந்நிய மண்.

இருட்டுப் புதர்களுக்குள் நடக்கிற காட்டுப் பிராணியைப் போல முரட்டுத் தைர்யத்தில், கால்போன போக்கில் நடந்தான்.

பசி வேறு கொத்திப் பிடுங்குகிறது. கையில் துட்டு மில்லை. ஊரைத் தவிர வேறு எங்கும் போயறியாத பட்டிக் காட்டுப் பாமரன். திருச்சியின் அசுர வேகமும், ஜன அடர்த்தியும் அவனை மிரட்டியது. யாரிடம் என்ன கேட்க? வாய் வரவில்லை. திகைப்பின் கைதியாக... அவன்.

கூட்டத்தைக் கண்டு மிரண்டு மிரண்டு ஜனநெரிசலில் சிக்குண்டு, தள்ளப்பட்டு அவன் வந்து நின்ற இடம், பட்டாளத்துக்கு ஆள் எடுக்கிற இடம். செம்மண்ணில் கடலாய் விரிந்து கிடந்த கிரவுண்டு. கட்டிடங்கள். மலர்ச்செடிகள், மலரில்லாத மலர்போன்ற வண்ணச் செடிகள். எல்லாம், தொட்டிகளில் அணிவகுப்பாக...

இவனும் வாலிப வரிசையில் நின்றான், பேந்தப் பேந்த விழித்துக்கொண்டு. பின்னால் இருப்பவர்களால் நகர்த்தப்பட்டான். அடிவயிற்றில் சுருக்கிடுகிற வலி. பசி மறந்துபோன வறண்ட வலி. கவ்விப் பிடிக்கிற வேதனை.

சூழ்ந்திருந்த வெறுமையே—நிராதரவுணர்வே—அவனுள் ஒரு பலமாக இருந்தது. கிடைக்கிற துரும்பைப் பற்றிக்கொண்டாவது உயிர் வாழ்கிற வெறி. வாழ்வின் வேட்கை.

இதுதான்... அவனை இக்கணத்தில் இயக்குகிற ஒரே பலம், ஆத்மபலம்.

அந்தக் கிரவுண்டில் பையன்களோடு வெறிகொண்டு ஓடுகிறபோது... இந்தச் சூன்யம்தான் வீர்யம் தந்தது. உள்ளாற்றல் முழுவதும் போர்க்குணமாக பீறிட்டது.

பசிக் கிறுகிறுப்பை சமாளித்தான்.

மெடிக்கல் டெஸ்ட்டில் நிர்வாணமாக நிற்கவேண்டி யிருந்த போது, சாவைச் சந்திக்கிறவன் போலத் தவித்தான். பிய்த்துக் கொண்டு ஓடிவிடுவோமா என்று அலைபாய்கிற கூச்ச மனசு.

எங்கே ஓட? ஓடி எங்கே போக? என்ன புகல்?

இந்தக் கேள்வியின் மூர்த்தண்யம்தான்... அந்தக் கிராமத்தானின் இயல்பான கூச்சத்தைத் தின்று தீர்த்தது.

ஊரை விட்டுப் புறப்பட்ட பிறகு... அவன் சாப்பிட்ட முதல் சாப்பாடே, பட்டாளத்து ரேஷன்தான்.

பஞ்சாப்பில்—ஜபல்பூரில்— டிரெயினிங்.

புதிய உலகம். முழுக்க முழுக்க அந்நிய உலகம். ஒரு புதிய சூழலே; வாய்பிளந்து அவனை விழுங்கிக் கொண்ட மாதிரியிருந்தது.

முஸ்லீம்கள்..... மலையாளிகள்... தெலுங்கர்கள்... .இந்திக்காரர்கள்... கன்னடியர்கள்... சீக்கியர்கள். புரியாத பாஷைகள். உணர்வைச் சுமந்த ஒலிக் குழப்பங்கள். அந்நியமான உருவங்கள். வகை வகையான தோற்றங்கள். வேறு வேறு ரகமான முகங்கள். மனிதர்கள் என்கிற ஒரே இணைப்புக் கயிறு.

அவனுக்குக் கண்ணைக்கட்டிக் காட்டில் விட்ட மாதிரியிருந்தது. "மதறாசி... மதறாசி" என்று இவனைக் கூப்பிடுகிற சக வாலிபர்கள்.

ட்ரெயினிங் தருகிற ஆபிஸர்களில் ஒருவர், தமிழர். அவரும் தேவர். திருமங்கலத்துக்காரர். 'தெற்கத்திக்காரன் இவன்' என்கிற தனித்த விஷயத்தை விசேஷமாகக் கவனித்தார்.

சிந்தாமணியிடம் அவர் ரொம்பப் பாசமாக இருந்தார். இவனது கண்களின் ஒளியாக— இவனது மொழியாக— அவர் இருந்தார். அவர் செய்த உதவிகளுக்கு—ஒத்தாசை களுக்கு—கணக்கு வழக்கேயில்லை.

பட்டாளம் எனும் புதிய உலக அனுபவம், இவனது மனத்தின் நிறத்தையே சலவை செய்து மாற்றியது. அவனது

சிந்தனையை இறுகப் போர்த்திக் குறுக்கிப் போட்டிருந்த தோலை உரித்தது. ஆத்மா சுதந்திரப்பட்டது. தேச மனிதர்கள் என்ற பெரும் பிரம்மாண்டத்தில், சாதி என்பது எத்தனை அற்பமான விஷயம் என்று உணர்த்தியது.

மானுடம் என்ற ஒன்றே நிஜம் என்பது.... அவனது அனுபவத்தில் மலர்ந்தது. இந்திக்காரனின் இனிய புன்னகையும், சீக்கியனின் வலிமையான தைர்யமூட்டலும், மலையாளியின் அன்பான தோழமையும், முஸ்லீமின் கருணை மிக்க தழுவல்களும் அவனுக்குள் மனவெளிச்ச மான உணர்வனுபவமாகியிருந்தது. அதிலும், அந்த ஆபிஸர் தேவரின் அன்பு, இவனை ரொம்ப அசத்தி விட்டது.

பதவி வித்தியாசங்களையெல்லாம் கடந்து வந்து இவன்மேல் படர்ந்த அந்த அன்பின் ஒளியில்... இவனது குற்றம் இவனுக்குத் தெரிந்தது, துல்லியமாய்.

சுப்ரமணியை ஓடை மண்ணில் போட்டு முரட்டுத் தனமாய் புரட்டிப் புரட்டி எடுத்த காட்சி, மனசுக்குள் நெருடல் நெருடலாய் நினைவுக்கு வந்தது. முள் முள்ளாய்க் குத்தியது.

ட்ரெயினிங் முடிந்தவுடன்... லீவ் கிடைக்கிற வாய்ப்பு.

அம்மாவை நினைத்து ஏங்கினான். தாய்மடி போன்ற ஊர்ப்புழுதியில் உள்ளங்கால், பதிக்க ஆசைப்படுகிற துடிப்பு. சமவயதுக் கூட்டாளிகள் முகங்களைத் தரிசிக்க வெறி கொள்கிற தவிப்பு. உள்ளூர்க் காற்று... அந்த ஆகாயம். அந்த வேலிக்காட்டின் உஷ்ணமூச்சு .மாடுகளின் மூத்திர வாசம்.

ஏக்கத்தைக் காலில் போட்டு மிதிக்கிற நிதர்சனம். தொலியை உரித்துத் தொங்கப் போடக் காத்திருக்கிற

தேவமார்களின் கோபம். நெற்றிமட்டக் கம்புகளோடு குரூர வெறியோடு சூழ்ந்து நெருக்கி சூறையாடக் காத்திருக்கிற வன்மம். அவனை பயமுறுத்தியது. அடி வயிற்றைக் கலக்கியது. விதம் விதமான அச்சுறுத்தலான கற்பனைகள்...

லீவை தவிர்த்துவிட்டான்.

அடுத்த ஆறு மாதம். அப்போதும் அந்த லீவ் வாய்ப்பைத் தவிர்த்துவிட்டான். அதே பயம். அணுஅணுவாக வதைக்கிற பயம். உண்ணும் போதும், உறங்கும் போதும், வைகறை இருட்டில் மூச்சிரைக்க ஓடுகிற போதும், ரைபிளை க்ளீன் பண்ணுகிற போதும் மனசை முள்ளாகக் குத்தி ரணப்படுத்துகிற அதே பயம்.

அவன் லீவைத் தவிர்த்த விதம், தேவர் ஆபிஸருக்கு அனாவசியமாகப் பட்டது. கவனிக்கும்படி உறுத்தியது.

அதிகாலையில் தினசரி நடக்கிற பேரெய்டுக்குப் பிறகு... அவனைத் தனியாக அழைத்தார்.

“சிந்து... நீ இப்பவும் லீவுக்கு அப்ளை பண்ணலியா?”

“இல்லே சார்.”

“ஏன்? ஊருக்குப் போகணும், அம்மாவைப் போய் பாக்கணும்னு தோணலியா?”

“தோணுது சார்.”

“அப்புறம் ஏன் அப்ளை பண்ணலை? எனி ரீஸன்?”

“சும்மா... தான்.”

“என்ன சும்மா...? சும்மான்னு ஒரு ரீஸனா?”

“....................”

“ரைட். இப்பக் கேக்குறேன், வீட்டுக்கு லெட்டராச்சும் போட்டியா?”

"போடலை சார்."

"ஒன்னு கூட?"

"இல்லே சார்."

"ஏன்?"

கால் பெருவிரலில் நங்கூரமிட்ட பார்வை. தத்தளிக்கிற அவன். அவனையே கூர்ந்து பார்த்தார். கனிவான குரலில் அதட்டினார்.

"ஏய்... சிந்தாமணி, நீ இப்ப ஒரு ஜோல்ஜர். வீரமுள்ள ஆம்பளை. நிமிர்ந்து பார்... உண்மையைச் சொல்லு... என்ன விஷயம்?"

தடுமாற்றமாய் நிமிர்ந்தான். வியர்வையில் எண்ணெய் கசிற முகம்.

அவரது சிவந்த—அகன்ற—முகம். துல்லியமான மேல் வளைவுகளோடு முறைக்கிற மீசை. நாற்பதை நெருங்குகிற வயது. அவரது இடுங்கிய கண்களில், மகனைப் பார்ப்பது போன்ற உணர்வு. அப்படியோர்... மிருது. குழைவு.

அவன் தயங்கினான். அலைபாய்கிற கண்கள், பிடிபட்ட குருவிகளைப் போல. உள்ளடங்கிக் கிடந்த கொதி உணர்ச்சிகள் பீறிட்டன. கண்ணோரங்களில் ஈரக்கசிவு. என்னத்தைச் சொல்ல? எப்படிச் சொல்ல? தேவமார் பையனை அடித்ததை—ஊரிலுள்ள தேவமார்கள் அடிப்பதற்காகவும், அவமானப்படுத்தவும் காத்திருக்கிற பயங்கர நிஜத்தை எப்படிச் சொல்ல? அதுவும்... இவரிடமே சொல்வதா?

அவனுக்கு அவனே கசந்தான். குற்ற உணர்வின் அவஸ்தை. தாளமுடியாத தத்தளிப்பு.

"கமான்... க்விக்... என்ன தயக்கம்? ஃப்ரீயா பேசு."

அவரது கனிந்த குரலில் மெல்லிசான அதிகாரத் தொனி.

நிமிர்ந்து பார்த்தான். குழைவான அவரது முகம். கனிவான கண்கள். அதில் ததும்புகிற பாசம். பரிவுணர்ச்சி. உள் மனசின் ஆழத்தில் மயிலிறகாக நீவுகிற அன்புணர்ச்சி.

உடைந்துவிட்டான். அழுது விசும்பும் முகத்தோடு கரகரத்த குரலில் சகலத்தையும் கொட்டித் தீர்த்தான்.

அதிகார மிடுக்கை யெல்லாம் களைந்துவிட்டு வெள்ளையாகச் சிரித்தார். சகஜபாவமான தோழமையான சிரிப்பு. பொம்மையைப் பார்த்துவிட்ட குழந்தையின் சிரிப்பு. மகிழ்ச்சியும் பரிகாசமுமான சிரிப்பு. சிரிக்கத் தக்கதா என்னோட பயம்? பயந்து பயந்து நிமிஷத்துக்கு நிமிஷம் நடுங்கிக்கிட்டிருக்கேனே... இது பரிகாசத்துக் குரியதா?

"அட... இடியட், நான்சென்ஸ்! இதுக்கா... பயந்துக்கிட்டு இத்தனை நாளா செத்துக்கிட்டிருக்கே? ரியலி யூ ஆர் ஏஃப்பூல்."

இவனது கலக்கம் விலக...திகைப்புடன் அவரைப் பார்த்தான்.

"யாரந்தப் பையன்? என்ன பெயர் சொன்னே? சுப்ரமணியா?"

"ம்."

"அந்தப் பையனை அடிச்சது தப்புன்னு... நீ இப்ப ஃபீல் பண்றியா? உன்னோட ஃபீலிங்ஸ் நிஜமா? சொல்லு."

"ஆமா... சார். நெசந்தான்."

"அப்போ... அதே உணர்வுகளோட அந்தப் பையனுக்கு ஒரு லெட்டர் போடு."

"ம்."

"உங்க வில்லேஜுக்குப் பஸ் இருக்கா?"

"இல்லே சார்...திருவேங்கடம் இறங்கி... அங்கிருந்து சைக்கிள்லேதான் போகணும்."

"ஆல் ரைட். 'திருவேங்கடம் இன்ன டேட்லே வர்றேன், சைக்கிளோட வந்து சேரு'ன்னு ரெண்டாவது லெட்டர் போடு."

"போட்டா....?"

"நீங்க ரெண்டுபேரும் ஃபிரெண்ட்ஸ் ஆயிருவீக."

"நடக்குமா... சார்?"

"டெஃபனட்டா நடக்கும்."

வியப்பும் சந்தேகமுமாய் அவரைப் பார்த்தான். அவரது நம்பிக்கையை இவன் நம்பினான். வேறு புகல்?

இந்தக் கோணத்தில் இவரால் எப்படிச் சிந்திக்க முடிந்தது? இத்தனை மாதங்களாக இவனை உறங்க விடாமல் போட்டுப் பிறாண்டி, அவஸ்தைப்படுத்திய ஒரு பயங்கரமான பிரச்சினைக்கு... இத்தனை சுலபமான ஒரு தீர்வைத் தந்துவிட்டாரே....

"ரொம்ப ஆச்சரியப்படாதே... மைடியர் பாய்! இது ஒன்னும் என்னோட மேதாவித்தனமான புதிய சிந்தனை யில்லே. காலம் காலமா... நம்ம ஊருப் பெரியவங்க கடைப்பிடிக்கிற ரொம்ப ரொம்பச் சாதாரணமான டேக்டிக்ஸ்தான்."

"அப்...படியா... சார்?"

"ஆமா... 'சாட்சிக்காரன் கால்லே வுழறதைவிட, சண்டைக்காரன் காலில் வுழுந்துரலாம்'னு ஒரு பழமொழி... நீ கேட்டதுல்லே... நம்ம காடுகள்லே?"

அசந்து போனவனாக சிந்தாமணி, அவரைப் பார்த்தான். அந்த ஆபிஸர், இவனது குலதெய்வமாய்—பிரம்மாண்டப் பேருருவமாய்—தெரிந்தார்.

இவனுக்குள்... இவனது ஊர். அம்மா. ஊர்ப் புழுதி வாசம். ஊரின் சம வயதுச் சிநேகிதர்கள்.

அலை அலையாய் ஆர்வப் பெருக்கு.

இப்போதே ரயில் ஏற வேண்டும் போல... உள் பரபரப்பு.

இவனது தோளைப் பரிவுடன் தட்டிக் கொடுத்தார்.

"ரைட்... உடனே லெட்டர்ஸ் போடு. லீவுக்கு அப்ளை பண்ணு."

அவர் போய்விட்டார். சிந்தாமணி மனம் ஊரை நோக்கிப் பயணப்பட்டது. ஆபிஸர் கணக்கு பிசகி விட்டால்...? ஊர் போய்ச் சேர்ந்தவுடன்... "வந்துட்டான் பயந்தாரிப்பய... இவனைப் பிடிச்சு மரத்துலே கட்டிப் போடுங்கடா" என்று ஆர்ப்பரித்தால்...

சிந்தாமணிக்குள் மெல்லிசாக திகில் படர்ந்தது.

## 7

ஏழரை மணி. இருட்டிவிட்டது. கோவில்பட்டி பஸ் ஸ்டாண்டு ஒளிமயமாயிருந்தது. ஜெகஜோதியாயிருந்தது. அலைமோதுகிற வெளியூர் ஜனம். அங்கும் இங்குமாய் மூட்டை முடிச்சுகளோடு சத்தமறிந்து ஓடித்திரிகிற ஜனநெரிசல். தனியார் பஸ்களின் தொடர் உறுமல். சந்தைக்காட்டு வெங்காய வியாபாரிகள் கூச்சல் மாதிரி

பஸ் ஏஜெண்ட்களின் அழைப்புக் குரல்கள், கூவல்களான குரல்கள்.

நற்கால முகூர்த்தம்பட்டி 'நக்கலமுத்தம் பட்டி'யாகிறது வானரமுட்டி 'வான்ரட்டி'யாகிறது. இளையரச நேந்தல் 'எளேந்தூரரா'கிறது. திருவேங்கடம் 'திரேங்கொடமா'கிறது. ராஜபாளையம் 'ராசிளியமா'கிறது.

ஏஜெண்டுகளின் கூப்பாட்டுக் கரைச்சலில் ஊர்ப் பெயர்களெல்லாம் சிதைந்து, தேய்ந்து, மூளியாகி குறைப் பெயர்களாகின்றன.

சூட்கேஸ்—லக்கேஜ்களுடன் குதிரை வண்டியில் வந்து இறங்கினான், சிந்தாமணி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து. அவனுக்குள் மருட்சி. குழம்பி இருண்டு கிடக்கிற மனம். ஊருக்குப் பக்கத்தில் வந்துவிட்டோம் என்கிற மகிழ்ச்சியும், மிரட்சியும், கண்டமேனிக்கு மனசு கிடந்து எதை எதையோ நினைத்து அரண்டு கிடக்கிறது, பிணையலில் மிதிப்பட்ட கம்பங்கதிர்களைப் போல.

'பாலன்' பஸ்ஸில் ஏறிப் போகணும். திருவேங்கடம் போய்ச் சேர மணி பத்தாகிவிடும். சுப்ரமணி வந்திருப் பானா...? அலட்சியமாய் ஆடுகளைப் பத்திக்கொண்டு கிடைக்குப் போயிருப்பானா?

கடிதம் கண்டவுடன் என்ன நினைத்திருப்பான்? இகழ்ச்சியாய் ஏளனச் சிரிப்பு சிரித்திருப்பானோ? எல்லாரிடமும் கடிதத்தைக் காட்டி கேலி பண்ணி கெக்கொலி கொட்டிச் சிரித்திருப்பானோ?

"பயந்தாரிப்பய... தொடை நடுங்கிட்டான். காயிதத்து லேயே கால்லே வுழுந்துருக்கான். வரட்டும்... ராஸ்கல்" என்று ஊர் முழுக்க சிரிப்பாணியாகக் கிடந்திருக்குமோ... ஊர்ப்பட்ட கேவலமாகியிருக்குமோ...

*ஊர் போய்ச் சேர்ந்தால்... அம்மா அழுவாள். கண் காணாமல் தொலைந்துபோன ஒத்தை மகன் வந்துவிட்ட சந்தோஷத்தில் கதறிக் கதறியழுவாள். ஆனால்... ஊர்? சுப்ரமணியன் சாதிக்காரர்கள்?*

*கம்பு, கத்தி, அரிவாளோடு கூட்டமாய் வீட்டை முற்றுகையிடுவார்களோ? கோபம் தணியாமல் குமுறிக் குமுறி, வருவார்களோ? 'அடிக்காமல் விடமாட்டோம்' என்று கொக்கரிப்பார்களோ? சுப்ரமணியிடமே கம்பைக் கொடுத்து... "அந்தப் பயலைப் போய் அடிச்சு நொறுக் குடா... நாங்க நிக்கோம்" என்று சுற்றி நின்று மிரட்டு வார்களோ...*

*சிந்தாமணிக்குள் வியர்வை ஊற்றுக் கசிவு. பதற்றம். பதினெட்டு வயசு இளைஞன். குற்ற உணர்வின் உறுத்தல், உளைச்சல். விதம்விதமான கற்பனைகள். நரம்புத் தளர்ச்சி நோயாளியைப் போல... பயங்கரம் பயங்கரமான பீதிக் கற்பனைகள் அடிவயிற்றில் 'பகீர், பகீ'ரென்கிற ஜில்லிடல்.*

*'இப்படியே திரும்பி ரயிலேறி விடுவோமா?' லீவை கேன்சல் பண்ணிட்டு, ரெஜிமெண்டில் போய் விழுந்து விடுவோமா?' என்றோடுகிற நினைவுகள். வெருண்ட மனசில் அடிக்கடி தலைநீட்டுகிற கிலி உணர்வுகள். குடையைக் கண்ட காளையென... கழிச்சலெடுக்கிற மனசு.*

*சிந்தாமணிக்கு வயிறு பசித்தது. பஸ் நிலையத்துக்கு எதிர்த்தாற் போல நிறைய ஹோட்டல்கள். சேவுக் கடைகள். இனிப்புகள் நிறைந்த 'லாலா' கடைகள்.*

*ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தான். புரோட்டா கோழியை விழுங்கினான். சேவுக்கடையில் மிக்சர், சீனிமிட்டாய் வாங்கினான். ரெண்டு ஓலைப் பெட்டிகளில் பார்சல் பண்ணிக் கொடுத்தார்கள்.*

யானை சிகரெட் பாக்கெட்கள் பத்து வாங்கி வைத்துக் கொண்டான். ஊரில் சிகரெட் கிடைக்காது. சொக்கலால் பீடி மட்டும்தான் கிடைக்கும்.

பஸ்ஸில் ஏறிக் கொண்டான். மஞ்சள் நிறப் 'பாலன்' பஸ் அரைக் கால் டவுஷர் போட்ட கண்டக்டர் டிக்கெட் போட்டுக் கொண்டு வந்தார்.

இவனும் வாங்கிக் கொண்டான்.

பஸ் உறுமலோடு புறப்பட்டு வேகமெடுக்க... கற்றை கற்றையாக முகத்தில் வந்து மோதிய காற்று. புழுக்கத்தை முத்தமிட்ட காற்றின் சுகப்பரவசம், தாள முடியாமல் கண்களை மூடினான்.

மனசுக்குள் ரெஜிமெண்ட். கேண்டின் தட்டேந்தி உண்ட உணவு. கூடாரத்தில் ஓய்வெடுக்கிற இடத்தில் ரைபிளை—பூட்ஸை துடைத்து பளபளப்பேற்றிய விதம்... ராணுவ வேன்கள்... பாதையற்ற அடர் வனத்திற்குள் ஊர்ந்து ஊர்ந்து நகர்ந்த அனுபவங்கள்... வைகறை இருட்டில் வேர்க்க ஓடிய பேரெய்டுகள்...

கண்களைத் திறந்தான்.

வெருண்டு வெருண்டு பின்னோக்கி ஓடுகிற இருட்டு மரங்கள். வட்டச் சுழற்சியாக உருண்டோடுகிற கரிசல் காடுகள்.

ஒவ்வொரு ஊரின் மஞ்சள் போர்டுகளையும் பஸ்ஸின் ஹெட்லைட் வெளிச்சத்தில் உற்று உற்று வாசித்தான். ஊரின் பழைய நினைவுகள். ஞாபக மடிப்புகளுக்குள் மயிலிறகுளாக... புழுதி படிந்த நினைவுகள்.

லாரிக்குள் உட்கார்ந்து அழுதுகொண்டே இந்த ரோட்டில் போன அந்த நாட்கள்...

பஸ், திருவேங்கடம் பஸ் ஸ்டாண்டிற்குள் வட்ட மடித்து நின்றது. பஸ் ஸ்டாண்டில் அவ்வளவாக ஆட்கள் இல்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாக ஒரு சிலர் மட்டும்தான். இறங்கிய சிந்தாமணியின் கண்கள், படபடக்கிற நெஞ்சுடன் சுற்றிப் பார்த்தன.

'சுப்ரமணி வந்துருக்கானா' என்கிற ஆவல் பரபரப்பில் மனசு.

நின்றிருந்த ஒருசிலரில் சுப்ரமணியும் ஒருவன். கைலியை மடித்துக் கட்டியிருந்தான். உடம்பில் பூப் போட்ட அரைக்கைச் சட்டை. தலையில் வட்டக் கட்டாக தலைப்பாகை. எண்ணெய் வழிகிற அதே பழைய முகம்.

இறங்கி நின்ற சிந்தாமணியை ஒரு திகைப்புடன் பார்த்தான். சின்னக் குழப்பம். மருண்டு குழம்புகிற கண்கள். அடையாளம் தெரிந்தவுடன், அவன் முகத்தில் லைட் போட்ட மாதிரி மகிழ்ச்சி வெளிச்சம்.

ஓட்டமாய் ஓடி வந்து சிந்தாமணியைச் சேர்த்து கட்டிக்கொண்டான். அவன் முகமெல்லாம் சிரிப்பு. காணாததைக் கண்டுவிட்ட பரவசச் சிரிப்பு. தத்தளித்துப் பாய்கிற மனசின் மகிழ்ச்சிப் பிரவாகம்.

"ஏய், சிந்தாமணி... அட, நீதானா? அடேங்கப்பா... அடையாளமே தெரியலியே."— பூரித்துப்போன மனக் கொந்தளிப்பில் முகமெல்லாம் விரிய... விலகி நின்று சிந்தாமணியை மேலும் கீழுமாய்ப் பார்த்தான். அவன் கண்ணோரங்களில் நீர்த்துளி முகங்கள்.

பூட்ஸ்... பேண்ட்... ஷர்ட்... தொப்பி... இடையில் பெல்ட்...கிராமத்துச் சொறசொறப்பை இழந்து, மிருதுவும் மினுமினுப்பும் ஏறியிருக்கிற முகம்.

"ஏய், சிந்தாமணி... ஆளே மாறிட்டேப்பா.... பெரீய்ய ஆபிஸர் கணக்கா இருக்கீயே..."

சகலவிதமான மன உளைச்சல்களும், பயங்களும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து மாயமாக... சுப்ரமணியின் சந்தோஷமும் பரவசமும் சிந்தாமணியையும் அப்பிக்கொண்டது. அவன் கண்ணில் புதிய ஒளியின் மின்னல்.

“என்ன சுப்ரமணி... நீ நல்லாயிருக்கியா...?”

“நல்லாத்தானிருக்கேன். எனக்கென்ன கேடு வந்துச்சு?”

“நா போட்ட ரெண்டு காயிதமும் கெடைச்சதா?”

“கெடைச்சது மொதக் காயிதத்தை ஊர் பூராவும் படிச்சிட்டாக. ஒருத்தரு பாக்கியில்லாம எல்லாரும் படிச்சாக. எல்லாருக்கும் ரொம்பச் சந்தோஷம். ஒன்னையே நேர்லேயே பாத்துட்ட மாதிரி...”

“அப்படியா...? வேறொன்னும் நெனைக்கலியா?”

“என்னத்தை நெனைக்க? நீ பாட்டுக்கு ஊரை விட்டுட்டு ஓடிட்டே. நாங்க கெடந்து மனசு சங்கடப் பட்டுட்டோம். ரொம்பப் பேதலிச்சுப் போய்ட்டோம்.”

“எதுக்கு?”

“எதுக்கா? எங்க தெருக்காரங்கதா ரொம்ப நொந்து போய்ட்டாக. ‘நம்மாலே ஒரு பையன் ஊரை விட்டுப் போய்ட்டானே’ன்னு... ஒரு பையனை தொரத்துன பாவத்துக்கு ஆளாயிட்டோமேன்னு ரொம்பக் கலங்கிப் போனாக. சொல்லிச் சொல்லி மருகுனாக...”

“அப்...ப...டியா?” சிந்தாமணியின் கண்களுக்குள் குத்தலெடுத்தன. மனப் பரவசத்தில் தத்தளிக்கிற கண்ணீர் வந்து முட்டியது.

“ஆமப்பா. அதுலேயும் ஒங்கம்மா ஆதரவில்லாம நின்னு பொலம்புறதைப் பாக்கப் பாக்க... எங்களுக்குப்

பரிதவிப்பாப் போச்சு. 'அடடே... ஆத்திரத்துலே புத்தியை கடன் குடுத்துட்டோமே, இப்படிப் பண்ணிட்டோமே'ன்னு எல்லாருமே வருத்தப்பட்டாக."

"ம்... பெறகு?"

"பெறகென்ன? வாயடி நாடாரு கிட்டேப் போய்... எங்க தெருப் பெரியாளுக பேசுனாக... 'நீர்தான் எங்க சார்பா அந்த அம்மாவுக்குச் சகல உதவிகளும் செய்ய ணும்'னு. அவரும் சரின்னாரு... வாயடி நாடாரும் உங்கம்மாவுக்கு ஒத்தாசையாயிருந்தாரு..."

"நெசம்மாவா?"

"ஆமப்பா. அதுமட்டுமில்லே. வாயடி நாடாரு தங்கமான மனுசரு. எங்க பெரியாளுக போய் சொல்றப்ப... என்ன சொன்னாரு... தெரியுமா?"

"ம்."

" 'நீங்க சொல்லித்தான் நா ஆதரவாயிருக்கணுமா? அது யாரு? எனக்கு ஒன்னுவிட்ட அக்கா. அக்காளுக்கு ஒரு சங்கடம்னா... தம்பி நா பாத்துக்கிட மாட்டேனா? இதுக்கு... உங்க சிபாரிசா வேணும்?'ன்னாரு. பாந்தமான மனுசரு."

"ம்..."

"ஆமா... சும்மா சொல்லக்கூடாது. மனுசரு சொன்ன படியே பக்கபலமாயிருந்தாரு. எல்லா வகையிலேயும் சப்போர்ட்டா இருந்தாரு. 'நல்ல நா, பொல்ல நா'ன்னு தோசை இட்லியெல்லாம் குடுத்தனுப்பியிருப்பாரு. அவர் மகா... பொற்கொடிதான் நெதம் நெதம் ஒங்கம்மாவுக்கு தண்ணி எடுத்து வைப்பா... நீ இல்லாக் கொறை தெரியாம பாத்துக்கிட்டாரு..."

மாட்டேன் மாட்டேன் என்று மறுத்த சுப்ரமணியை அடம்பிடித்து வலுக்கட்டாயமாக இழுத்துக்கொண்டு ஓட்டலுக்குள் நுழைந்தான், சிந்தாமணி. இட்லி தோசை என்று வாங்கிக் கொடுத்தான். சாப்பிடு, சாப்பிடு என்று வற்புறுத்தி வற்புறுத்தி சாப்பிட வைத்தான்.

அவன் வந்த சைக்கிளில் லக்கேஜ்களை ஏற்றினான். இவன் ஒரு வாடகைச் சைக்கிளை எடுத்துக் கொண்டான். இருவரும் புறப்பட்டனர்.

ஆவணி மாதத்து நிலா, பளிச்சென்றிருந்தது. பால் போல வெளிச்சம். ரெண்டு பேரும் பேசிக்கொண்டே பெடலை மிதித்தனர்.

பேசப் பேச விஷயங்கள் குறைகிற மாதிரித் தெரியவில்லை.

அள்ள அள்ளக் குறையாத சமுத்திரமாக விரிந்து விரிந்து ஆழ்ந்து போய்க் கொண்டிருப்பது மாதிரித் தோன்றியது. சுப்ரமணி சொல்லச் சொல்ல, 'உம்' கொட்டிக்கொண்டே வந்த சிந்தாமணி, தன்னையறியாமல் உள் உலகத்திற்குள் நழுவிவிட்டான்.

அவனுக்கே வியப்பாக இருக்கிறது. மகிழ்ச்சியான ஆச்சர்யம். மனசே லேசாகிவிட்ட வியப்பு. எத்தனை பெரிய பயந்தாங்கொள்ளியாக இருந்திருக்கிறான்.

கோழை. வடிகட்டின கோழை. இரவிலும் பகலிலும் பயந்து பயந்து நடுங்கிக் கொண்டிருந்த கோழை. உறங்க வேண்டிய நேரத்தில் உறங்காமலும், ஓட்டப் பயிற்சி நேரங்களில்கூட உதறலெடுத்து உள் நடுக்கமெடுத்துக் கிடந்த கோழை. உண்ணும் நேரத்திலும் கூட ஊரை நினைத்து பதறிக் கிடந்த கோழை.

சொந்த ஊரில் வாயைத் திறந்து காத்துக் கொண்டிருக்கிற ராட்சஸப் பயங்கரம். கணக்குத் தீர்க்கமுடியாத பகைப் பிரமாண்டம். சாகும்வரை சனியனைப் போல தொடர இருக்கிற தீராத வழக்குப் புகைச்சல்.

ரகம் ரகமான கற்பனைகள். வகை வகையான அவலக் காட்சிகள். விதம்விதமான அசுர யூகங்கள். அணுஅணுவாக மனசை வாட்டி வதைத்து அவஸ்தைப்படுத்திய மனப்பிராந்தி. நிம்மதி பூராவையும் பிடுங்கி வாயில் போட்டுக்கொண்ட பீதி உணர்வுகள்.

ஆனால் சுப்ரமணி மூலமாக அறிமுகமாகியிருக்கிற ஊர்? நிஜத்தில் ஊர்?

அன்பு மயமான ஊர். குற்ற உணர்வில் வதைப்பட்ட ஊர்ஜனம். பழியை மறந்துவிட்டு துரத்திய பாவத்தை நினைத்து சுயவதைப்பாக அங்கலாய்த்த ஊர். ஈர நெஞ்சுடன் பாரம் சுமந்து தவித்த ஊர்.

நினைத்துப் பார்த்தால்... இவனது கோழைத்தனமே வேரில்லாத கற்பனை. நிஜத்துக்குச் சம்பந்தமேயில்லாத அபத்தம். அடிப்படையே இல்லாத ஆகாச அசுரக் கோட்டை.

ச்சேய்! ஒரு வருஷமாய் இந்த அனாவசிய அவஸ்தையில் மனசையே எம்புட்டு ரணப்படுத்திக் கொண்டோம்...

நினைக்க நினைக்க அவனுள் வெட்க உணர்வு. அதைக் கடந்து பிரம்மாண்டமாய் நிற்கிற பிரமிப்பு. ராணுவத்தில் போய் மனிதர்களைப் படித்திருக்கிறான். சொந்த ஊர் மனிதர்களையே படித்துப் புரிந்துகொள்ள இத்தனை காலமாகியிருக்கிறது இவனுக்கு.

கிராமத்து மனிதர்கள். அற்பக் காரியத்திற்காகக்கூட கும்பல் கும்பலாகத் திரண்டு ஆத்திரமும் வெறித்தனமு

மாய் அரிவாள் கம்புகளோடு வந்து முட்டி மோதுகிற கிராமத்து ஜனங்கள். ஆனால் வெறும் முரடர்களல்ல. முட்டாள்தனமான மூர்த்தண்யம் மட்டும் கொண்டவர்களல்ல. பழியையும், பகையையும் பொட்டலம் சுட்டிப் பத்திரப்படுத்துபவர்களல்ல.

இருதயமுள்ளவர்கள். ஈர நெஞ்சுக்காரர்கள். கனிந்த கருணைக்காரர்கள். பாவத்துக்குப் பதைக்கிற ஆத்மாக்கள். பரிகாரம் தேட முனைகிற வெள்ளை மனசுகள். நட்புக்காக ஏங்குகிற உணர்வுகள். உறவுகளைப் பேணிக் காத்து வளர்ப்பதில்... சாதி வேலிகளைக் கடந்தும் படர்கிற கொடி மனசுகள்.

சிந்தாமணிக்குள் கனிந்து குழைகிற உணர்ச்சிகள். நெக்குருகிப் போன நெஞ்சிலிருந்து கண்ணுக்குள் பீறிடுகிற ஈரக்கசிவுகள். தன்னைத்தானே கண்டித்துக் கொள்கிற விமர்சன உணர்வுகள். தன்னைத்தானே பரிகசித்துக் கொள்கிற முதிர்ந்த படிப்பினைகள்...

சாதிவெறி கொண்ட குரோத மனசோடு ஊரைவிட்டு ஓடிய சிந்தாமணி, சாதியழுக்கைக் கழுவிய பரிசுத்த மனசோடு ஊரை நோக்கி வருகிற பட்டாளத்தானாக...

எத்தனை பெரிய தலைகீழ் மாற்றம். கால தேச அனுபவங்களின் வார்ப்பினால் நிகழ்ந்த மாற்றம். குணாம்ச ரீதியான உள் சலவை.

சுப்ரமணிக்கு ஒரு ஸ்வெட்டர் தரணும். ஒரு பனியனும் தரணும். வாயடி மாமாவுக்கு ஒரு கம்பளி கொடுக்கணும்.

மனசுக்குள் ஈரநெகிழ்வில் விளைகிற நன்றியுணர்ச்சி. கொடை உணர்வை கொண்டு வருகிற உயர்பண்பு...

மடத்தைக் கடந்தான், சிந்தாமணி. அவன் உதட்டில் உறைந்திருந்த புன்னகையில் பழைய வெக்கை நினைவுகளின் ஒளியலைகள். முதல் வருஷ லீவில் வந்த அனுபவ வெளிச்ச மின்னல்கள்...

இப்போது—

முடிவான லீவில் வருகிறான். ரிட்டையராகி—முழு ஓய்வில்—வருகிறான். இடையில் இவன் சந்தித்த வாழ்க்கையனுபவங்கள்.

இவனது ரெஜிமெண்ட் கூடாரமடித்த வெவ்வேறு மாநிலங்கள். எல்லையோரப் பகுதிகள். பனிப்பாளப் பிரதேசங்கள். மலையின் இருள் மடிப்புகள்.

எத்தனை மொழிகள்... எத்தனை ரகமான மனிதர்கள்... எத்தனை எத்தனை மத வழிபாடுகள்... எத்தனை விதமான உணவுகள், உடைகள், கலாசாரப் பழக்க வழக்கங்கள்.

ஆயினும், எல்லோருமே இந்தியர்கள். சிந்து நதியை இதயமாகக் கொண்டு உயிர் துடிக்கிற சிந்திய தேசத்தின் நரம்புகள். நாளங்கள். இதில் ஒரு நரம்பு அறுந்தாலும், இதயம் பாதிக்கும். ரத்த ஓட்டம் இடறும். இந்திய தேசமாக உச்சரிக்கப்படுகிற சிந்திய தேசம் சிதறின தேசமாகிவிடும்.

இந்த விரிந்த அனுபவங்கள், சாதிக்குள் குறுகிக் கிடந்த இதயத்தை விசாலப்படுத்துகிறது. பனி படர்ந்த ஜம்முவும், அலைபடரும் குமரியும் சொந்தமென்ற பந்தம் உருவாக்குகிறது. முஸ்லீமையும், சீக்கியனையும், அஸ்ஸாமியனையும், இந்திக்காரனையும் சகல இந்தியரையும் சகோதரராக நினைக்கத் தூண்டுகிறது.

சொந்த மண்ணை உயிரென நேசிக்க வைக்கிறது. மண்ணேயம் மனித நேயமாக வடிவம் கொள்கிறது.

மானுட ஒற்றுமையை உலக வாழ்வின் ஜீவாதாரமாகக் கருத வைக்கிறது.

தாய் நாடு... தாய் மண்... தாய் நாட்டுப் பெருமைகள்... தாய் நாட்டு மக்கள்...

தாயைப் பார்க்கிற ஆவல், சிந்தாமணிக்குள். பாச உந்துதல். ஆழ்ந்த பெருமூச்சு, இதயத்துள்ளிருந்து.

தெருவில் நடையை எட்டிப்போட 'ஜர்ர்ருக், ஜர்ர்ர்ருக்'கென்ற பூட்ஸின் கம்பீரக் கர்ஜனை ஊரை அலற வைக்கிறது.

ஊரே கூடி இவனை அலற வைக்கப் போகிறது. இவனது விரிந்து விசாலப்பட்ட மனசையே கருவேல முள்ளால் கிழித்தெறியப் போகிறது என்பதையெல்லாம்... கண்டானா, அவன்?

ஊரின் ஒற்றுமையைப் பாதுகாப்பதற்கே பெரும் போராட்டம் தேவைப்படப் போகிறது என்பது காலத்தின் விதியாக இயங்கிக் கொண்டிருக்கிறது.

## 8

மூன்று ஆண்பிள்ளைகள் வரிசையாக. ஒரு பெண் பிள்ளை பிறக்கவில்லையே என்று, ஏக்கம் என்றால் ஏக்கம், அப்படி ஓர் ஏக்கம் செம்பகத்துக்கு.

"என்னத்துக்கு இப்படிப் பொலம்பிச் சாகுதே...? பொம்பளைப் புள்ளை அள்ளி அள்ளியா குடுத்துரப் போகுது?" என்று தாழையா கண்டிப்போடு ஆறுதல் படுத்தினார்.

*"ஆம்பளைப்புள்ளை என்ன செய்ய? வளர்ந்து ஆளான பெறகு தாய் தகப்பனை 'கெழட்டுக் கழுதைக'ன்னு வையிறதுக்கா? பெண்டாட்டிமார் பேச்சைக் கேட்டுக்கிட்டு, பெத்தவுகளை அடிச்சு வெரட்டவா?"*

*"பொம்பளைப் புள்ளை மட்டும் என்ன வாழுதாம்? அவளுக்கு வாய்க்கிற புருஷன் வைவான்... 'உங்க ஆத்தா அப்பன் என்ன செய்ஞ்சு கிழிச்சிட்டாக? கெதிகெட்ட ஆளுக'ன்னு."*

*"புருஷன் பேசுனாலும் பெத்தவுகளுக்கு வக்காலத்து வாங்கி புள்ளை சண்டை போடுவா. பொண்டாட்டி பேசுனா... தலையை தலையை யாட்டுவான், ஆம்பளைப் பய."*

*"அடடே... அப்படியொரு ஞாயம் இருக்கோ..."*

*"அது மட்டுமா? பொம்பளைப்புள்ளைன்னா... சாகுற வரைக்கும் தாய் தகப்பன் மேலே ஒரு பாந்தமாயிருப்பா. தளர்ந்த வயசுலே வீட்டு வேலை பூராத்தையும் கையிலே வாங்கிக்குவா... தவிச்ச வாய்க்கு தண்ணி மோந்து தருவா..."*

*"அது நெசந்தா... பொம்பளைப் புள்ளை நடமாடுனா... வீட்டுக்கே ஒரு லட்சணந்தான். குடுத்து வச்சிருக்கணுமே. நமக்கு லபிக்கலே. அதுக்காக பொலம்பி என்ன செய்ய? பொறந்தா கொண்டாடலாம். பொறக்கலேன்னா... அழுகுறதா?"*

நாலாவது பிள்ளையும் ஆணாகவே பிறந்தது. பிறந்த பத்து நாளையில் இறந்தும் போய்விட்டது. செம்பகம் வாய்க்கும் கைக்குமாய் எந்நேரமும் புலப்பம்தான். 'பொம்பளைப் புள்ளையில்லையே...' என்று ஒரே ஆற்றாமை. வருத்தம்.

ஐந்தாவதாக பிறந்தது, பெண்பிள்ளை. ரெண்டு பேருக்கும் மனசுக்குள் ஏகக் கொண்டாட்டம். 'ஐந்தாவது பெண் பிறந்தால் ஐஸ்வரியம் குவியும்' என்று கிராமத்துச் சொலவடை.

ரெண்டு பேருக்கும் ரெட்டைச் சந்தோஷம். அந்த வெள்ளந்திகளுக்குள் விடிய விடிய சண்டை. 'என்ன பேர் வைக்க' என்று ஏகமாய் வாக்குவாதம். சர்ச்சைகள்.

'தங்கம்', 'சொர்ணம்', 'செல்வம்', 'ஐஸ்வரி' என்று செல்வத்தைக் குறிக்கிற பெயராக இருக்க வேண்டும் என்பது செம்பகம் கட்சி. தாழையாவுக்கோ, 'அருஞ்சுனைக் காத்த அய்யனார்' என்கிற குலதெய்வத்தை நினைவு படுத்துகிற பெயராக அமைந்தாக வேண்டும் என்று ஒரே பிடிசாதனை.

ரெண்டு மூன்று நாளாக அவர்களுக்குள் யோசனைகள். விவாதம் தூள் பறந்தது. சண்டைகள் சச்சரவுகள். செல்லச் சண்டைகள். ரெண்டு பேருக்கும் இடையில், எங்கோ உட்கார்ந்திருக்கிற மூன்றாவது தீர்வு, கண்ணில் படாமல் கண்ணாமூச்சு காட்டிக் கொண்டிருக்கிறது.

ரொம்ப முழிப்பாட்டமாகயிருந்தது. முடிவு காணாத சச்சரவை கிடப்பில் போட்டுவிட்டு திண்ணையில் படுக்கப் போனார் தாழையா. வழக்கம்போல குலதெய்வத்தை கூப்பிட்டுக் கொண்டே படுத்தார். "ஐயா தாழையடி அய்யனாரே... நீருதா தொணை."

பிறந்த பச்சைப் பிள்ளையை மடியில் போட்டு பால் கொடுத்துக் கொண்டிருந்த செம்பகம் காதில் அந்தக் குரல். பச்சை மதலையின் பிஞ்சு உதடுகள் உயிரை உறிஞ்சுவதைப் போல 'சிப், சிப்'பென்ற பூவெடிப்புச் சத்தத்தில்... பால் கொடுக்கிற கிறுகிறுப்பில் புல்லரித்துப் போய் கண்களை மூடியிருந்தாள்.

மூடிய கண்ணுக்குள் அருஞ்சுனை காத்த அய்யனார் கோயில். கன்னங்கரேலென்று படர்ந்து கிடக்கும் அந்த வெதுவெதுப்பான சுனை. படிக்கட்டுகள். துள்ளும் மீன்கள். சுற்றிலும் மருத மரங்கள். வானத்தை முட்டுகிற பெரிய பெரிய விருட்சங்கள். சமையல் கூடம். பூஜாரியறை. தலா போட்ட கிணறு. பொங்கல் வைக்கிற இடம். கோயிலின் முன் பாகத்தில் அய்யனாரின் படம். அவரின் இரு பக்கமும் இரு மனைவியர். வலது பக்கம் பூர்ணம். இடது பக்கம்—

செம்பகத்துக்குள் ஒரு பளீர். மின்னலாய் துடித்ததிர்ந்த ஓர் உணர்வு. மனசுக்குள் பிடிபடாத சந்தோஷப் பெருக்கு. ஆவல் பொங்கச் சத்தம் போட்டாள்.

"ஏங்க..."

"என்ன... செம்பு?" சலிப்பில் வந்த எரிச்சல் தாழையாவிடமிருந்து.

"இன்னும் ஒறங்கலியா?"

"ஒறங்குறவன் ஒங்கிட்டே நொன்னன்னு கேப்பானா?"

"இங்க சித்த வாங்களேன்?"

"என்ன... சொல்லு...!"

"அட... வாங்களேன்."

அவளது ஆவல் அவரையும் பற்றிக்கொள்ள சலிப்பை கடந்தார். பெருமூச்சின் இரைச்சலோடு எழுந்து உள்ளே போனார்.

"என்ன விஷயம்?"

"நம்ம புள்ளைக்கு நல்ல பேரு கெடைச்சிருச்சு."

"என்ன பேரு?"

"உங்களுக்கும் எனக்கும் பொதுவான பேரு."

"சொல்லு."

“உங்க குலதெய்வத்துக்கு நொட்டாங்கை (இடதுகை)ப் பக்கத்துலே ஒரு சம்சாரம் இருக்குமே?”

“ஆமா...”

“அதோட பேரு, நல்ல பேரு, ஒமக்கும் பிடிக்கும். எனக்கும் சம்மதம்.”

“அப்படியா? என்ன பேரு?”

“பொற்கொடி.”

அவருக்குள் பளிச்சென்று பரவிய வெளிச்சம். செம் பகத்தின் சந்தோஷம் அவருள் திருப்தியாகப் படர்ந்தது.

“பொற்கொடி... பொற்கொடி... பொற்கொடி... நல்லாயிருக்கே. இருக்கட்டும்.”

“பேரு நல்லாயிருக்குல்லே?”

“அருமையான பேரு. செம்பகம்னா... செம்பகம்தான்.”

தாழையாவின் ஒல்லித் திரேகத்தையும், உடல்வாகை யும், செம்பகத்தின் தேக நிறத்தையும் சுவீகரித்துக் கொண்டு வந்து பிறந்திருந்த பொற்கொடி, அந்தி வெயிலைக் கூடக் கூச வைக்கிற குளிர்ச்சியான ஒளியாக... ஒரு நிறம்.

அழுக்குத் துணிகளையெல்லாம் பொறுக்கி, ஒரு பழைய சேலையில் பொட்டலமாகக் கட்டி ஓரம் வைத்தாள், பொற்கொடி. மதியக் கரண்டு. குழாயில் தண்ணீர் வந்துவிட்டது. ஓடி ஓடி தண்ணீர் எடுத்தாள்.

அம்மாவின் கட்டிலைச் சுற்றிலும் தரையில் சளித் துளிகள். உலர்ந்து காய்ந்து போன அழுக்குத் திட்டுகள். சுற்றிச் சுற்றி மொய்க்கிற ஈத்தொல்லை வேறு.

சகலத்திலும் தண்ணீர் ஊற்றிக் கழுவிவிட்டாள்.

அம்மா படுத்துக் கிடந்தாள். ஒருக்கழித்து முடங்கியிருந்தாள். ஓடி ஓடி மகள் வேலை செய்கிற அழகையே—சுறுசுறுப்பையே—பார்த்துக் கொண்டிருந்தாள்.

பொற்கொடி உள் பாவாடையின் நுனியை தூக்கி இடுப்புச் சேலையில் சொருகிக் கொண்டு, நீர் தெளித்து ஊறிக் கிடந்த தரையை குச்சிமாரால் 'பர், பர், பர்'ரென்று தேய்த்துவிட்டாள். தேய்க்கத் தேய்க்கத் திரண்டு வருகிற அழுக்கு.

தண்ணீரை அள்ளி அள்ளி ஊற்றினாள். 'சளப், சளப்'பென்று வருகிற சத்தம். கழுவிவிட்டாள். அவள் நாடிக் குழியில் வியர்வைத் துளிகள், பொடிப் பொடியாக. நாசி நுனியில் முத்துப்புல்லாக்காகத் தொங்குகிற வியர்வைத் துளி.

செம்பகம் படுத்த நிலையிலேயே 'அப்படிச் செய், இப்படிச் செய்' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

"அம்மா கசாயம் போட்டு வைச்சிருக்கேன். தரட்டா?"

"வேண்டாம்மா. நீ ஜோலியைப் பாரு."

"இல்லேம்மா. அதிமதுரம், சித்திரத்தை, பனங்கல் கண்டு எல்லாம் போட்டு கொதிக்க வைச்சது. தொரத் தலுக்கு நல்லதும்மா..."

"சரி. கொண்டா."

குச்சிமாரை அப்படியே போட்டுவிட்டு, அடுப்பங் கரைக்குள் நுழைந்தாள். எவர்சில்வர் கிளாஸ்கள் இரண்டில் ஆற்றிக்கொண்டே வந்தாள். அவளாகவே அம்மாவைக் கைத்தாங்கலாகத் தூக்கி உட்கார வைத்து அதைக் குடிக்க வைத்து—

அந்தக் கிளாஸ்களை கழுவி வைத்துவிட்டு, பழைய சாக்கை எடுத்து கழுவி விடப்பட்ட ஈரத்தில் போட்டு

கால்களால் அழுந்தத் தேய்த்தாள். சாக்கு ஈரத்தை உறிஞ்சிவிடும். சீக்கிரமாய் தரை உலரும்.

இரும்புக் கரண்டியில் அடுப்புக் கங்கை அள்ளிப் போட்டு, அதில் சாம்பிராணித் தூளைக் கொட்ட 'கபா கபா'வென்று புகை எழுந்தது. அம்மாவின் கட்டிலைச் சுற்றி புகை காட்டினாள். ஈமொய்ப்பை தணிக்கும் ஏற்பாடு.

செம்பகம் மனசில் பலவிதமான நினைவுகள். நோயுற்றுக் கிடக்கும் அவளுள் சோர்வும் பயமுமான நினைவுகள். சோகமாக பெருமூச்சு விட்டாள். அவல உணர்வைச் சுமந்து வந்த பெருமூச்சு.

"பொற்கொடி, எங்களுக்கு நீ ஒரு பாரம். ஒனக்கு நா ஒரு பாரம். ரெண்டு பாரமும் எறங்கியாகணும். எப்பத்தான் எறங்கப் போகுதோ..."

"ஓயாம இதையே சொல்லிச் சொல்லி ஏம்மா பொலம்புதீக?"

"பொலம்பாம இருக்க முடியலியே பொற்கொடி. 'போய்ச்' சேர்ற வரைக்கும் இந்தப் பொலப்பம்தான்."

அம்மாவை நிமிர்ந்து பார்த்தாள், பொற்கொடி. பார்வையில் கனிந்து நின்ற பரிவு. பரிவில் கலந்து கிடந்த கண்டிப்பு.

"எம்மா, நோய் வர்றது விதிவசம். நோய் வந்து படுத்துட்டா. சீராகி எந்திக்கிற வழியைத்தான் பாக்கணும். போறதைப் பத்தியே பேசக் கூடாதும்மா. நீங்க போய்ட்டா, அய்யாவுக்கு யாரு இருக்காக?"

"அவருக்கென்ன? நாடு சுத்துன ராசா. ஒலகமே அவரோடு உள்ளங்கையிலே உருளுமே. அவரைப் பத்திக் கவலைப்பட வேண்டியதில்லே."

"ராசாவாயிருந்தாலும் வயசான காலத்துலே ஒத்தையிலே என்ன செய்ய முடியும்? மயினிமாருக கையை நம்பி அய்யா இருப்பாரா? இருக்க முடியுமா?"

"முடியாதாக்கும்? ஏண்டி முடியாது? உங்க அண்ணன் மார்க உங்கய்யாவை 'அப்படி' விட்டுருவாங்களா?"

"அண்ணங்க மூணு பேரும் தங்கமானவுகதான். அய்யாவை நல்லபடியாக மதிப்பா வைச்சிக்கிடுவாக. ஆனா... மயினிமார்க?"

செம்பகம் முகத்தில் ஈ மொய்த்தது. மூக்கில் வந்து உட்கார்ந்தது. அவள் மனத்தில் ஒரு திகைப்பு. இதுவரை யோசித்திராத கோணத்தில் பொற்கொடி.

மருமகள்கள் கையை நம்பி ஒரு கிழவனை ஒப்படைத் தால் என்ன மரியாதை கிடைக்கும்? ராசாபோல ராஜ்யம் கட்டியாண்ட மனிதரை... பிச்சைக்காரனைப் போல கையேந்த வைத்துவிடுவார்களோ... பாடாய் படுத்தி விடுவார்களோ... சோத்துக்கும் ஏங்கிப் போய்— தவித்த வாய்க்கு தண்ணீர் மோந்து கொடுக்க நாதியற்று...

அட... என் ராசாவுக்கா அந்தக் கதி?

"ஆமா... இந்தக் கெழட்டுச் சனியனுக்கு நேரா நேரத்துக்குக் கஞ்சி ஊத்தி, கடிச்சிக்கிடை பாத்து கவனிக்குறதுக்குள்ளே நம்ம உசுர் போயிரும். ச்சேய்! இந்தச் சனியன் எப்பப் போய் சேருமோ..."

ஒரு மருமகளின் சள்ளையான முணுமுணுப்பு. ணங்கென்று கஞ்சித் தட்டை வைக்கிற அலட்சியம். அவமானத் தீயில் கருகி வாடிப் போன ஒரு கிழட்டு முகம். கண்ணில் நீர் திரள... கஞ்சியில் மனக் கசப்போடு கைவைக்கிற அந்தக் கை...

செம்பகத்துக்குள் மின்னி மறைந்த அவலக் காட்சி. அவளுள் உணர்ந்த உணர்தலின் அதிர்வு, மின்சார

அதிர்வாகப் பரவியது. வெலவெலத்துப் போனாள். பொற்கொடியைத் திறந்த வாய் மூடாமல் பார்த்தாள்.

"அப்படியா சொல்லுதே பொற்கொடி?"

அவளுள் புதிய உணர்வின் திணறல். அவளது பழைய அபிப்பிராயம் நிலை குலைந்து நொறுங்கிச் சரிகிற புழுதிப் புகை. புதிய புரிதலின் மன அழுத்தம். கற்றையாக அடைத்துக் கொண்ட மாதிரியிருந்தது, தொண்டைக்குள்.

"ஆமாம்மா. அய்யாவுக்கு நீங்கதா ஆதரவு. இப்ப மட்டுமில்லே, இனிமேலும்தான்."

"நா... எப்புடிடி? நோயிலேயிருந்து பொழைச்சு எந்திருச்சிர முடியுமா? நடக்குற காரியமா?"

"ஏம்மா முடியாது? இப்பத்தான் இதுக்கு நல்ல நல்ல ஊசி மருந்தெல்லாம் கண்டுபிடிச்சிருக்காகளே. மாத்திரைக இருக்கு. உங்ககிட்டே நம்பிக்கைதா வேணும். மீளணும்னு வைராக்யம் வேணும். எந்திச்சு அய்யாவுக்கு ஒத்தாசையா யிருக்கணும்னு தவிப்பு வேணும்."

மகளை வெறுமனே பார்க்கிற செம்பகம். ஆனால், உள்ளுக்குள் ஏகப் பிரமிப்பு. வியப்பான நினைவுகள்.

இவளா... இப்படிப் பேசுகிறாள்? அவளின் அய்யாவை உரித்து வைத்த மாதிரி நிற்கிற பொற்கொடி, அவரை மாதிரியே தாட்டியமாகப் பேசுகிறாளே. எத்தனை அறிவோடு பேசுகிறாள்! ஒரு தாய் பேசுகிற மாதிரி... பாந்தமாய்— நுட்பமாய்— பக்குவப்பட்ட திடமாய்— தாழையாவே வந்து நின்று பேசுகிற மாதிரி.

அம்மாவின் ஆச்சரியத்தைப் பார்த்துக் கொண்டிருக்க இது தருணமில்லை. மணி நாலாகப் போகிறது. அம்மாவுக்கு வெந்நீர் கொதிக்கப் போட்டுவிட்டு...

அழுக்குத் துணிப் பொட்டலத்தோடு கிணற்றுக்கு ஓடணும். பம்ப்ஷெட் மோட்டார் ஓடும். இத்தனை துணிகளையும் துவைத்து அலசி குளித்துவிட்டு வரணும். வந்து அய்யாவுக்கு காப்பி போட்டு வைக்கணும். ஒரு கடிச்சிக்கிடை தயார் பண்ணனும்.

மலைமலையாய் குவிந்து கிடக்கிற வேலைகள்.

"அம்மா... நா குளிக்கப் போய்ட்டு வாரேன்."

"இம்புட்டையும் நீதான் தொவைக்கணுமா?"

"பெறகு?"

"ஏகாலிகிட்டே போடலாம்லே?"

"வந்து சேர ஒரு மாசமாகும்."

"சரி போய்ட்டு வா."

"கதவைச் சாத்தி வச்சிட்டுப் போறேன்."

"ம். ஓங்கூட யாரும் வாராகளா, நீ மட்டும் போறீயா?"

"நா மட்டும்தான்."

"ஒத்தையிலா?"

"ஏம்மா பயப்படுதீக? நா யாரு? தாழையா நாடாரு மகா. இந்த ஊர்லே நா எதுக்குப் பயப்படணும்? என்னைப் பாத்துப் பயந்தா போதாது?"

செம்பகம் உதட்டில் ஒரு புன்னகை, ஓர் அழகான நெருஞ்சிப் பூவாக ஒளிர்ந்தது.

"வாயடி நாடாரு மகா...ங்குறதை அப்படியே காட்டுதீயே? அடியாத்தி! ஓங்கிட்டேயும் இம்புட்டு வாயடியா?"

பொற்கொடி கூச்சச் சிரிப்பாக சிரித்தாள். தன்னில் அய்யாவை உணர்ந்த ரத்தத்தின் மகிழ்ச்சி.

துண்டுமஞ்சள், சோப்பு டப்பா எடுத்துக் கொண்டாள். காலில் செருப்பை மாட்டிக்கொண்டு, கதவைச் சாத்து வதற்கு முன்பு திரும்பி அம்மாவைப் பார்த்தாள்.

அம்மாவின் உதட்டுப் புன்னகையின் மிருதுவான ஒளியை மீண்டும் தரிசிக்கிற ஆசை. அதே புன்னகையுடன் மகளைப் பார்த்தாள். கீழிறக்கிப் பார்த்த பார்வைகளிலும் அதே ஒளிப் புன்னகை.

சிரிப்பு, ஓர் அற்புத அழகு. மானுட விகசிப்பில் சிரிப்பு ஓர் இதழ் மட்டுமல்ல. மலரின் மொத்த ஒளியாக—வர்ணப் பிரகாசமாக இருக்கிறது. ஆத்மாவின் மலர்ச்சி. உயிரின் குதூகலம்.

நோய் பீடித்து நொம்பலப்பட்டு கிடக்கிற வீட்டில் பூக்கிற சிரிப்பு என்பது, குறிஞ்சிப் பூ மாதிரி. அதற்கு ரொம்ப மவுசு. வசீகரம். ஆழ் மனப் பேரழகு. உள்மலர்ச்சி யின் வாசம்.

அம்மாவின் புன்னகையை அள்ளி மனசுக்குள் பத்திரப்படுத்துகிற மாதிரி ஆசைதீரப் பார்த்தாள். கதவைச் சாத்தினாள்.

அய்யா... இன்று சல்லம்பட்டி போயிருக்கிறார். 'பருத்தி எடை' என்றார்.

அறவை மில்லுக்கு பருத்தி வேண்டுமென்று மில்காரரர் களே நேரடியாக வந்திருக்கிறார்கள். மஞ்சள் பை நிறைய பணக்கட்டுகள். ஒரு லோடு வாங்கியாக வேண்டும் என்று பசியோடு படை எடுத்திருக்கிறார்கள்.

ஒரு லாரி லோடு என்றால் சும்மாவா? கொஞ்சமா? நாலைந்து ஊர்கள் அலையணும். குவிண்டாலுக்கு அம்பது, அறுபதுக்கு மேல் விலையை உயர்த்தி வைத்துவிடுவார் அய்யா.

இந்த மாதிரி நேரத்தில் சம்சாரிகளுக்கு கமுக்கமாக (ரகசியமாக) ஒத்தாசை செய்வதில் அய்யா ஒரு சமர்த்தர்.

அய்யாவுக்குக் கமிஷன் பணம் தருவது வியாபாரிகள் தான். வியாபாரிகளுக்குச் சப்போர்ட்டாக இருப்பது போன்ற பாவனையை வாய்ப்பேச்சிலேயே அய்யா ஏற்படுத்தி விடுவார். வாய், வியாபாரிக்கு ஆதரவாக இருந்தாலும், காரியம் மட்டும் சம்சாரிகளுக்கு சப்போர்ட் டாகத்தான்.

விவசாயிகளின் நலனைத்தான் கண்ணும் கருத்துமாகப் பேணுவார். அதுதான் அவரது பிறவிச் சுபாவம்.

“நா... பிறவியிலேயே சம்சாரிதான். சம்சாரி ரத்தத்துலே பிறந்தவன். அதுவும் எப்பேர்ப்பட்ட சம்சாரி? ஊருக்கே மொதமொதல்லே முளகாய் வெவசாயம் செய்ய தடம் போட்டுக் காட்டுன சுத்தமான சம்சாரியோட ரத்தம். தொழில் தரகுதான். ஆனா மனசு சம்சாரி மனசுதான்” என்று அடிக்கடி சொல்லிக் கொள்வார். பெருமிதத்தில் ததும்பும் முகத்தில், கம்பீரமாய் மீசையை மேல்நோக்கி நீவிவிட்டுக் கொள்வார். சம்சாரியாக வாழ முடியாமற் போனதற்காக, வருத்தமான ஏக்கத்துடன் பெருமூச்சு விட்டு சூள் கொட்டுவார்.

பொற்கொடி நடையை எட்டிப் போட்டாள். சாயங் காலச் சூரியன் மஞ்சள் தகதகப்பாய்.

ஆவணி மாதத்துக் காற்றில் வேலி மரங்கள் பேயாடு கின்றன. ஆயிரம் தலை நாகமாய் நீள்கரங்கள் நீட்டியாடு கின்றன. வேப்ப மரங்கள் கரும் பச்சையாய் போடுகிற கூத்தாட்டம். கூட்டம் கூட்டமாய் சிறகடித்துப் பறக்கும் குருவிகளும், மைனாக்களும். காற்று முழுக்க நிறைந் திருக்கும் பறவைச் சங்கீதம். இரை தேடும் பச்சை மின்னல் களாய் கிளிக் கூட்டம்.

ஓடைக்குள் இறங்கினாள்.

முன்னெல்லாம் ஓடைக்குள் ஆள் உயரத்திற்கு மணல் கிடக்கும். புதையப் புதைய நடக்கும்போது பாதங்களுக்குள் பரவுகிற சுகம். பாதங்களுக்குள் நெறுநெறுத்துக் குழைகிற அந்த மணலின் ஸ்பரிச புல்லரிப்பே, தனி.

ஒன்பது கிலோ மீட்டர் தூரத்தில் கரிசல் காட்டில் வந்து முளைத்த சிமிண்டாலை. நரிகள் உலவித் திரிந்த வனக் கரிசல், ஒரு மாயா ஜாலம்போல கட்டிடங்கள் நிறைந்த நகரமாயிற்று. கட்டுமானத்துக்கு மணல் அவசியத் தேவை. லாரி லாரியாக வந்தன, மணற் கொள்ளைக்கு.

'மணலை அள்ளவிட மாட்டோம்' என்று மல்லுக்கு நின்ற ஊர்ஜனம். ரவ்வும் பகலும் காவலுக்குப் போன இளவட்டங்கள். ஆலைவளர்ச்சியின் புலிப்பாய்ச்சலுக்கு முன்னால், பட்டிக்காட்டுச் சம்சாரிகள் குறுக்கே நிற்க முடியுமா? பருப்பு வேகுமா?

ஜாம் ஜாம் என்று நடந்த மணற் கொள்ளை.

இப்போது—

எறும்புகள் மேய்ந்து முடிந்த நெத்திலிக் கருவாடாகக் கிடக்கிற ஓடை. வெறும் பாறை முடிச்சுகள். உவர் பொங்குகிற பாறை. பல்லையிளிக்கிற பாறைகளின் இண்டு இடுக்குகளில் வேலிச் செடிகள். ஆதாளைச் செடிகள். மஞ்சணத்திகள். கொறண்டிச் செடிகள். லட்சணங் கெட்டுப் போன ஓடை. மணலைப் பறிகொடுத்த விதவை அமங்கலம்.

ஓடை நிறைய ஆளுயரத்துக்கு மணல் கிடந்தால், மழைக்கால நீர்ப்பெருக்கை அடிமடியில் வாங்கி வைத்திருக்கும். பிள்ளைப் பிண்டத்தை பத்திரப்படுத்துகிற தாயாக நீரைச் சேமித்து வைக்கும். கோடை காலத்தில்

சுற்றியுள்ள கிணறுகளின் உள் சுவர்களில் கருணையோடு நீர்க் கசிவாக ஊற்றெடுக்கும்.

இன்று—

ஓடை விதவையாக... கிணறுகளும் தாயற்ற பிள்ளைகளாக நீர்வற்றி லட்சணமிழந்து... கிணற்று நீரின் ருசித் தன்மையும் கெட்டு, உப்புத் தண்ணீராகி... நிலங்களும் உவர் பொங்கி...

விவசாயமே சர்வநாசம்.

பொற்கொடி ஓடையைக் கடந்தாள். வண்டிப் பாதைப் புழுதியில் நடந்தாள். தைமாதம். செம்போத்துப் பறவைகளின் ஏக்கம் நிறைந்த துயரக் கூவல்.

மஞ்சணத்தி மரத்துக் கிணற்றில் மட்டும் அதிசயமாக, வற்றாத தண்ணீர். எந்நேரமும் மோட்டார் ஓடும். ரெண்டு ஃபேஸ் கரண்டு இருக்கிற நேரத்தில் கூட, கண்டென்சர் உதவியில் ஓடும்.

தொட்டிக்குள் வெள்ளிக் கற்றையாக விழுகிற தண்ணீர். நுரை நுரையாகப் பொங்குகிறது. வாய்க்காலின் கோரைப் புற்களுக்கிடையே பாம்பாக ஊர்ந்து செல்கிற நீர்.

துணிப் பொட்டலத்தை தொட்டித் தண்ணீருக்குள் போட்டு முக்கினாள். எல்லாத் துணிகளுக்கும் 'பர்ட், பர்ட்'டென்று சோப்பு போட்டாள். மின்னல் வெட்டுகிற வேகம், அவள் கைகளில்.

அவள் மனசுக்குள் மொட்டவிழ்கிற ஒரு ஞாபகம். அவளை மீறிக்கொண்டு அவளுள் வாசத்தோடு முகம் காட்டுகிற நினைவு.

நேற்றைய கனவு.

அந்தக் கனவை நினைத்தவுடன், அவளுக்குள் ஆயிரமாயிரம் பூக்களின் வெடிப்புச் சத்தம். இதழ்களை விரிக்கிற ஒளிப்பரவசம். மகரந்தத்தின் போதையூட்டும் சுகந்த வாசம். மனசையே கிறங்கடிக்கிற அந்த வாசனையில்... மெல்ல மெல்ல திரை விலக்கி முகம் காட்டுகிற அந்தக் கனவு.

## 9

அந்தக் கனவு, பயங்கரமா... பரவசமா...?

ஒரு சத்தமில்லை. மனசை அழுத்துகிற நிசப்தம். பகலா, இரவா என்று நினைவில்லை. ஏனோ அந்த அரூபமான அமைதி, பயங்கரமாக இருந்தது.

அம்மா கட்டிலில் தூங்குகிறாள். அயர்ந்த உறக்கத்தில் வெளிப்படுகிற ஒரு சீரான சுவாச ரீங்காரம்.

என்னத்துக்கு என்று நினைவில்லை. பொற்கொடிக்கு அந்த உள் வீட்டறைக்குள் போக வேண்டியிருந்தது. அது ஒரு சின்ன அறை. ஜன்னலில்லாத அறை. இருட்டறை. கதவைத் திறந்தவுடன் முகத்தில் மோதும் புழுக்கமான வெக்கை. சின்ன வயசிலிருந்து அவளுக்குள் பரிச்சயமான நெடியும், மூச்சுத் திணறலும், அந்த அறையின் கதவு, சின்னக் கதவு. நெஞ்சுயரத்துக்கு இருக்கும். எண்ணெய் பிசுக்கும், அழுக்கும் உறைந்து போய், கன்னங்கரேலென்று பார்க்க லட்சணமற்று இருக்கும்.

அந்த அறைக்குள் போக வேண்டியிருந்தது. மெல்ல எழுந்தாள். கதவில் கைவைத்துத் திறந்தாள். உள் நுழைந்தாள்.

வேற்றிடம் போலத் தோன்றுகிறது. அந்த நெடி வீசவில்லை. புழுக்க வெக்கை இல்லை. இருட்டு இல்லை.

பிரம்மாண்டமான அகலத்தில் 'ஹோ'வென்று கிடக்கிற அறை. இந்த மூலையிலிருந்து கத்தினால், அந்த மூலைக்குக் கேட்காது. அத்தனை பிரம்மாண்டமான அகலம். பயங்கரமான வெளிச்சம்.

இது தன் வீடேயல்ல. அந்நிய இடம். அந்நிய ஊர். அந்நியச் சூழல். சொறசொறப்பான குட்டைக் கதவல்ல. தொட்டுணர்ந்து பரிச்சயமான கறுப்புக் கதவல்ல.

வேற்றுக் கதவு. ரெண்டாள் உயரக் கதவு. தகரக் கதவு. பளபளவென்று தகதகக்கிற புத்தம் புதுத் தகரக் கதவு. பூட்டு எங்கே என்றும் தெரியவில்லை. திறக்கிற வழியும் தட்டுப்பட மாட்டேன் என்கிறது.

இப்போதுகூட—

பொற்கொடி பதறவில்லை. பரபரப்படையவில்லை. துணுக்குறவில்லை.

இதை ஏற்கெனவே எதிர்பார்த்தவளைப் போல ரொம்ப இயல்பாக இருக்கிறாள். ரொம்ப ரொம்ப சகஜமாக இருக்கிறாள்.

'ஏன் இப்படி இருக்கிறோம்' என்று அவளுக்கு ஒரே வியப்பு. 'இது சரியல்ல' என்று தோன்றுகிறது. ஆயினும், ரொம்பச் சாதாரணமாகவே இருக்கிறாள். இப்படி இயல்பாக இருப்பதில், அவளது உள்மனம் ஓர் இன்பத்தை உணர்கிறது. இந்தச் சுகம், தேவைப்படுகிற சுகம். விருப்பமான சுகம். மென்காற்றுக்கு முகம் தந்து, கண்மூடி மெய்சிலிர்ப்பதைப் போல ஓர் உணர்வு.

எதிரில் பார்க்கிறாள். 'ஹோ'வென்று கிடக்கிற பெரீ...ய்ய ஹால். வெயில் போல வெளிச்சம். புதுத் தகரத்தில் சூரிய வெளிச்சம் பட்டுப் பிரதிபலிக்கிற மாதிரியான ஒளித் தகதகப்பு. அத்தனை விசாலமான

பெரிய ஹாலில், ஒற்றை மனுசியாக, இவள் மட்டும். வேறு ஒரு சுடுகுஞ்சுகூடக் கிடையாது.

தனிமை... சகிக்க முடியாத கொடிய தனிமை உணர்ச்சி. அத்துவானத் தனிமை. மனித வாடைக்கு ஏங்குகிற மனசின் தவிப்பு. தகிப்பு.

தூ.......ரத்தில் ஒரு நிழல். வெண்சுவரில் வரைந்த கரிக்கோட்டு ஓவியமாக, ஒரு மனித நிழல். சலனப்படுகிற நிழல்.

அது நிழலல்ல. உயிருருவம். இளைஞன். பச்சைக் கைலியும் வெள்ளைப் பனியனுமாய் வாலிபத் தோற்றம். அங்கேயே நிற்கிற இளைஞன்.

‘பக்கத்தில் அவன் வந்துவிடக் கூடாதே’ என்று பதற்றப்படுகிற பாதி மனசு. ‘நெருங்கி வந்து விடட்டுமே’ என்று ஏங்கித் தவிக்கிற முழு மனசு. முரண்பட்டு, சலனச் சபலமாய் அலைபாய்கிற மனதை உணர்ந்த மூன்றாவது மனுசியாய்... இவள்.

நெருங்கி வருகிறான். அவனிடம் ஆரவாரமில்லை. ஆவேசமில்லை. மோகமூர்க்கமில்லை. துள்ளல், துடிப்பு இல்லை. மனசை நனைத்து அள்ளிச் செல்கிற அலையாக வந்து மோதவில்லை. தழுவவில்லை.

மிக நிதானமாய்— ஆழ்கடல் அமைதியாய்— வந்து நிற்கிறான். சீரான சுவாச சத்தம். மலர்ந்த முகத்தில் டிசம்பர் பூக்களின் வெளிச்சம். உதடுகளில்—கண்களில்— நிலாக்கால அலைச் சிரிப்பு. ரசனை மிகுந்த மனசின் சிரிப்பு.

அந்த அமைதியான ரசனை, இவளை ஈர்க்கிறது. வசீகரிக்கிறது. மோகவசப்படுத்துகிறது. இவளுக்குள் பௌர்ணமி கடல் கொந்தளிப்பு.

அவனது பார்வை. நங்கூரமிட்ட பார்வை. அசையாத பார்வை. முகத்தைப் பார்க்காமல், இறங்கி தேகத்தில் லயிக்கிற பார்வை. பார்வையில் நிதானம். ரசனைப் புன்னகை. ரசனைக்கும் ஆழத்தில் உட்கார்ந்திருக்கிற ஏளனம். மெல்லிசான ஏளனம்.

எதற்காக ஏளனம்? ஏளனத்துக்குரியதாக தேகத்தில் அப்படி என்ன இருக்கிறது? அவளுள் ஒரு மர்மத் திகைப்பு. அவனது பார்வைப் பாஷையின் ஸ்பரிசத்தால் அலைப் புற்று, குனிந்து தன் தேகத்தைப் பார்த்தாள்.

அவளுக்குள் குண்டு வெடித்ததைப் போலிருந்தது. மனம் சிதறித் தெறித்துப் போனாள். உடம்பு வெற் றுடம்பாய்... ஒரு பொட்டுத் துணிகூட இல்லாமல் வெயில் படாத திரேகப் பேரொளியாய்...

எப்படியாயிற்று? என்னாயிற்று? இது எப்படி நிகழ்ந்தது? எப்போது நிகழ்ந்தது? கட்டியிருந்த துணிமணி போன மாயமென்ன? ரொம்ப நேரமாக... தான் இப்படித் தான் இருந்தோமா? இந்த அலங்கோலத்திலா? ஐயய்யோ!

அவள் உயிர் அவளிடமில்லை. செத்துப் போகிற மாதிரி வீறிட்டுக் கத்தினாள். கத்திய கத்தலோடு அப்படியே உட்கார்ந்து... கையது கொண்டு மெய்யது பொத்தி... குத்துக்கால் வைத்து முழங்கால்களுக்குள் முகம் புதைத்து... அவமானத்தில் உயிர் நடுங்க...

“ஏய்... பொற்கொடி.”

ஆறுதலான—மென்மையான—ஒரு பெண்ணின் குரல். பதற்றத்துடன்—தயக்கமாய்—மெல்ல மெல்ல நிமிர—

எதிரில்—ரொம்ப நெருக்கமாய்—குனிந்த நிலையில்—ஒரு பெண். பச்சைச் சேலையும், வெள்ளை ஜாக்கெட்டு மாய் ஓர் இளம்பெண். இவள்தான் இங்கே இருந்தாளா?

இவள் முன்னிலையில்தான் இந்த நிர்வாண கோலத்தில் நானா?

அந்த இளம் பெண்ணின் வலது உள்ளங்கை, இவளது வெற்று முதுகை ஆறுதலான மொழியோடு வருடுகிறது. ஒரு புஜத்தில் தொட்டு முதுகில் சரிகிற— வருடுகிற— அந்த உள்ளங்கை, ஓர் ஆண் மகனின் ஸ்பரிசமாக. உள்ளுணர்வில் பதிவாகிறது. மிருதுவற்ற உள்ளங்கை, நனையாத வாசனைச் சோப்பின் உரசல் போன்ற அழுத்த மென்மை. சொற சொறப்புச் சுகம்.

அந்த அழுத்தத்தின் மொழியாக, மனசின் மோக மயக்கம்.

மீண்டும் வெடித்துச் சிதறுகிறாள். அந்த வெலவெலப்பிலிருந்து விடுபடாத நிலைமையில்... இந்த ஸ்பரிச முரண்பாட்டில் அதிர்ந்து போய் நிமிர்கிறாள். அந்த முகத்தைப் பார்க்கிறாள். மீண்டும் மனசு முழுக்க குழப்பமூட்டுகிற மின் அதிர்வு.

குனிந்த நிலையில தன் மீது குடையாக கவிந்து நிற்கிற அது, ஓர் இளம் பெண்தான். ஆனால் முகத்தில் மீசை. லேசான முறுக்கு மீசை.

மீசை முளைத்த பெண்ணா?

சேலை கட்டிய ஆணா?

யார் இது? என்ன இது? நான் ஏன் இந்த ஸ்பரிசத்தில் மயங்குகிறேன்? அழுத்தமான வருடல், மெல்லிய கிசுகிசுப்பு மொழியாக உள்ளிறங்குவதேன்? தேனில் விழுந்த எறும்பாய் சொக்குவதேன்?

ஏனின்னும் கத்தவில்லை, நான்? தப்பியோட ஏன் முயலவில்லை? எனக்கு மானமில்லையா? மான உணர்ச்சி அற்றுப் போனேனா? சொரணையற்றுப் போனேனா? காமக்கிறுக்கேறிப் போனேனா?

த்தூ! நானும் ஒரு மனுசியா? மிருகம்! வெட்கங் கெட்ட மிருகம்!

வெறி கொண்ட சிலிர்ப்பில் அவள். மனசின் ஆழத் திலிருந்து பீறிட்ட வெறுப்புணர்வு. அவளே காறித் துப்ப... அந்த எச்சில் அவள் மூஞ்சியிலேயே அப்பி ஜில்லிட...

பொற்கொடி திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள். வெயில் வெளிச்சமான அந்தப் பிரம்மாண்ட ஹால் இல்லை. சுற்றிலும் இருட்டு. கோரைப்பாயின் சொற சொறப்பு. சுவர்க்கோழியின் வழக்கமான 'ஙீய்ய்ய்...' தூக்கத்திலும் அனத்துகிற அம்மாவின் முனகல்.

அவசரப் பதற்றமாய்—பதைத்துப்போய் உடம்பைத் தடவினாள். நல்லவேளை, விலகிய நிலையில் சேலை கிடந்தது. ஜாக்கெட் இருந்தது. மேல் ஊக்கு அறுத்துக் கொண்டு விடுபட்டுக் கிடந்தது. நெஞ்சு 'திக்கிக்'கென்று பயத்தில் அடித்துக் கொண்டது. மூச்சத் திணறலில் மார்பு விம்மியது.

சேலை இருந்த நிம்மதியில் சற்று சமனப்பட்ட மனநிலை. பதைப்பு வடிந்து, அவளுக்குள் ஓர் ஆசுவாசம். திணறல் விலகி சீராகி வந்த சுவாசம்.

'ச்சே! என்ன கனா' என்று நடுக்கத்துடன் மனசுக்குள் சொல்லிக் கொண்டாள். அவளுள் வேதனையோடு பரவிப் படர்ந்த அசூயை. தானே தனக்கு அசிங்கமாய்த் தோன்றினாள்.

அவளுள் புதைந்து கிடக்கிற ஆழ்உணர்வுதான் இந்தக் கனாவா? அந்த ஆழ் உணர்வு இத்தனை ஆபாசமா? காமக்கிறுக்கேறிய பிசாசுதான், ஆழ்உணர்வு லட்சணமா?

கனவிலும்கூட, தன்மீது தானே காறித் துப்பிக் கொண்டது, ஞாபகத்தில் உரசியது. ஒரு திருப்தி. திமிறுகிற பிசாசுணர்வை சுண்டியிழுத்து அடக்குகிற லகானும் தன்னுள் வலுவாக இருக்கிறதென்கிற திருப்தி.

கனவில்கூட தான் கற்புடன் கனன்று கொண்டிருக் கிறோம் என்கிற சுய நிம்மதி.

சோப்பு போட்டு ஊறிக் கிடந்த துணிமணிகளை கும்மிக் கும்மிப் பிழிந்தாள். அடித்துத் துவைக்க வேண்டிய துணிகளை அடித்து அலசிப் பிழிந்தாள். மோட்டாரின் ஒரு சீரான இரைச்சல். உருக்கி வார்த்த வெள்ளிக் கற்றையாக அள்ளி ஊற்றுகிற நீர்த்தாரை. தொட்டிக்குள் நீர்ப்பெருக்கு. தொட்டியின் மூலைகளில் அடைஅடையாக மிதக்கிற பாசிப் பச்சைகள்.

மஞ்சள் சூரியன் மேற்கு வானத்தை நிறம் மாற்றிக் கொண்டிருந்தது. சாரல் மேகங்களின் சுற்று விளிம்புகளில் தங்க மின்னல்களின் தகதகப்பு. கண்மாய்களிலிருந்து ஏமாற்றத்துடன் திரும்புகிற கொக்குகள்.

சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டாள். ஒரு சுடுகுஞ்சு கூட இல்லை என்கிற தெளிவு. அதற்குப் பிறகே உடுத்தி யிருந்த சேலையை உரிந்தாள். பாவாடையை உயர்த்தி வாயில் கவ்விக்கொண்டு ஜாக்கெட்டை உரித்தாள். பாவாடையை நெஞ்சுக்கு மேலாகக் கட்டிக்கொண்டாள். சேலையையும், ஜாக்கெட்டையும் சோப்புப் போட்டு அலசினாள். சடைப்பின்னலை அவிழ்த்துவிட்டுக் கொண்டு, நீர்க்கற்றையில் தலையைக் கொடுத்தாள்.

தலையில் மோதி... எட்டுத்திக்கும் தெறித்து... தேகத்தில் வழிந்து தழுவிச் செல்கிற அன்பான தண்ணீர். அழுக்கோடு சேர்த்து அலுப்பையும் அயற்சியையும் அள்ளிக்கொண்டு போகிற தண்ணீர். அம்மாவைப் போல

குளிர்ப்பாசமான நீர். வருடலிலேயே மனசுக்குள் சுதந்திரத்தையும், மகிழ்ச்சியையும் சுகமாகக் கொட்டுகிற அன்பான அம்மா. 'தாயைக் கழித்தாலும் தண்ணீயைக் கழிக்காதே' என்கிற சொலவடையை மெய்ப்பிக்கிற பரவச உணர்ச்சி.

குளித்து முடித்தாள். மாற்றுத்துணிகளை உடுத்திக் கொண்டாள். அலசிப் பிழிந்த துணிகளை பொட்டல மாகக் கட்டிக்கொண்டாள். முதுகில் படிந்து ஈரச் சொட்டு போட்ட கூந்தலை அடித்து உதறிப் போட்டுக் கொண்டாள்.

நிம்மதியடைந்து, முழுமையான உணர்வு நிறைவுடன் புறப்பட்டாள். வண்டிப் பாதையில் வந்துவிட்டாள். சற்று நடந்தாள். எதிரில், சற்று தூரத்தில்—

பச்சைக் கைலியும், வெள்ளைப் பனியனுமாக சிந்தாமணி வந்து கொண்டிருக்கிறான், கையில் சுருட்டி மடித்து வைத்திருந்த டர்க்கி துண்டுக்குள் ரோஸ்கலர் சோப்பு டப்பா. கால்களில் நீலக்கலர் ஸ்லிப்பர்.

'அட... இந்த ஆள் எப்ப வந்துச்சு?' மனசுக்குள் ஒரு பூவின் மலர்வு. மகிழ்ச்சியான ஆச்சர்யம். அதைத் தொடர்ந்தே தர்மசங்கடமான ஒரு குழப்பம்; திகைப்பு.

இவளுக்குள் தயக்கத்தில் கால் பின்னுகிறது. மனசுக் குள் சிரமமான ஒரு திணறல். தவிப்பு.

எதிரில் வந்துவிட்டால் 'வாங்க' என்று கேட்க வேண்டும். 'எப்ப வந்தீக' என்று உபசாரமாக விசாரிக்க வேண்டும்.

விசாரிக்காமல் விலகிப் போக முடியுமா? தலையைக் கவிழ்ந்து மௌனமாய் விலகிப் போனால்... அந்நியமாகவும் அநியாயமாகவும் தோன்றாதா? அப்படி விலகிப் போய் விட முடியுமா, தன்னால்?

சரி. எப்படி விசாரிப்பது?

ஒரு பருவக்குமரி, ஒரு முழுத்த வாலிபனிடம் நின்று குசலம் விசாரிக்க முடியுமா? அதுவும் பட்டிக்காட்டு வயசுப் பெண்.

மனசுக்குள் வந்து மறிக்கிற தயக்கம். வயது குறித்த பிரதிக்ஞை. நாணப் படபடப்பு. இதை மீறிக்கொண்டு மனதுக்குள் இயற்கையாகப் பீறிடுகிற நட்புணர்ச்சி. முரண்பட்ட உணர்வுகளின் கிடுக்கிப் பிடிக்குள் பொற்கொடி.

ஏழெட்டு வருஷத்திற்கு முன்பெல்லாம்—

சிந்தாமணி லீவில் ஊர் வருவான். ஒரு மாதம், ரெண்டு மாதம் என்று கிராமத்தில் ரவுண்டு அடிப்பான். அப்போதெல்லாம் பொற்கொடிக்கு நன்றாக இருந்தால்... எட்டு வயசிருக்கும். இல்லையென்றால்... பத்து வயசிருக்கும். பட்டாம்பூச்சி.

இவளை மாதிரி நாலைந்து சிறுமிகள், அவனை 'மாமா, மாமா' என்று சுற்றிச் சுற்றி வருவார்கள். 'பட்டாளத்து மாமா, பட்டாளத்து மாமா' என்று எந்நேரமும் மொய்த்து வருவார்கள். ஆசையும் ஆவலுமாய் அவனையே ரவுண்டு அடிப்பார்கள்.

அவனும் இதுகளுக்குச் சமதையாக சிறுபிள்ளைபோல விளையாடுவான். கதைகள் போடுவான். சதாசர்வ நேரமும் சிரிப்பாணியும் கூத்தும்தான்.

இருக்கிற சிறுமிகளிலேயே தான்தான் ரொம்ப முக்கியமானவள், அவனிடம் உரிமை உள்ளவள் என்று பெருமைப்பவிசை காட்டுகிற ஆசையில், அவன் மடியில் ஏறி உட்கார்ந்து கொள்வாள், பொற்கொடி. அதில்

அவளுக்கு ஏகச் சந்தோஷம். மேகத்தில் ஏறி உட்கார்ந்து விட்ட மாதிரியான பெருமிதப் பூரிப்பில் ஒளிர்வாள், பொற்கொடி.

"கதை போடு மாமா... கதை போடு மாமா..."

என்று நச்சரிக்கத் துவங்குவதும் அவள்தான். அவள் நச்சரிப்பில் உத்தரவிடுகிற மாதிரி சற்று உரத்த குரல் ஒலிக்கும்.

## 10

ஆதி காலத்து ஆசை. வேட்டைக்குப் போய்விட்டு வந்த மனிதக் கும்பலிடம் அனுபவம் இருந்தது. வாய்விட்டுச் சொல்ல வடிவம் பெற்ற மொழியில்லை. பாவனைகள், கைஜாடைகள், வெறும் வாயோசைகள் இவற்றின் உதவியில் அனுபவங்களைச் சொல்கிற போதே கற்பனை கலந்துவிட்டது. கேட்கிறவர்களுக்கு சுவாரஸ்யம் தர— பிரமிக்க வைக்க— கற்பனை கலந்துவிட்டது.

கதை சொல்கிற ஆசையும், கதை கேட்கிற ஆசையும் வனாந்திர வாழ்கால ஆசை. குகை கால ஆசை. ஆதியிலும் ஆதியான ஆசை. முடிவில்லாது நீள்கிற ஆசை, வாழ்க் கையைப் போல. மரணமற்ற ஆசை. சாகாவரம் பெற்ற ஆசை. கண்டுணர்ந்த நிஜங்களின் உயிரிலிருந்து ரெக்கை முளைத்த கற்பனைகளோடு குழைந்த அனுபவப் பகிர்வு தான் கதை. மனஉலகத்தை பிரபஞ்சமாக விரியச் செய்து, கருத்துலக பூமி உருண்டையை படைக்கிற கதை.

நிலா நாட்களில்... வடக்குத் தெரு முற்றத்தில் ராமையா தாத்தா வாயில் பொடியை இழுவிக்கொண்டு உட்கார்ந் திருப்பார். சுற்றிலும் சிட்டுக்குருவிகளைப் போல சிறுவர்

சிறுமிகள். அதுகள்தான் அவருக்கு ரசிகர்கள். நேயர்கள். சிட்டுக்களின் அன்பு நிறைந்த குதூகலக் கூச்சலில் உயிர் கரைய, அவர் மகிழ்ந்து தத்தளிப்பார்.

"தாத்தா... தாத்தா..." என்று ஒரே செல்ல நச்சரிப்புகள். மழைக் காலத் தட்டான்களைப்போல மொய்ப்பு. "கதை போடுங்க தாத்தா... தாத்தா கதை" என்று உயிரைப் பிடுங்கும்.

கறுத்த அவரது தேகத்தில் சுருக்கங்களைப்போல எண்ணற்ற வெள்ளை ரோமங்கள். நெஞ்சு, வயிறு நிறைய நரைத்த ரோம அடர்த்தி.

பொற்கொடி ரொம்பச் சிறுமி. ஆறு, ஏழு வயசிருக்கும். அவளும் அவரே கதியென்று சுற்றிச் சுற்றி வருவாள். தாத்தாவிடம் கதை கதையென்று உயிராய் தவம் கிடப்பாள். பாய்ந்து பிய்த்தெடுப்பாள். அவரது நெஞ்சு ரோமங்களுக்குள் அவளது பிஞ்சு விரல்கள் பூப்போல துழாவும். அவருக்குள் புல்லரிப்பான கூச்சம். பெருமிதப் பூரிப்பு. "ஏய் ஏய்... குட்டிப் பேய்களா... பொறுங்க. கதை போடுதேன். இந்தா... கையை எடு கொரங்கு."

"அய்ய்... அய்ய்..." என்று குழந்தைப் பட்டாளத்தின் மலர்ச்சிரிப்போடு கைதட்டல். "தாத்தா... கதை போடப் போறாரு" என்று உலகத்துக்கே அறிவிக்கிற மாதிரி, கூப்பாடு போடும், குதூகலத்தில்.

தாத்தா போடுகிற கதைகளில் எல்லாம் "ஒரு ஊர்லே ஒரு ராஜா. ராஜாவுக்கு ஒரு ராணி" என்றுதான் துவங்கும்.

அண்டரண்டப் பட்சிகள் வரும். பேசும். வரப் போகிற ஆபத்துக்களை உரைக்கும். பட்சி பாஷை தெரிந்த மந்திரி குமாரன், ராஜகுமாரனை ஆபத்திலிருந்து மீட்பான். விக்ரமாதித்திய மகாராசா கிளியாக மாறுவார். தாசி அபராஞ்சிதாவின் விநோத நிபந்தனையில் சிக்கிய செட்டியாரின் வழக்கில் கிளி மதியூகமாக தீர்ப்பு கூறும்.

பத்து ஊர் அகலத்துக்கு பருத்த ராட்சஸன் வருவான். அவனுக்குச் சோறு, பத்து மாட்டு வண்டிகளில் காடி கட்டி வர வேண்டும். பெரிய பெரிய அண்டாக்களில்தான் சாம்பார். அம்புட்டையும் ஒரு நொடியில் சாப்பிட்டு விடுகிற ராட்சஸன். அப்பேர்ப்பட்டவனை ஒரு சிட்டுக் குருவி ஜெயித்து கொன்றுவிடும்.

தேவலோகக் கன்னியை திருமணம் செய்வதாக சபதம் செய்துவிட்டு சோதனைகளில் சிக்கிக்கொள்ளும் இளவரசன். நீரிலிருந்து எறும்புகளை மீட்பான். பாம்பு வாயில் சிக்கிக்கொண்டு கத்தும் தவளையைக் காப்பாற்று வான். சேற்றில் சிக்கிய பச்சை விட்டிலைக் காப்பாற்று வான்.

ஏராளமான சம்பவங்களுக்குப் பிறகு, தேவலோகம் வந்து சேர்ந்துவிட்ட இளவரசனுக்கு வினோதப் போட்டிகள் எதிர்ப்படும்.

ஆயிரம் பாம்புகள் குடியிருக்கும் பாழுங் கிணற்றில் மோதிரத்தைப் போட்டு எடுக்கச் சொல்கிற போட்டி. ஏழு ஏக்கர் நிலத்தில் ஏழுபடி எள்ளை விதைத்து, ஏழு உழவும் போட்ட பிறகு... ஒரே ராத்திரியில் ஒன்று விடாமல் அம்புட்டு எள்ளையும் பொறுக்கிக் குவிக்க வேண்டும். அப்படியோர் போட்டி. கண்ணாடி நிழல்களைப் போல ஒரே அச்சில் வார்க்கப்பட்ட அத்தனை தேவலோகக் குமரிகளையும் நிறுத்தி, 'உன் மனைவியைத் தொடு' என்று போட்டி.

இந்தப் போட்டிகளில் எதில் தோற்றாலும், இளவரசன் தலை சீவப்படும். ஜெயித்தால் தேவலோக மனைவியோடு சொர்க்க வாழ்க்கை.

எல்லாக் கதைகளிலும் ஏழுலகு முழுவதிலும் மனிதனே இறுதியில் ஜெயிப்பான். உயிரினங்களிடம் காட்டுகிற மனித அன்பு, வெற்றிகளைப் பெற்றுத் தரும்.

நல்லொழுக்கம், மாய வலிமையை வாரி வழங்கும். மானுட நேயத் தர்ம சிந்தனை, சந்தர்ப்பங்களை சாதகமாக்கும்.

தாத்தா கதைகள் எல்லாமே... ஒரு மாய உலகத்தைப் படைக்கும். குழந்தைகளுக்குரிய இனிமையான பிரமிப்புகள் நிறைந்த வினோத உலகம். ஆச்சரியங்களும், அதிசயங்களும் பொங்கும் அன்புமயமான உலகம். கெட்டவர்களைக் கொன்று முடித்து, நல்லவர்கள் வென்று நிற்கிற உலகம். வண்ணத்துப் பூச்சிகளுக்கு பூந்தோட்டம் மாதிரி, இந்த உலகம் குழந்தைகளுக்கு, இயல்பான உலகம்.

பட்டாளத்து மாமா சிந்தாமணி போடுகிற கதைகளும் வினோத உலகம்தான். வேறு வகையான வினோதம்.

வேப்ப மரத்து உயரத்துக்கு பெரீய்ய பெரீய்ய பீரங்கிகள் வரும். பெரிய பெரிய புல்டோசர் வரும். ஒரு பட்டணத்தையே நிமிஷத்தில் நொறுக்கி, பட்டணம் பொடியாக்கி விடுகிற ராட்சஸம்.

வேற்றுலக வாசிகளைப் போல சப்பை மூக்கும், குள்ளத் தோற்றமுமான மஞ்சள் மூஞ்சிக்காரர்கள் போருக்கு வருவார்கள்.

ஆகாயத்தில் மனிதர்கள் மிதப்பார்கள். அலுமினியப் பறவைகள் ஆகாயத்தில் குட்டிக்கரணம் போடும். மேகங்களுக்குள்ளும் மறைந்து சாகசம் பண்ணும், கும்ப கர்ணனைப் போல.

புதர்களும் நகரும். மரங்களும் நடக்கும். செடிகளை— பச்சைக் கொடிகளை மேலே போர்த்திக் கொண்டு துப்பாக்கியோடு ஓடுகிற பச்சைத் தாவர மனிதர்கள்.

சிந்தாமணிக்கு நிஜமாகவே பொற்கொடி மேல் பிரியம். ரொம்பச் செல்லம் கொடுப்பான். தான் விட்டுச் சென்றபோது, நாதியற்றுப் போகாமல் அம்மாவை

கண்ணும் கருத்துமாகக் கவனித்து, ஆதரவாக நின்ற தாழையா நாடாரின் மகள் என்கிற பாச உணர்வு.

தெருவில் எதிர்ப்படுகிற நேரமெல்லாம் கடைகளில் காரச்சேவு வாங்கித் தருவான். பொறிகடலை வாங்கித் தருவான். லீவில் ஊருக்கு வந்த மறுநாளே, அவளுக்காக வாங்கி வந்த உயர்ரக பிஸ்கட் பாக்கட்டுகளைக் கொண்டு வந்து தருவான்.

அதெல்லாம்... அந்த ஊருக்கு ரொம்ப அதிசயமான தின்பண்டம். அந்த ஊரில், அஞ்சு பைசாவுக்கு வட்ட ரொட்டி தான்... பிஸ்கட் என்ற பெயரில் கிடைக்கும்.

பொற்கொடி, பொற்கொடி என்று ஒரே பிரியமாக இருப்பான். மடியில் வந்து வாஞ்சையோடும்—உரிமை யோடும் உட்கார்கிற பொற்கொடியை பாசத்துடன் இறுக்கிக் கொள்வான். தலைக்கு மேல் தூக்கிப் போட்டுப் பந்தாடி விளையாடுவான். கழுத்து வழியாக சுழற்றி இறக்குவான்.

அவளுக்குப் பொத்துக் கொண்டு வருகிற சிரிப்பாணி. மத்தாப்பூவாக ஒளிர்ந்து கலகலப்பாள். அப்படி விளையாடுவதில் அவளுக்கு ஒரு மகிழ்ச்சி. இன்பம். நேரம் போவதே தெரியாது.

அம்மா கூடத் திட்டுவாள்.

“ஏண்டி, அந்தப் புள்ளையாண்டன் கூடவே பொழுதுக்கும் திரிஞ்சு, அது உசுரைப் புடுங்குறே?” என்று கண்டிப்பாள். அதையெல்லாம், காதில்கூட வாங்கிக் கொள்ள மாட்டாள், சிறுமி பொற்கொடி. பருந்தோடு ஒட்டிக்கொண்டே பறக்கிற கரிச்சான் பறவை மாதிரி... அவன் கூடவே பொழுதைக் கரைப்பாள்.

அவன் லீவ் முடிந்து பட்டாளத்துக்குப் போய் விட்டால், இவளுக்கு ரெக்கை ஒடிந்த மாதிரியிருக்கும்.

என்னத்தையோ பறிகொடுத்த மாதிரி, மனசு கிடந்து பரிதவிக்கும். பகற் பொழுதே நரகமாக இருக்கும். சலிப்பும், ஏமாற்றமுமாய் மனசை அழுத்தி இச்சிலாத்திப் படுத்தும்.

இன்னதென்று உணர முடியாத ஒருவித இழப்புணர்வு, அவளை ஒரு ஏக்கமாக பிடித்தாட்டும். அது மாற... சில நாட்களாகும்.

அப்படிப் பழகிய அந்த நாட்கள். மடியில் ஏறி உட்கார்ந்து கழுத்தைக் கட்டிக்கொண்டு, முதுகில் உப்புக்கட்டி ஏறி... கதை கேட்டு நச்சரித்த பட்டாம் பூச்சி நாட்கள். பாவாடை வசந்தம்.

இப்போது—

இவள் பருவச்சிட்டு. வயசுக்கு வந்து நாலு வருஷம் ஆகிவிட்டது. தாவணிப் பருவம் தாண்டி, சேலைக்கு வந்தாகிவிட்டது. முழுத்த பெண்ணுக்குரிய சகல லட்சணங்களும் பொருந்தி வளர்ந்தாகிவிட்டது.

'வாங்க மாமா...' என்று உபச்சார வார்த்தை சொல்லக் கூட மனசு கிடந்து கூசுகிறது. வெட்க உணர்வின் முற்றுகையில் மூச்சு திணறுகிறது.

எங்கிருந்து வந்தது, இந்த வெட்க உணர்வு? எப்படி வந்துவிட்டது இந்த மன இடைவெளி? அந்நியோந்யத்தை விழுங்கி ஜீரணித்துவிட்டு, அந்நியத்தையும், விலகலையும் திணித்தது எது? ஒதுங்கலையும், பயப் படபடப்பையும் உள்ளுக்குள் கொண்டு வந்தது, எது?

சரி... இப்ப என்ன செய்ய?

அந்நியமாய், தலைகுனிந்து மௌனமாய் போய் விடவா? நிமிர்ந்து பார்த்து ஒரு புன்னகையோடு 'எப்ப வந்தீக மாமா?' என்று கேட்கவா?

கேட்டுவிட முடியுமா? வாய் வருமா? மனசு ‘திக், திக்’ கென்கிறதே... நடுங்குதே... உதறல் எடுக்கிறதே... உள் நாக்கு உலர்ந்து போகிறதே....

தலைகுனிந்து விலகிப் போனால் மாமா என்ன நினைப்பார்? வருத்தப்பட மாட்டாரா? நினைவுகளின் முள்முள்ளான சிடுக்குகளில் உணர்வுகள் பின்னிக் கொண்டு தவிக்க—

சிந்தாமணி நெருங்கி வந்துவிட்டான். அவள் மனம், பிடிபட்ட பறவையின் ரெக்கைகளாக....

அவன் முகத்தில் ஒரு மலர்ச்சியான சிரிப்பு. இவளைப் பார்த்த சந்தோஷம். ‘பார்த்திருக்க வளர்ந்துவிட்ட’ இவள் குறித்த ஆச்சர்யமான மகிழ்ச்சி.

“என்ன இது பொற்கொடிதானா! ஆளே மாறிட்டியே. குளிக்கப் போய்ட்டு வாரீயா?”

“ஆமா... மாமா.”

“அய்யா... நல்லாருக்காரா? எங்கே வீட்லே இருக் காரா?”

“ம்... சல்லம்பட்டி போயிருக்காக.”

“அம்மா ஒடம்புக்கு எப்படி இருக்கு?”

“சீரா இருக்கு. நீங்க எப்ப வந்தீக... மாமா?”

“இப்பத்தான்... மூணு மணி பஸ்ஸுக்கு. சரி.... நீ போ.”

விலகி வந்தாள். அவளுக்கு ‘அப்பாடா’ என்றிருந்தது. கனத்த பாரம் மாயமாகிப் போன மாதிரியிருந்தது. சுமுகமாகிய சுவாசம். ஏதோ ஒரு பெரிய கண்டத்திலிருந்து தப்பி வந்த மாதிரி... மனத் திணறல் குறைந்து—

நல்ல வேளை! அவனாகவே ஒரு வழி காண்பித்து விட்டான். திகைப்பை மாயமாக்கி விட்டான்.

வீடு வந்து சேர்ந்தாள். கதவைத் தள்ளினாள். அம்மா கிறங்கிப் போய்க் கிடந்தாள். கொக்குநோய் கண்ட கோழியின் மயக்கம்.

கதவின் மெல்லிய கீச்சிடலில் கண்ணைத் திறந்து விட்டாள்.

"நீதானா?"

"ம்."

"பொழுதாயிருச்சா?"

"அடையப் போகுது."

மகளைப் பார்த்தாள். முகத்தை நிமிர்த்தாமல் இமைகளை மட்டும் உயர்த்தி மகள் முகத்தைப் பார்த்தாள். லயித்த பார்வை.

சின்ன— அழகான— முகம். அம்சமாய் அமைந்த கனிந்த உதடுகள். உதடுகளில் மின்னுகிற குழைவு. கண், மூக்கு, உடல் வாகு எல்லாமே அவரச்சுதான். நிறம் மட்டும்தான் தன்னைப் போல...

குளித்த ஈரக் கூந்தல் கருகருவென்று ஈரமின்னலாய்... இடுப்புக்கும் கீழே இறங்கிக் கிடக்கிறது. மஞ்சள் பூசிய முகச்சுடர். அதன் பிரகாச அமைதி.

செம்பகத்தின் இமைகள் தட்டி முழித்தன. தனது வயிற்றில் இப்படியோர் தங்கரதமா? ராணி மாதிரி கம்பீரமாய்....

"என்னம்மா... இப்படிப் பாக்கீகம்மா....?"

"அம்பத்தாறு தேசத்து ராணி கணக்கா... இருக்கீயேடீ."

"ஆமா. கிரீடத்தை குளிக்கப் போன கெணத்துலே வைச்சுட்டு வந்துட்டேன்."

"நீ ராணிதாண்டி. ஊரே அசந்து போற மாதிரி ஜாம் ஜாம்னு வாழப் போற."

"நீங்கதான் மெச்சிக்கணும்."

"இல்லேடி... நா சொல்ற வாக்கு பலிக்கத்தான் போகுது. நா இருந்து பாக்கேனோ... இல்லியோ.... நீ உசத்தியான வாழ்க்கை வாழப் போறே... ஒனக்குன்னு ஒரு ராசா... எங்க பொறந்துருக்கானோ?"

"போங்கம்மா..."

அவளுக்குள் இன்பக் கிளுகிளுப்பு. அதை மறைத்துக் கொள்கிற திரைகளாக... வெட்கச் சிணுங்கல்கள்.

துணிகளை யெல்லாம் காயப் போட்டிருந்தாள். வீட்டைப் பெருக்கி முற்றம் தெளித்தாள். பசுமாட்டுக்கு புல்லையள்ளிப் போட்டாள். மாடு இவளைப் பார்த்தது. வாலையாட்டி ஈக்களை விளையாட்டாக விரட்டி விட்டது.

ஈரக்கூந்தலை சிக்கெடுத்து அடித்து உதறிவிட்டு நுனியில் மட்டும் பின்னல் போட்டு துவளப் போட்டுக் கொண்டாள். கண்ணாடியில் முகம் பார்த்தாள். அவளது அழகு, அவளையே வசீகரித்தது. முகத்தின் மிருதுவும், மின்னுகிற நிறமும், மஞ்சள் திட்டும்...

கறுப்புப் பொட்டு வைத்துக் கொண்டாள். கண்களை உயர்த்தி பொட்டை சரிப்படுத்தி வடிவமைத்துக் கொள்கிற போது—

அவளுக்குள் அம்மாவின் குரல்—

"ஒனக்குன்னு ஒரு ராசா... எங்க பொறந்துருக்கானோ..."

அவளுள் வர்ணம் வர்ணமாய் பறவைகள். ஜிவ்வ் வென்று சிறகடித்து நாலா திசைகளிலும் ஒளி சிந்துகிற வர்ணப் பறவைகள்.

உயர உயரப் பறந்து, ஆகாயத்தின் நீலம் முழுவதையும் அள்ளிக் கொண்டு, மேக வீதிகளைக் கடந்து குறுக்கும் நெடுக்குமாய் 'விர், விர்'ரெனப் பறந்து பாய்கிற பறவைகள்.

பறவைகள்... பறவைகள்... பறவைகள்....

ஆகாயமே தெரியாமல் அடர்த்தியாய் வர்ணப் பறவைகள். பறவைகளோடு இணைந்து, அந்தரத்தில் சலன நெளிவுகளோடு மிதக்கிற பச்சைக் கைலியும், வெள்ளைப் பனியனும்...

அந்தக் கனவு மயக்கத்திலிருந்த பொற்கொடியை ஒரு செய்தி தீயாகத் தீண்டி துடிக்க வைத்தது.

"முத்துலட்சுமி மருந்தைக் குடிச்சு செத்துப் போய்ட்டா..."

## 11

அந்தச் சாயங்கால நேரத்தில் முத்துலட்சுமி செத்துப் போன செய்தி, ஆடி மாசத் தீ மாதிரி ஊர் முழுக்க பரவியது. சூறைக் காற்றுக்கு இழுபட்ட துணியாக ஓடிச்சாடிய ஜனங்கள் நம்ப முடியாமல் திணறித் தவித்தனர்.

"நெசமா?"

"யாரு... நம்ம ராமாயி மகளா...?"

"செத்தே போய்ட்டாளா...? உசுர் கெடக்கா?"

"வெறைச்சுட்டா. வாய்லே தள்ளுன நொரையெல்லாம் காய்ஞ்சு போச்சு..."

"அடக் கூத்துவனே.... என்ன சண்டை—சத்தமா?"

"ஒரு சத்தமுமில்லே வூட்லே?"

"பெறகென்னத்துக்கு மாய்க்சுக் கிட்டாளாம்?"

"கொமரிப்புள்ளே. உள்ளுக்குள்ளே என்ன கசா புசாவோ...?"

வீட்டு வேலை ஜோலிகளை அப்படியப்படியே போட்டுவிட்டு தெருவில் பாய்கிற ஜனங்கள். தெருவின் திசையெல்லாம், முத்துலட்சுமி வீட்டுக்கு.

பொற்கொடிக்கு ஒன்றுமே திகையவில்லை. 'செத்துப் போனாள்' என்ற நிஜத்தை ஜீரணிக்கவே முடியவில்லை. வளர்த்தியான அந்தக் கறுப்புத் திரேகம். விரிந்த நெஞ்சுப் பகுதி. பெண்களையே ஏறெடுத்துப் பார்க்க வைக்கக் கூடிய நிமிர்வு. உதடுகளுக்குக் கட்டுப்படாத மேல் வரிசைப் பற்கள்...

தன்னோடு பாவாடை நாளிலிருந்து விளையாடித் திரிந்தவள். கிணற்றுக்குள் குதித்துக் குளிப்பதில் ஆம்பளை போல ஆசைப்படுவாள். எத்தனை உயரத்திலிருந்தும் குதிப்பாள். பயப்படவே மாட்டாள். கமலை மேல் குரங்கு போல தொத்தி ஏறி நிற்பாள். கிணற்றுக் குள்ளிருந்து பார்க்கிற பொற்கொடிக்கு மனசு படபடக்கும். ஆகாயத்து மேகத்துடன் பின்னிப் போயிருப்பதைப் போலத் தோன்றும்.

சாகசமாக சிரிப்பாள். கையைத் தட்டுவாள்.

"தண்ணியெனக்கு தாயீ...

தண்ணியெனக்கு தாயீ..."

என்று பாட்டாய் பாடிக்கொண்டு குதிப்பாள், ஆகாயத்திலிருந்து வருகிற மழைத்துளி போல. பாவாடை...

குடையாக விரிந்து புடைக்கும். அதில் அவளுக்குக் கூச்சமேயிருக்காது.

'தொபுக்கடி' என்ற நீரின் அதிர்வுச் சத்தம். எட்டுத் திசையும் வட்டமாய் தெறிக்கிற தண்ணீர். கிணறே ஒரு ஆட்டம் ஆடி அடங்குன மாதிரி இருக்கும்.

நுரைகளின் அடர்த்தியோடு உள்ளிருந்து பேய் மாதிரி தலைவிரி கோலமாக வருவாள்.

"அடி கழுதை... பயமாயில்லியா... ஒனக்கு?"

"என்ன பயம்? தண்ணி அம்மா மாதிரி."

"வெட்கமாயில்லே?"

"நீயென்ன ஆம்பளையா? நமக்குள்ள என்ன வெட்கம்?"

என்று வெள்ளந்தியாகச் சிரிப்பாள். முங்கு நீச்சலில் அவளிடம் மீன்கூட தோற்றுப் போகும். கிணற்றுச் சுவரிலிருந்து சறுக்குப் பாய்ச்சல் (தலைகீழாக) பாய்வாள். ரெண்டு சுழற்சி சுழன்று வந்து திருகுச் சறுக்கல் பாய்வாள்.

'அடப் பாதகத்தி... அதுலே யெல்லாம் ஜெயிச்சிட்டு.... இதுலே தோத்துட்டீயேடீ...'

பொற்கொடிக்குள்ளே கனத்த மேகமாய் அடர்ந்து நின்ற சோகம்.

முத்துலட்சுமிக்குள் தன் அழகு பற்றிய தாழ்வுணர்ச்சி.

"ரோட்லே ஊத்துற தாரு மாதிரி நெறம். ஒடுக்குப் பிடிச்ச வெளக்குமாறு மாதிரி திரேகம். என்னை எவன் ஏறெடுத்துப் பாப்பான்...?"

"என்னத்துக்கு ஒருத்தன் நம்மளைப் பாக்கணும்டி?"

“ஒனக்கென்ன மகராசி. தங்கக்கட்டி மாதிரியிருக்கே. மொகலட்சணம். எனக்குப் பல்லைப்பாரு, கிளிமூக்கு மாதிரி. என்னை எவனாச்சும் பாத்தான்னா, இதுக்காகத் தான் பாப்பான்” என்று தன் மார்பகத்தைக் காட்டுவாள்.

“ச்சேய்... ஒனக்கு வெக்கமேயில்லே... லஜ்ஜை கெட்டவ.”

“அடியே... இருக்குறவ நீ. தளும்பாமே அடக்கமா இருப்பே. இல்லாதவ நா. கொறைகுடமா கூத்தாடுதேன்... அம்புட்டுத்தான்.”

“என்னது... இருக்குறவ— இல்லாதவ?”

“லட்சணம்.”

இந்தத் தாழ்வுணர்ச்சி அவளை ரொம்ப வாட்டும். எதிரே, போகிற— வருகிற இளவட்டங்களின் கண்களை நுட்பமாகப் பார்ப்பாள். தன் மேல் எந்த இடத்தில் அவன் பார்வை நின்று நிலைத்து விலகுகிறது என்பதை ஒரு கணத்தில் புரிந்துகொள்வாள். அதை ரசிப்பாள். தான் ஆசையோடு பார்க்கப் படுவதை ஒரு ஏக்கமாய் ரசிப்பாள்.

‘அட ராட்சஸி... அந்த ரசனைதானடி... தீயாய்ப் பிடிச்சு ஒன்னைச் சாம்பலாக்கிருச்சு...’

முத்துலட்சுமி புல்லறுப்பில் படுசுட்டி. தீ வேகம்.

பொற்கொடி ஒரு புஞ்சைக்குள் நுழைந்தால்... நாலு புஞ்சை தள்ளி முத்துலட்சுமி. கூப்பிடுகிற சத்தம் கேட்காது. பக்கத்தில் ஒரு மனித ஜீவன் இருக்கிறதென்கிற நினைவு தான் தைர்யம்.

இவள் ஒரு பெட்டிக்கு புல்லறுத்து முடிப்பதற்குள்.... அவள் வந்து பாதையில் நிற்பாள். பெட்டி நிறைய நிறைய திணித்திருப்பாள், புல்லை. கடாப் பெட்டி வட்டமாய் புடைத்திருக்கும்.

"அடியே... பொற்கொடி... இன்னும் முடியலியா?"

"முக்கால் பெட்டிகூட நிறையலே..."

"வேலையப் பாரு வேலையை...! 'பொடு, பொடு'ன்னு செய்ய வேண்டாம்? இவா... ஒரு அசமந்தம்... பாப்பாத்திப் புள்ளே நண்டு பிடிச்ச மாதிரிதான்..."

"ஒன்னோட வேகத்துக்கு என்னாலே ஆகாதடி" என்று தோல்வியை ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு வழியிருக்காது, பொற்கொடிக்கு.

முத்துலட்சுமி புல்லை அறுப்பதில்தான் அவசரம் என்று நினைத்திருந்தால்... உயிரை அறுத்துக்கொள்வதிலுமா இத்தனை அவசரப்பட்டிருக்க வேண்டும்?

அன்றைக்கும் அப்படித்தான். பொற்கொடி புல்லறுத்து முடித்துவிட்டாள். கடாப்பெட்டிக்குள் திணித்து திணித்து கோபுரங்குத்தியாக புல். இன்னும் முத்துலட்சுமியைக் காணோம். என்னாச்சு இவளுக்கு? முன்பாகவே வந்து 'முடியலியா...முடியலியா' என்று நச்சரிக்கிற முத்துலட்சுமிக்கு இன்று என்னாச்சு?

ஆளைக் காணலியே... ஒடம்புக்குச் சொகமில்லையா? ஏதாச்சும் தலைவலி வயிற்று வலியா...? அப்படியும் தெரியலியே.... இன்னைக்கு வருகிறபோது சந்தோஷக் கெந்தளிப்போடு வந்தாளே... ஊருக்குப் போகிற கிராமத்துச் சிறுமி மாதிரி, சுதாரிப்பான குதூகலத்தோடு வந்தாளே...

பெட்டியைக் கொண்டுவந்து வண்டிப் பாதையில் வைத்த பொற்கொடி, முத்துலட்சுமி நுழைந்த நாத்துப் புஞ்சையை நோக்கி நடந்தாள். அந்தப் புஞ்சையிலிருந்து வெளியேறி, பாதைக்கு வந்து, இவளுக்கு முதுகைக் காட்டி தூரத்தில் போகிற சங்கையா.

'இவனுக்கு இங்கென்ன வேலை? என்ன ஜோலி?'

பொற்கொடிக்குள் 'திக்'கென்றது சட்டென்று... கட்டறுந்த பசுங் கன்றுகுட்டியாக தாறுமாறாக ஓடுகிற யூகங்கள். சங்கடமான நினைவுகள். வயிற்றைப் பிசையும் கற்பனைகள்.

நாற்றுப் புஞ்சைக்குள் கருவேல மரங்கள். குடையாக விரிந்து கம்பீரமாக நிற்கிற மரங்கள். நீள நீள முட்கள். முட்களை விட பொடி பொடியான இலைகள். மஞ்சள் மஞ்சளாய் பூக்கள், தேன் கூட்டுக் கம்மல் மாதிரி.

பூச்சி புழுக்களைக் கொத்திக் கொத்தித் தின்கிற மைனாக்களின் மகிழ்ச்சிக் குதியாட்டம். பூஞ்சிட்டுகளின் சிட், சிட், சிட், டென்கிற தேன்கீதம்.

...அன்றைக்கு தங்களைக் கடந்து சைக்கிளில் போன சங்கையா— முத்துலட்சுமியை இருமுறை திரும்பித் திரும்பிப் பார்த்த அவன்— இவள் சிரித்த சிரிப்புக்குப் பதில் போல சிரித்த சில்மிஷம்— நெஞ்சுக்குள் முள்ளாகக் குத்தியழுத்திய அந்தப் புன்னகை—

மெல்ல நாற்றுக்குள் நடந்தாள். சோளநாற்றுக் கொண்டைகள் முகத்தில் உரசுகிறது. நாற்றுக்குள் படர்ந்து கிடக்கிற அதளைக் காய் கொடிகளை மிதித்துவிடாமல் உள்ளே போனாள்.

கோபுரங்குத்தியாக பெட்டியில் புல். எப்போதோ முடிந்துபோன வேலை. இந்தச் சிறுக்கியை எங்கே? இன்னும் கொஞ்சம் நடந்தாள். ஒரு கருவேல மரத்துக்குக் கீழே...

முத்துலட்சுமி. ஒதுங்காமல் ஒதுக்கிக்கிடக்கிற சேலையுடன் தேனில் விழுந்த எறும்பாக எழ முடியாத மனத்திளைப்பில் கிறுகிறுத்துக் கிடக்கிற பாதகத்தி.

ஜாக்கெட் ஊக்குகளைக் கூட போட்டுக் கொள்கிற நிதான மில்லாமல் அடித்துப் போட்ட நாயாக துவண்டு கிடக்கிற சிறுக்கி. குத்துக்கால் வைத்த நிலையில் தொடையில் சரிந்து கிடக்கிற பாவாடை.....

பொற்கொடிக்குப் புரிந்து போய்விட்டது.

அரவமில்லாமல் திரும்பி வந்துவிட்டாள். மனசு கிடந்து கொதித்தது. அருவெருப்பில் கிடந்து கூசினாள். 'இனி இவளோட சங்காத்தமே வைச்சுக்கக் கூடாது. ச்சேய்! மானங்கெட்ட சிறுக்கி.'

என்ற கோப வைராக்கியத்தில் ஒற்றை மனுசியாய் வீடு வந்த பொற்கொடி.

ராமாயி அழுகக்கூடத் திராணியில்லாமல் முற்றத்தில் சரிந்து கிடந்தாள். வீடு இருந்த தெரு முழுக்க மனிதர்கள். திகிலும் பரபரப்புமாய் ஆட்கள். எல்லார் முகங்களிலும் உயிரற்ற வெறுப்பு. 'என்ன செய்யுறது' என்கிற திகைப்பிலும், குழப்பித்திலும் ஜனங்கள்.

முத்துலட்சுமி கர்ப்பமாகியிருப்பாள் என்கிற சந்தேகம் எல்லார் மனசிலும். கல்யாணமில்லாத கர்ப்பம். கர்ப்பத்திற்கான காரணம் யார்? அவன்தான் இந்தக் கோரச் சாவுக்கும் காரணம். அவனைக் கண்டு பிடிக்க வேண்டாமா? தண்டிக்க வேண்டாமா? அப்படியென் றால்... போலீஸுக்குப் போக வேண்டும். அவர்கள் ஜீப்பில் வருவார்கள். ஊரே குட்டைப் புழுதியாகிவிடும். அது மட்டும்தானா?

முத்துலட்சுமி பிரேதத்தைக் கொண்டுபோய் விடுவார் கள். பீஸ்பீஸாக அறுத்து, ஓலையில் கட்டி, ஒப்படைத்து விடுவார்கள். அப்புறம்—

சாவு ஓர் இழப்பு என்றால்... சொச்சமிச்சமாக இருக்கிற மான மரியாதையும் பறிகொடுத்து... அசிங்கப் பட்டு நிற்கணும்.

கூட்டத்திலிருந்த சிந்தாமணியை யாரோ சுரண்டுவது போலிருந்தது. பார்த்தால்... வேல்சாமி. 'இங்க வா' என்று ரகசியமாக ஜாடை காட்டிவிட்டு நகர்ந்தான். சத்த மில்லாமல் இடம் பெயர்ந்து, அவன் தடம் தொடர்ந்தான். ஒரு கூரைவீட்டுத் தாழ்வாரம்.

"என்ன."

"சாவுக்கு என்ன காரணம், தெரியுமா?"

"ஒனக்குத் தெரியுமா?"

"ம். சங்கையாதான்."

"யாரு...?"

"எங்க சாதிப் பயதான்..."

"அவனா...?"

சிந்தாமணி சுத்தமாக அதிர்ந்தான். விஷயம் வெளியே வந்தால்... ரெண்டு சாதிக்கும் இடையிலுள்ள உறவு பாதிக்கும். சகஜ நிலை கெடும். பேசத் தெரியாமல் நாலு பேர் பேசி 'வார்த்தைகளை' தவறவிட்டு விட்டால்... சாதிச் சண்டையே கூட வந்துவிடும்.

சிந்தாமணிக்குள் பயம். உள் பதற்றம்.

வேல்சாமி முகத்துக்கு ரொம்ப நெருக்கமாய் முகம் வைத்துக் கிசுகிசுத்தான், சிந்தாமணி. "இதெப்படி... ஒனக்குத் தெரியும்?"

"கண்ணாலே பாத்தேன்... ரெண்டு மூணு தடவை. வெறகு வெட்டிட்டு குளிக்கப் போனேன். அந்தப் பம்ப் ஷெட்லே ஒரு நா பாத்தேன்."

"அதெப்படி... அடுத்தவுக பம்ப் ஷெட்லே?"

"பூட்டு கதவு இல்லாத பம்ப் ஷெட்."

"அப்புடியா...?"

"அப்புறம்... ஒரு வெறகுக் கூப்பு. ரேட்டு பேசுறதுக்கு முந்தி ஒரு பார்வை பாக்கலாம்னு போயிருந்தேன். அந்த வேலி மரக் கூட்டத்துக்குள்ளேயும் இதுகள்தான்..."

"சரி... இப்ப என்ன செய்யணும்ங்கே?"

"அதான்... எனக்கும் புரியலே. ஒரு அப்புராணிப் பொண்ணை இப்படிப் பாழாக்கி நாசமாக்கிட்டானே எங்க பய? அதை நெனைச்சா... மனசு கிடந்து தீயா எரியுது...."

அப்போது சுப்ரமணியும் அந்த ரகசியக் கூட்டத்தில் வந்து அரவமில்லாமல் ஒட்டிக் கொண்டான்.

"அது சரித்தான். ஆனா.... முத்துலட்சுமி எடம் குடுக்காம அவன் பழகியிருக்க முடியுமா? இந்த சைடையும் பாக்கணும்லே?"

"பாவம், அதுக்கென்ன தெரியும், பட்டிக்காட்டுப் பொட்டைப் புள்ளே? விரிக்கிற வலையிலே காடை சிக்கிட்டா.... காடையை எப்புடி குத்தம் சொல்ல முடியும்."

அந்நேரம்—

தீராத பிரச்சினையில் சிக்கி அல்லாடுகிற மனத் தீவிரம், முக இறுக்கத்தில் தெரிய 'விசுக், விசுக்'கென நடந்து போன வாயடி நாடார். அவர் நடையில் இருந்த ஒரு பரபரப்பு. இவர்களை கடைக்கண்ணால் பார்த்துவிட்டு, விரைகிற அவரது வேகம்.

"மாமா..."

"என்ன சிந்தாமணி."

"கொஞ்சம் இங்க வரணும்."

"முக்கிய ஜோலியா போய்க்கிட்டிருக்கேனே..."

"அந்த ஜோலி சம்பந்தமாகத்தான்."

தாழ்வாரத்தில் அவரும் ஒதுங்க, குசுகுசுக்கிற குரலில் வேல்சாமியும், சிந்தாமணியும் மாறி மாறி நடந்த கதையைச் சொல்ல... அவர் கண்ணில் கவிகிற சோகம். நெற்றியின் குறுக்காக யோசனைச் சுருக்கங்கள். பதற்றத்தை மறைக்கிற முயற்சியாக மீசை நுனியை நுனிப்பல்லுக்குக் கொண்டு வந்து கறும்பிக்கொண்ட உக்கிரம்.

"சரி... இது வேற யாருக்காச்சும் தெரியுமா?"

"ஒரு சுடுகுஞ்சுக்குக் கூடத் தெரியாது. யாருகிட்டேயும் நா மூச்சு காட்டலே. சிந்தாமணிகிட்டேதான் வாயைத் தொறந்தேன்."

"நல்லதா...ப் போச்சு."

"சரி.... மாமா, இப்ப என்ன செய்ய?"

"மானாவரிக் காடு. வேனாக் கொதிக்குற வெயில்லே காய்ஞ்சு கிடக்குற வெக்கை மண்ணு. கந்தகப் பூமி. சின்னப் பொறிகூட... அசந்துட்டா பெரு நெருப்பா ஊரைப் பொசுக்கிரும். சண்டை சத்தம்னு வந்துட்டா... சாதிசனம் சகலத்துக்கும் தும்பம்."

"ஆனா... ஒரு பெண்ணுக்கு ஞாயம்..."

"ஞாயம் முக்கியம்தா. அதைவிட ஒத்துமை முக்கியம். ஒருத்தனைவிட ஊரு முக்கியம்."

"அப்போ...?"

"அப்படியே கமுக்கமா அமுக்கிருவோம். தப்புப் பண்ணுன சங்கையாவை தர்மம் கண்டிக்கட்டும். ஊரைத் தண்டிச்சிராம... நாம வாயைப் பொத்திக்கிடுவம்."

"அப்புடியா....?"

வேல்சாமி குறுக்கிட்டான்.

"எங்காள்க பெரிசுக காதுலேயாச்சும் ரகசியமா போட்டு வைக்கலாமே... சங்கதியை."

"கெட்டது குடி. ஒரு பெரிசுகிட்டே சொன்னா... அவன் பொண்டாட்டி காதுலே போய் குசுகுசுப்பான். அப்புறம் ஊர் பூராவும் சங்கதி போயிரும். சங்கடம் வந்துரும். இதோட... விட்டுருங்க."

வாயடி நாடார் உறுதியாக அடித்துச் சொல்லிவிட்டு நடந்தார். திகைத்துக் கிடந்த கூட்டத்தைப் பார்த்தார்.

"என்ன... ஒருத்தர் மூஞ்சியை ஒருத்தர் பார்த்துக் கிட்டேயிருந்தா... எப்படி?"

"என்ன செய்ய?"

"ஆக வேண்டிய காரியத்தைப் பாருங்க. வண்டியைப் போடச் சொல்லுங்க. முண்டு விறகு கிடந்தா தூக்கிப் போடுங்க. மயானக்கரை போவட்டும்."

"விசாரிக்க வேண்டாமா?"

"என்னத்தை விசாரிக்க? விசாரிச்சு என்ன ஆகப் போகுது? செத்துப் போனவா... வந்துரவா போறா? நடக்குற காரியத்தைப் பாருங்க."

தாழையா போட்ட தடத்தில் ஊர் மொத்தமும் பயணப்பட... கனத்த நெஞ்சுகளில் மர்ம நினைவுகள் அழுத்த... காரியம் நடந்தது.

நிமாண்ட் நாழியில் பஸ்பமானாள்... முத்துலட்சுமி.

மயானக்கரையை விட்டு ஈரவேட்டி துண்டோடு வந்த தாழையா நாடார் கண்ணில் பட்டான், சங்கையா.

'இந்தப் பாவிப்பய செய்ஞ்ச வினை. ஊரே எரிஞ் சிருக்கும். நல்லவேளை... எந்தச் சாமி புண்ணியமோ.... சண்டை சத்தமில்லாம முடிஞ்சது.'

ஆறுதலான நினைவுகள் அவருக்குள்.

ஆனால், சங்கையாவின் 'வினை'கள் இந்த ஊரையே சூறாவளிக் காற்றில் சிக்கிய கந்தல் காகிதமாக ஆக்கப் போகிறது என்பதைக் கண்டாரா... என்ன?

## 12

பன்னிரண்டு மணிக்கு வந்து சேர வேண்டிய பஸ், ஒரு மணிக்குத்தான் வந்து சேர்ந்தது. ரோடு ரோடாகவா இருக்கறது? தாய் தகப்பனில்லாமல் நாதியற்றுப் போன பிள்ளைபோல... நாய் வாயில் சிக்கிய கந்தல் சாக்காகக் கிடக்கிறது. பத்து வருசமாக தொட்டுப் பார்க்காத ரோடு. காலம், தாரையெல்லாம் பெய்ர்த்துத் தின்றுவிட... மேடும் பள்ளமுமாக...

எருமை படுத்தால் தெரியாத பெரும் பள்ளங்கள்.

இந்த அளவுக்காவது பஸ் வந்ததே... டிரைவர் கண்டக்டர் புண்ணியத்தில்தான். கிராமத்து ஜனங்கள் காட்டுகிற அன்பைப் புரிந்துகொண்ட தொழிலாளிகள்.

ஊசி மருந்து, டானிக், மாத்திரை கொண்ட மஞ்சள் பையை பொற்கொடியிடம் தந்துவிட்டு, செம்பகத்தைக் கூட எட்டிப் பார்க்காமல் தெருவில் பாய்ந்தார், வாயடி. அவருக்கு ரெக்கை முளைத்துவிட்ட மாதிரி பறந்தார். 'விசுக், விசுக்'கென்று நடை. அந்தப் பரபரப்பிலும் மீசையை நீவி விட்டுக்கொள்ள மறக்கவில்லை.

டவுனுக்குப் போயிருந்தார். அவரைப் பார்த்த பருத்தி வியாபாரிகள் ரெண்டு பேர், அறவை மில்லுக்காரர்களிடம் ரெண்டு லாரி லோடுக்கு ஆர்டர் வாங்கி விட்டார்களாம். உடனே சரக்கு வேண்டுமாம். ஆலாய் பறந்து வந்த அந்த வியாபாரிகள் கண்ணில் இவர் பட்டவுடன்... கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்துவிட்ட மாதிரி சந்தோஷப் பட்டனர்.

'இப்பவே பொறப்படணும்' என்று நச்சரித்தனர். இவர் யோசித்தார். மீசை ரோமத்தை உருவி உருவி யோசித்தார்— யோசனைகளே அதிலிருந்து வருவதைப் போல.

"என்ன.... ரொம்ப யோசிக்கிறீர்? சரக்கு இல்லியா?"

"சரக்கு இருக்கு... நாலு லோடு கூட ஏத்தலாம்."

"அப்புறமென்ன?"

"இன்னைக்கு முடியாது. எனக்கு ஜோலியிருக்கு."

"இதைவிடவா, முக்கிய ஜோலி?"

"ஒங்களுக்கு ஒங்க ஜோலி முக்கியம்..."

"அப்ப...?"

"நாளைக்கு வாங்க. தாட்டுக்கட்டு, ரூவாக்கட்டுக ளோட வந்துருங்க. நாளையே 'பேசி' எடை போட்டுருவம். பணத்தைக் கட்டித் தூக்கிருங்க."

"நாளை முடிஞ்சிருமா? நிச்சயமாவா?"

"அதென்ன அப்படிக் கேட்டுட்டீங்க? நா சொன்ன சொல்லுக்கு மேலே அப்பீலா? வாங்க முடிச்சிருவம்..."

"அது போதும். இதுக்குத்தான் வாயடி நாடாரு வேணும்ங்கிறது."

அவ்வளவுதான். இவரை பிரியாணி கடைக்குக் கூட்டிப் போய் ஒரேயடியாக சீராட்டினர், வியாபாரிகள். இவரது கையிலிருந்த பில்லைக்கூடப் பிடுங்கிக் கொண்டனர். ஊசி மருந்து, டானிக், மாத்திரையெல்லாம் வாங்கி பார்சல் பண்ணி பஸ்ஸில் ஏற்றிவிட்டனர். "நாளைக்கு வந்துருவம்... கட்டாயமா வந்துருவம்" என்று மறுபடி மறுபடி குழைந்தனர்.

பிரியாணிக் கடையில் பிரியாணி சாப்பிட்டுக் கொண்டே பேசுகிற போது.... ஒரு விஷயத்தை 'வாடை' பிடித்து விட்டார். அதாவது, பருத்தி மார்க்கெட் குவிண்டாலுக்கு நூறு ரூபாய் ஏறியிருக்கிறது.

'பழைய விலை நிலவரத்திலேயே சரக்கை அமுக்கி விடலாம், கிராமங்களில்' என்பது வியாபாரிகள் கணக்கு. அதற்குத்தான் இத்தனை பறப்பு. நச்சரிப்பு. உபசரிப்பு.

இவரா... விடுவார்? சம்சாரி மகனாயிற்றே... சம்சாரி ரத்தம் உடம்பில் ஓடுவதில் பெருமைப்படுகிறவராயிற்றே... உள்ள நிலத்தை 'பார்க்க' வழியில்லாமல் தரிசாகப் போட்டு விட்டு, தரகு தொழிலில் வயிறு வளர்ப்பதை குற்ற உணர்வாக உணர்பவராயிற்றே.

அதனால்தான்... நாளைவரை அவகாசம் வாங்கிக் கொண்டார். அதற்குள் பருத்தி வைத்திருக்கிற சம்சாரிகளை எச்சரிக்கை பண்ண வேண்டும், 'நரி வருது' என்று நாய் குரைத்து ஆடுகளைக் காப்பாற்றுவதைப் போல...

அந்த வேலையாகத்தான் வாயடிக்கு இத்தனை பறப்பு. பட்டாளத்துக்கு மகனை அனுப்பப் 'பறந்து' கொண்டிருக்கும் கந்தையா நாயக்கரைத் தேடி ஓடினார். நாயக்கமார் தெரு நாய்கள் இவரது திடீர் வருகையில் அதிர்ந்து கோபமுற்று காதுகளை விடைத்தன. 'ர்ர்ர்ர்'ரென்றன.

ஆளைப் பார்ப்பதற்கு முன்பாகவே... பரிச்சயமான ஆள்வாடையில் சமாதானமடைந்தன. உறுமியதற்கு மன்னிப்பு கோருகிற இணக்கமான செருமலில் தலையை மடக்கிக் கொண்டன.

நல்லவேளை... நாயக்கர் வீட்டில் இருந்தார்.

"ஐயா..."

வீட்டுக்குள்ளிருந்து "யாரது?" என்ற மொட்டை விசாரிப்பு. தலையை வெளியே நீட்டிய அவர் முகத்தில் பளிச்சென்ற வெளிச்சம்.

"அடடே... வாயடி நாடாரா...? வாரும் வாரும்..."

"ஆமய்யா...."

"என்ன... கொதிக்குற வெயில்லே? ஏதும் விசேஷமா?"

"ஆமய்யா..."

"என்ன சங்கதி?"

"பருத்திக்கு நாளைக்கு ஆள்க வாராக."

"அப்படியா? ரொம்ப நல்லது. சொன்னபடியே செய்துட்டீரே..."

"அதுமட்டுமில்லே...ய்யா..."

"சொல்லும். வர்ற ஏவாரிக யாரு? வாங்கி விக்குற ஏவாரிகளா... வாங்கி அரைக்குற அரவைமில்லுப் பார்ட்டியா?"

"ஏவாரிகதான். நா சொல்ல வர்றது என்னன்னா...?"

"ம்?"

"பருத்தி வெலை 'உசும்பி'யிருக்கும் போலத் தெரியுது. அம்பது நூறு கூடியிருக்கும் போல அரச புரசலாத் தெரியுது."

*"அப்படியா...?"*

*"அதனாலே... நாளைக்கு ஏவாரிகளோட வருவேன்... நீங்க வெலை சொல்றபோது, நூறு ரூவா ஏத்திச் சொல்லுங்க...."*

*"சரி சரி..."*

*"நா இப்புடி வந்து 'குட்டு நட்'டை சொல்லிட்டுப் போனது யாருக்கும் தெரியக்கூடாது... அதுலேயும் ஏவாரிகளுக்கு சுத்தமா தெரியக் கூடாது."*

*"ஆட்டும்... ஆட்டும்."*

*"அப்ப நா வாரேன். நாளைக்கே ஒமக்கு பருத்தி நோட்டாயிரும்."*

*"ஆட்டும். ஆமா... நாடாரே, இந்தக் காலத்துலே ஒம் மைப்போல ஒரு தரகரைப் பாக்க முடியுமாய்யா? கூடப் பொறந்த அண்ணந் தம்பிககூட இம்புட்டு அக்கறையா ஓடி வந்து... ஒத்தாசையா யோசனை சொல்லுவாகளா...?"*

*"இருக்கட்டும்யா... சம்சாரிக நீங்க ஆலமரம் போல. வாடாம செழிச்சு நின்னா... எங்க கூட்டாளிக பறவை போல வந்து உக்காந்துக்கிடலாம். உங்க 'முத'லைப் பிடுங்கி ஏவாரிக கிட்டே குடுத்து எனக்கு என்ன ஆகப்போகுது?"*

*"அப்படியில்லேல்லே. ஏவாரிகதானே ஒமக்கு தரகு தாராக? தரகு வாங்கிக்கிட்டு பெத்த தாயைக் கூட அடகு வைச்சிட்டுப் போயிருவான், இந்தக் காலத்துலே. அம்புட்டு காலம் கெட்டுக்கிடக்கு. இப்பவும் நீரு... இப்புடி இருக் கீர்ன்னா... அது நீரு பெறவிச் சம்சாரிங்குறதுனாலே தான். காலக் கொடுமையிலே தரகுத் தொழில் செய்ஞ்சாலும்... ஒம்ம மனசு பூராவும் சம்சாரி மனசுதான்."*

"அது நெசந்தான். சரி... இப்ப பேசிக்கிட்டுருக்க நேரமில்லே. ஒங்களைப் போல இன்னும் சிலர்ட்டே 'தாக்கல்' சொல்லணும். நா வாரேன்ய்யா."

வில்லிலிருந்து விடுபட்ட அம்பாகப் பாய்ந்தார், வாயடி. நடையை எட்டிப் போட்டார். 'பொடு, பொடு' என்கிற நடை. பூமியதிராத நடை. மனசின் தவிப்பைச் சொல்கிற நடை.

இன்னும் ரெண்டு நாயக்கர்களிடம் சொல்லணும். தேவமார் தெருவில் நாலு வீடு.... நாடாக்கமார் வீடுகள் ஏழெட்டு...

அந்த அவசரத்தில் போய்க் கொண்டிருந்தவரை "நாடாரே" என்ற ஒரு சத்தம் பிரேக் போட்டது. கனிவான அழைப்புச் சத்தம்.

"என்னய்யா...?"

"ஓமக்காக நாலுபடி உளுந்து எடுத்து வைச்சிருக்கேன். வாங்கிட்டுப் போறீரா?"

"இதெல்லாம் என்னத்துக்கு?"

"என்ன அப்படிச் சொல்லிட்டீரு....? நீரு சம்சாரிகளுக்கு எம்புட்டு ஒத்தாசையாயிருக்கீரு? நம்பிக்கையான ஆளா இருக்கீரு. நாங்க எங்களாலே ஏண்டதைச் (இயன்றதை) செய்ய வேண்டாமா? அதானே ஞாயம்? சரி... வாங்கிட்டுப் போரும்."

"இப்ப... அர்ஜெண்டான ஜோலி மேலே போறேனே..."

"சரி. அப்பப் போரும். நா எம் மகன்கிட்டே ஒம்ம வீட்டுக்குக் குடுத்தனுப்பியிருதேன்."

'ம்' கொட்டிவிட்டு நடையைப் பிடித்தார். இவருக்கு இவரது காடுகள் நாலு ஏக்கர் கிடக்கிறது. கிணற்றுப் பாசனம்தான். ஒரு வெள்ளாமை கிடையாது. தரிசாகக்

கிடக்கிறது, பல வருஷமாக. ஆனாலும் வெள்ளாமை விளைச்சல் காண்கிற வீடுகளைப் போலத்தான்... இவர் வீடு நிரம்பி வழியும். மிளகாய் வற்றல், உளுந்து, எள், கம்பு, சோளம் என்று வீடு முழுக்கக் கிடக்கும். எல்லாம் இப்படி வந்த வரவுகள் தாம்.

தரகுத் தொழிலில் இவர் கடைபிடிக்கிற கொள்கையின் விளைச்சல். வாழ்ந்த வாழ்க்கையின் கிரீடம். மக்களின் நம்பிக்கையையும் அன்பையும் பெற்ற அவரது பண்புக்குக் கிடைத்த சன்மானம்... மரியாதை... பூவிரிப்பு...

ராமச்சந்திரத் தேவர் வீட்டுக்குப் போவதற்காக ஒரு கடவுக்குள் நுழைய முயன்ற போது—

"எங்க... அவசரமா?"

திரும்பினால் நாட்டாண்மை. வேட்டி கால் வரை இழுபட, நீள அகலமான துண்டு போர்த்தி வந்தார். நல்லையா நாடார். நல்ல வயசாளி. எழுபதுக்கு மேலே வயசு. இன்னும் உடம்பில் மினுமினுப்பு. இளமைச் சாயல்.

"ஒன்னுமில்லே மாமா.... ஒரு ஜோலியா போறேன்."

"பஞ்சாயத்து ஒன்னு வந்துருக்கு... நீரு வந்தாத்தான் தீரும்."

"நா என்னத்துக்கு? பெரியாளுக நீங்க. உங்கள்ட்டே தீராத வழக்கா?"

"நீருதானய்யா... ஞாயத்தை நூல் பிடிச்ச மாதிரி கரெக்டா கண்டுபிடிச்சிருதீரு? ஒம்மகிட்டே இருக்குற வாயடிப் பேச்சுலே வசங்காதவங்கூட மடங்கிருவான்லே? என்ன மாப்ளே?"

"எல்லாம்... நீங்க இருக்குற தைர்யம்தான். ஏங்கையிலே என்ன இருக்கு? அப்ப நா... வரட்டா மாமா?"

"ஏய் மாப்ளே, எங்க ஓடுதே? நீ பஞ்சாயத்துக்கு வந்தாத்தான் தீரும்."

நீங்க பாத்துக்கங்க மாமா. என் ஜோலியே தலைக்கு மேலே."

"அதெல்லாம் முடியாது. இது 'வெட்டு குத்து' பஞ்சாயத்து மாதிரி தெரியுது. வெவகாரமான வெவகாரம். நீ கட்டாயமா வரணும். நீயில்லேன்னா.... எனக்கு கையும் ஓடாது, காலும் ஓடாது."

"அப்பச் சரி... நீங்க போய் வழக்கை ஆரம்பிச்சு நடத்துங்க. நா வந்து சேர்ந்துக்கிடுதேன்."

"கட்டாயமா வரணும்."

"ஆட்டும் மாமா..."

"மாப்ளே, வராம விட்டுராதே. அப்புறம் எம் பாடு பெரும் பாடாப் போயிரும்."

"சரி மாமா... நீங்க சொல்லி நா வராம இருப்பேனா?"

கடவுக்குள் பாய்ந்துவிட்டார், வாயடி. நடையை துரிதப்படுத்தினார். மனசு, நினைவுக்குள். வந்திருக்கிற விவகாரம் பெரிசுதான். ஒரு பெண்ணின் வாழ்க்கைப் பிரச்சினை. மறுபக்கம் பார்த்தால்... ஒரு குடும்பத்தின் மானப் பிரச்சினை. 'விவகாரத்திற்கு' வந்தவர்கள் பஸ்ஸில் இவரோடு வந்தவர்கள்தான். பஸ்ஸிற்குள் அவர்களுக்குள் ளாக பேசிக்கொண்ட சர்ச்சைகளிலேயே அனல் பறந்தது.

"கேட்டுப் பாப்போம். ஞாயம் கெடைக்கலேன்னா... அருவாளைத் தூக்கிட வேண்டியதுதான். பனங்காயைச் சீவுற மாதிரி தலையை வெட்டிருவம். பெறகு... நடக்குறது நடக்கட்டும்."

—என்று வீராவேசமாகப் பேசிய அந்த நடு வயதுக்காரர்.

முழு வழக்கும் இவருக்குப் புரிந்துவிட்டது. தீர்வும் கூட தெளிவாக மனசில் தலைகாட்டியது.

ஆனாலும்... பஞ்சாயத்து முடிவைவிட... தனது அரிவாளின் மீதுதான் அவர்களுக்கு நம்பிக்கை அதிகம்.

இது எங்கு போய் முடியுமோ? எதில் போய்ச் சேருமோ?

நினைத்தால்... சற்று திகிலாகவும் இருக்கிறது.

## 13

'நரி வருது, நரி வருது' என்று ஆடுகளை எச்சரிக்கை பண்ணி முடித்து வீடு சேர மணி ரெண்டுக்கு மேலாயிற்று, தாழையாவுக்கு. பசி வயிற்றைக் கிள்ளியது. தைமாச வெயில் வேறு. மழைக்கோப்பான வெயில். சற்று காட்டம்.

சட்டையைக் கழற்றி மானாங்காணியாக வீசியெறிந்தார். வேக்காடும் நசநசப்பும் இலந்தை முள்ளாக இச்சிலாத்திப்படுத்தியது. வேர்வைக்காடு வேறு... சரம் சரமாக.

"அய்யா..."

"ம்..."

"எங்கய்யா போய்ட்டீக... சாப்புடாம?"

"முக்கியமான ஜோலி இருந்துச்சு."

"சோறு வைக்கட்டா?"

"ம்..."

முற்றத்தின் உப்பு மூலையில் வெளிப்பானைகள். சிமிண்டுத் தொட்டி நிறைய தண்ணீர். சுற்றிலும் ஈரப்

பிசுபிசுப்பு. தேனீயின் ரீங்காரம். மஞ்சக் கனகாம்பரச் செடியும், கேந்திப்பூஞ் செடியும் ஜில்லென்று மஞ்சள் 'பிள்ளைகளைப்' பெற்ற பெருமிதத்தில் ததும்பி நின்றன.

சிமிண்டுத் தொட்டிக்குப் பக்கத்தில் ஒரு பலகைக்கல். தோசைச் சட்டி மாதிரியான கருங்கல் பலகை. அதில் ஏறி நின்றுகொண்டு, நீரை அள்ளி அள்ளி உடம்பைக் கழுவினார். முகம், கழுத்து, அக்குள், நெஞ்சு, முதுகு, கை, கால் என்று உடம்பு முழுக்க நீர் விட்டுக் கழுவினார். கொடியில் சடசடத்துக் கிடந்த துண்டின் வெதுவெதுப்பில் முகம் புதைத்தார். 'ஜிவ்வ்'வென்று மனசுக்குள் பரவுகிற ஒரு சுகப்புல்லரிப்பு. அழுந்தத் துடைத்துக் கொண்டார். தேகம் லேசாயிற்று. புடைத்தெடுத்த தானியம் போலாயிற்று.

சாப்பாட்டில் வந்து உட்கார்ந்தார்.

"நீ... சாப்ட்டுட்டீயாம்மா?"

"ம். ஆச்சுய்யா."

"அம்மா?"

"ம்."

கட்டிலில் செம்பகம் புரள்கிற சத்தம். அவளின் ஜீவஹீனக்குரல். "டாக்டரைப் பாத்தீகளா?"

"ம்."

"என்ன சொன்னாரு?"

"இப்ப இதெல்லாம்... ஒரு நோயேயில்லியாம். கவனமா வைத்தியம் பண்ணுனா... நாலு மாசத்துலே எந்திச்சு நடமாடிடலாமாம். அவ்வளவு நல்ல ஊசி மருந்து கண்டு பிடிச்சிருக்காம். விஞ்ஞானம் அப்படி வளர்ந்துருக்காம்...."

"ம்."

“நாப்பத்தி நாலு ஊசி போடணுமாம். அப்புறம் டானிக், மாத்திரைக.”

“நாப்பத்தி நாலு ஊசியா?”

செம்பகத்தின் கிலியான அலறல்.

“அடியாத்தாடி... ஊசி போட்டே ஒடம்பு சல்லடை யாயிரும் போலிருக்கே... இந்த நரக வேதனையை யாரு தாங்குறது?”

“நீ தான்... நமக்காகத்தான் தாங்கணும்.”

“யாரு ஊசி போடுறது?”

“சல்லம்பட்டி வாத்தியார்கிட்டே சொல்லியிருக்கேன். நெதம் வந்து ஊசி போட்டுருவாரு.”

விரக்தியும் சலிப்புமான பெருமூச்சு, அவளிடமிருந்து.

“ஹூ... ம்... யாருக்கும் எந்தத் தீங்கும் நெனைச்சதுல்லே, நாம. வேருக்கு தண்ணிதான் ஊத்தியிருப்போம், வெந்நி ஊத்துனதுல்லே. ஆனா... நம்ம குடும்பத்துக்குத்தான் இம்புட்டுத் தும்பம். நோயும் நொடியும் வந்து பேயா வந்து நிக்கு. உசுரைப் புடுங்குது... என்ன கொடுமையோ... யாரு செய்ஞ்ச தீவினையோ...”

ஆழங்காண முடியாத சோகத்தில் அயற்சியில் சரிகிற செம்பக மனசு. முடிவில்லா மர்மப் பின்னலுக்குள் அவள் நினைவுகள்.

சாப்பிட்டு முடித்தார்.

“பொற்கொடி...”

“என்ன அய்யா?”

“அம்மாவுக்கு மாத்திரையும் டானிக்கும் குடுத்து ரட்டா?”

"நா குடுத்துருதேன்ய்யா. எப்புடி குடுக்கணும்?"

"ட்யூப் மாத்திரை குடு. டானிக் ஒரு மூடி. ரெண்டு மூடி வெந்நியிலே கலந்து குடு."

"ஆட்டும்ய்யா..."

ஈரத்தில் நனைந்து மடங்கியிருந்த மீசையை நீவி உருவி விட்டுக் கொண்டார். நுனிகளை மேல் நோக்கி திருக்கிவிட்டார். செம்பகம் படுத்திருந்த கட்டில் பக்கமாய் நெருங்கினார். ஒருக்கழித்து சுருண்டு கிடக்கிற செம்பகம், கசக்கிச் சுருட்டிப் போட்ட காகிதமாக.

இவரது உள்உலகம், இவள். உள்உலக பரிபூர்ண அழகின் காரணகர்த்தா. ஓங்குதாங்கான உயரத்தில்— மாலையும் கழுத்துமாக மணக்கோலத்தில்— அழகின் சிகரத்தில் சுடர்விட்ட 'அந்த'ச் செம்பகம். கனிந்த சிரிப்பும், குளிர்ந்த பார்வையுமாக எந்நேரமும் தென்பட்ட செம்ப கங்கள். பிள்ளைகள் பற்றிய பிரச்சினைகள், குடும்பம் சம்பந்தமான கவலைகள் எல்லாவற்றையும் தனது முந்தா னைக்குள் மூடி மறைத்துக் கொண்டு, கிரீடமில்லாத ராசாவாக இவரைத் தொழிலில் முழு சக்தியுடன் உலவவிட்ட செம்பகங்கள். இரவு பகல் என்று வித்தியாசம் பார்க்காமல் ஓயாமல் உழைத்த செம்பகம்.

இவரது ஆசை மனைவியாகவும், அன்புத் தோழி யாகவும், பாசத் தாயாகவும், அறிவுக் குருவாகவும் ஒருசேர விளங்கி உயிரைப் பின்னிய செம்பகம்.

நிறைய சம்பவங்கள். மனசின் ஆழம் அவரை அன்பால் தழுவி உழுது, பாசநீரைப் பொழிந்து பண்படுத்திய பெரியதும் சிறியதுமான நிகழ்ச்சிகள். அதற்குரிய ஈர உணர்வுகளோடு நெஞ்சில் நிழலாட.... கிழிந்த நாராகக் கிடக்கிற இன்றைய செம்பகம்.

வெட்டுப்பட்ட கிடாவாகத் துடிக்கிற இவரது மனசு. ஒரு மூச்சுமுட்டல். நினைவுத் திணறல். கண்ணிமைக்குள் முள்முள்ளான நீர்க் குத்தல்கள்.

இவள் வெறும் பொம்பளையில்லே. இன்னொருத்தன் வீட்டுப் பெண்ணல்ல. இவரின் ஆத்மா. ஆத்மாவை சங்கமித்து ஆக்ரமித்துக் கொண்ட ஆத்மா. இப்போது—

ஜீவசத்தை இழந்துவிட்டு.... எலும்புக்கூடாகக் கிடக்கிற இவரது உயிர். உயிரின் துடிப்பு.

அவருள் அலை அலையாக உணர்வலைகள். நினைவுச் சுழல்கள். வாழ்ந்த நாட்களின் உணர்ச்சிச் சுவடுகள் உஷ்ணத் தடங்கள்.

இமைகளில் ஈரச்சுமை நெரிக்க... மெல்லச் செருமினார்.

உயிரின் உரசல் ஒலியைக்கூட உணர்ந்துவிடக் கூடிய செம்பகம், அந்தச் செருமலில் விழித்துக் கொண்டாள்.

"என்ன..."

மனஉணர்வின் நெகிழ்வில் கம்மிய குரலில், "ஒன்னு மில்லே. சும்மா பாத்தேன்."

"பொற்கொடி என்னமும் தாக்கல் சொன்னாளா?"

"இல்லியே... என்ன?"

"எங்க நல்லையா சின்னையா ஒங்களை தேடிக்கிட்டு இங்க வந்து கேட்டாரு."

"யாரு... நாட்டாமை மாமாவா?"

"ஆமா..."

"நா பாத்துக்கிடுதேன்..."

நாட்டாமை மாமா சொன்ன ஞாபகம். "மாப்ளே.. கட்டாயமா வந்துரு."

துண்டை மட்டும் எடுத்து வெற்றுடம்பில் போட்டுக் கொண்டு வெளியேறினார். உள்ளே குப்பென்று நினைவுகள். மதியம் பஸ்ஸில் வரும்போது நடந்த உரையாடல்.

ஆற்றுப் பாலம் நின்று ஆட்களை இறக்கிவிட்டு பஸ் வலமாக திரும்பி உறுமியது. இன்னும் ரெண்டு ஸ்டாப் தான். டிக்கெட்டுகளையெல்லாம் பைக்குள் வைத்துவிட்டு, டிரைவர் சீட்டுக்குப் பக்கத்தில் உட்கார்ந்த கண்டக்டர், லக்கேஜ் டிக்கட் எடுக்காமல் தகராறு செய்த கடைக்காரர் பற்றிய புகரைப் பகிர்ந்து கொள்கிறார்.

பஸ்ஸுக்குள் ஏழெட்டு ஆட்கள் மட்டும்தான். அவர்களும் அயலூர்க்காரர்கள். ஏதோ வழக்கு போலும். ஊர் நெருங்க நெருங்க ரொம்பச் சூடேறுகிறார்கள்.

“ரெண்டுலே ஒன்னு பாக்காம வுடக்கூடாது. பேச்சு மாறுனதுக்கு ரெண்டாயிரம் அபராதம் வாங்கியே யாகணும்.”

“ஆமா... வுடக் கூடாது. பொண்ணு பாத்து, மாப் பிள்ளை பாத்து, ‘யாரு, என்ன’ங்கிற ரூட்டு விசாரிச்சு, துப்பு துலக்கி, பேசிமுடிச்சு ‘பூ’ வைச்சாச்சு. இப்பப் போய் பொண்ணு தரமாட்டேன்னு சொன்னா என்ன அருத்தம்? நம்மளை என்ன இளிச்சவாயங்கன்னு நெனைச்சுட் டாகளா?”

“அதானே? நாம பனையேறிகளாம்! அதை மொதல் லேயே பாக்கலியாக்கும்? நம்ம ரூட்டை துப்புதுலக்கி விசாரிக்கையிலே இது தட்டுப்படலியாக்கும்?”

“இவுக... பெரீய்ய ஏவாரி நாடாராம். ஏவாரி நாடார்ன்னா... பெரியா கொம்பா? ஆகாசத்துலேயிருந்து

குதிச்சவுகளா? நாம என்ன மண்ணுக்குள்ளே இருந்து வந்த சென்மங்களா?"

"ஏலேய்... அதைப் பேசாதே. யார் ஒசத்தி, யார் மட்டம்னு இப்பப் பேசக்கூடாது. வேண்டாத வம்பு தும்பு வந்து சேரும். 'பூ வைச்சு நிச்சயம் பண்ணியாச்சு. அதுக்கென்ன சொல்றீக?' இதை மட்டும்தான் நாம இப்பக் கேக்கணும்."

"அதான் கரெக்ட். ஒன்னு, கல்யாணம். இல்லேன்னா.... கூட்டத்தோட கால்லே வுழுந்து, செலவு தொகை போக ரெண்டாயிர ரூவாய் அபராதம் கட்டணும்."

"ஊர்க்காரங்க உள்ளூர்க்காரனை வுட்டுக் குடுப்பா களா? அவனுக்குச் சப்போட்டு பண்ணிப் பேசுனா? நாம சொல்றதுக்கு ஒப்பலேன்னா?"

"இருக்கவே இருக்கு... பனை சீவுற அருவா. நமக்கு மானமரியாதையைவிட வேறெது முக்கியம்? பனங்காயைச் சீவுற மாதிரி... நாலு தலைகளை உருட்டுவோம்."

"அதான்... ஞாயம். அவுக... பெரீய ஏவாரி நாடாக்க மாரு. கோர்ட், கேஸுன்னு அலைஞ்சு சாகட்டும்."

"ஆமா... நமக்குத் தெரிஞ்சது, இதுதான். ஒன்னு, ஞாயம். இல்லே... தலைக."

ஒவ்வொருத்தரும் ஆவேசமாகப் பேசிக் கொண்டனர். கையை நீட்டி ஆட்டி வன்மம் கூறிக்கொண்டனர். அவமதிக்கப்பட்ட ஆத்திரமும் குமுறலும் அவர்கள் குரல்களில். தன்மானத்தைக் குத்திச் சீண்டி விடப்பட்ட ரணமும், கொதிப்பும் முகங்களில்.

யாரோ என்பது போல கமுக்கமாக உட்கார்ந்திருந்த தாழையா, எல்லாவற்றையும் மனசால் பதிவு பண்ணிக் கொண்டார். அவருக்கு விவகாரத்தின் மூல முடிச்சு புரிந்து போயிற்று. 'இதுதான் விஷயமா' என்பது போல

தலையையாட்டிக் கொண்டார். செம்பட்டை பாய்ந்த முறுக்கு மீசைக்கு அடியில், பரிகாசமான குறுநகை பூத்தது.

சிங்கார நாடார் மகளுக்குப் போனமாசம் 'பூ' வைத்ததாகக் கேள்விப்பட்டிருந்தார். ஏழாயிரம்பண்ணை மாப்பிள்ளை என்று தகவல். தீப்பெட்டியாபீஸில் போர்மேன் வேலை, மாப்பிள்ளைப் பையனுக்கு. சொந்தமாக ஓர் ஓடு போட்ட வீடு இருப்பதாகவும் கேள்வி.

'நல்ல இடம்' என்ற நினைப்பு சிங்காரத்துக்கு. தனது சக்திக்கு இப்படியோர் நல்ல இடம் அமைவது, பெரிய அதிர்ஷ்டம். 'குருட்டாம் போக்கில் அடித்த யோகம் என்பது இதுதானோ' என்கிற கும்மாளம், அவனுக்கு.

யாருக்காவது இந்தச் செய்தி தெரிந்தால்... ஒருத்தன் இல்லாவிட்டால் இன்னொருத்தன், கூடி வருகிற காரியத்தை 'குசும்பு' பண்ணிக் கெடுத்துவிடுவானோ என்கிற உள் பதைப்பு. அரவமில்லாமல் 'பூ' வைத்து நிச்சயம் பண்ணிவிட்டார்கள். ஆறு பவுன் நகை. மூவா யிரம் ரொக்கம். இதுதான், பேச்சு.

இந்தப் பேச்சும், அவர்களுக்குள் மட்டும்தான். அடுத் தாளுக்குத் தெரியாது. 'பூவைப்பு'க்கு சாதிசனத்தைக் கூப்பிடவில்லை. ஊர்ப் பெரிசுகளுக்கும் ஒரு தாக்கல் கிடையாது. எல்லாம்... கமுக்கமாக நடத்தி முடித்தான், சிங்காரம்.

"திடுதிப்புன்னு வந்துட்டாக. மனசுக்குப் பிடிச்சுப் போச்சு. யாருகிட்டேயும் போய்ச் சொல்ல நேரமில்லே. சடபுடான்னு பேசி முடிச்சு, பூவைச்சாச்சு."

பூவைத்த சங்கதி தெரிந்து கேட்ட ஊரார்கள் எல்லாரிடமும் சிரித்து மழுப்பி இப்படிப் பேசிச் சமாளித்தான். ஆனால் உள்ளுக்குள்—

சிங்காரத்துக்கு ஊரையே ஜெயித்து முடித்துவிட்ட பெருமிதம். கோட்டையைப் பிடித்து கொடியைப் பறக்க விட்டுவிட்ட வெற்றிப் பூரிப்பு. மனிதன் தரையில் கால் பாவாமல்.... மகிழ்ச்சியின் தத்தளிப்போடு மிதந்தான்.

அந்தத் தத்தளிப்புதான், இப்படியொரு விவகாரமாக வந்து விடிந்திருக்கிறதாக்கும்? பூவைத்த பிறகு, 'பெண் இல்லை'யென்று எப்படிச் சொல்லலாம்? சொல்வதில் என்ன நியாயமிருக்கிறது?

பூ வைக்கிற விழாவுக்கு... வேன் வாடகை, பட்டு எடுத்த செலவு, பூ, பலகாரம், சாமான் செட்டுகள் வாங்கின செலவு என்று எப்படியும் மூவாயிரத்துக்கும் மேல் செலவாகி யிருக்குமே, மாப்பிள்ளை வீட்டாருக்கு.

செலவை விட்டுத் தள்ளு. மானம்? நிச்சயம் பண்ணி, ஊரெல்லாம் பெருமையடித்துக் கொண்ட பிறகு 'பெண் இல்லை' என்றால்... மாப்பிள்ளை பையனுக்கு எத்தனை பெரிய அவமானம்? கொடிய கேவலம்? தலைமுறை தத்துவத்துக்கும் (எல்லா தலைமுறைக்கும்) இந்த அவமான வேதனை ரணமாகத் துடிக்குமே...

பூ வைப்புக்குத்தான் என்ன அர்த்தம்? நிச்சயதாம் பூலத்துக்கு என்ன அர்த்தம்? பேசிய ஒப்பந்தத்தை காப்பாற்ற முடியாவிட்டால் இதற்கெல்லாம் அர்த்தமே யில்லையே...

மாறி மாறி பேச்சு மாறலாமா? அது என்ன மனுசத் தன்மை? ச்சே!

தாழையா மனசுக்குள் தன் போக்கில் சுழன்று சுழன்று வலை பின்னிக் கொண்டிருந்தன, நினைவுகள்.

ஊர் மடத்துக்கு வந்து சேர்ந்தார். மடம் பிடிக்காத கூட்டம். முண்டியடித்துக் கொண்டு அப்பிக்கிடக்கிற ஜனக்காடு. சளசளப்பான ஒரே சத்தக்காடு. ஆள் ஆளுக்கு

அபிப்பிராயங்கள். ஆயிரத்தெட்டு நியாயங்கள். குழுக் குழுவான குசுகுசுப்புகள்.

மடம் முழுக்க மனிதச் சுவாச வெக்கை. 'காச்சு, மூச்'சென்று காரசாரமான சண்டைக் காடு. அலை அலையாக வந்து அமுக்குகிற சத்தக்காடு தாங்காமல் தத்தளிக்கிற பஞ்சாயத்தார்கள்.

கூட்டத்தைப் பிய்த்துக்கொண்டு உள்ளே நுழைந்தார். கூட்டமாய் உட்கார்ந்திருக்கிற பஞ்சாயத்துப் பிரமுகர்கள் நடுவில் நாட்டாமை. இந்தப் பக்கம் சிங்காரம். கால் வரை விட்ட வேட்டி, முழங்கையில் மேல் துண்டு.

அந்தப் பக்கம் ஏழாயிரம் பண்ணைக்காரர்கள். கலக நிலவரம்.

## 14

விவகாரம் தீராத நிலை. தீராது என்ற கட்டத்திற்கு வந்துவிட்ட நிலவரம். நாட்டாண்மை கத்திக் கத்தி அசந்து போய்விட்டார். தொண்டை புண்ணானதுதான் மிச்சம்.

மேட்டுக்கும் பள்ளத்துக்குமாக இழுபடுகிற வழக்கு. முறுக்கேறிப் போன மனநிலை. பரஸ்பரம் வன்மம் கூறிக் கொண்ட கட்சிக்காரர்கள். முகங்கள் நிறம் மாறி குரூரமாகியிருந்தன. வேர்வையும் கோபமுமாய் கறுத்து வழிந்தன.

கொதிநிலை. 'வந்து பாரு' 'செய்யுறதைச் செய்' 'கையை வெட்டுவம்' 'காலை நறுக்குவம்' என்கிற வீறாப்பான கொக்கரிப்புகள். உணர்ச்சி வெக்கை. கலவர நிலவரம்.

என்ன ஆகுமோ, எந்த மாதிரியான கொலை பாதகம் வந்துவிடுமோ என்ற பதைப்பும் பதற்றமுமாய் ஜனத்தின் திகிலான பேச்சுச் சத்தம்.

தாழையா நாட்டாமை பக்கத்தில் போய் உட்கார்ந் தார், “என்ன முடிஞ்சுதா?” என்ற கேள்வியோடு.

“ஒரு இழவும் முடியலே. ஒருத்தருக்கும் ஒரு பொட்டு அறிவுகூடக் கெடையாது. சொல்ற ஞாயத்தை யாரும் கேக்குற மாதிரி தெரியலே.”

சலித்துப் புளித்துப்போய் கிடந்த நாட்டாமை, ரொம்ப புண்பட்ட மனசின் ஆயாசத்தோடும் அயற்சியோடும் இவரைப் பார்த்தார்.

தாழையா நிமிர்ந்து பார்த்தார். அவமதிக்கப்பட்ட கொதிப்பின் மனக் கொந்தளிப்போடு சவால் விட்டுப் பேசிக்கொண்டிருந்த ஏழாயிரம் பண்ணைக்காரர்களை அழுத்தமாகப் பார்த்தார். பார்வையில் ஆழமும், அதட்டலும்.

சும்மாவே வெங்கலக்குரல் தாழையாவுக்கு. அதையும் உயர்ந்த ஸ்தாயியில் ஏற்றி அதட்டியபோது, மடமே எதிரொலித்து அரண்டது.

“யோவ்... என்னய்யா இது? பஞ்சாயத்தா... கலகமா? ‘வெட்டுவம், குத்துவோம்’னு பேசுறதுக்காய்யா... பஞ்சாயத்து? ஊர் விட்டு ஊர் வந்து வெட்டிருவீகளோ? இதென்ன ஊரா, காடா? நாங்க என்ன மயித்துக்கு மீசை வைச்சுக்கிட்டுத் திரியுதோம்? சும்மா அழகுக்கா? வார்த்தையை அளந்து பேசணுமய்யா. கொட்டுன வார்த்தையை அள்ள முடியுமா? ‘வளா வளா’ன்னு என்ன பேச்சு? மொதல்லே... பேச்சை நிறுத்துங்க. சத்தத்தை நிப்பாட்டுங்க.”

'கண், கண்'ணென்று வெங்கலநாதமாய் அதிர்ந்து ஓங்கிய இவர் சத்தத்தில் மொத்தக் கூட்டமே திகைத்து வாய் மூட... அந்தப் பேச்சிலிருந்த வீரமும், நியாய அழுத்தமும் ஏழாயிரம்பண்ணைக்காரர்களை யோசிக்க வைத்தது.

மடமே 'கப், சிப்'பென்றாகியது. எள் விழுந்தால்கூட சத்தம் கேட்கும். அத்தனை நிசப்தம். அதே ஓங்கிய குரலில் அதட்டலாக சிங்காரத்தைக் கூப்பிட்டார்.

"ஏய்... சிங்காரம்."

"என்ன மச்சான்?"

"பொண்ணு தரமாட்டேன்னு இப்பச் சொல்றே? எதனாலே? இவுக பனையேறிங்குறதுனாலேயா? வேற காரணம் உண்டா?"

நீளமான விளக்கத்தை விஸ்தாரமாக சொல்வதற்கான முஸ்தீபுகளோடு வாயைத் திறக்கப்போன சிங்காரத்தை கண்டிப்போடு கையால் அமர்த்திவிட்டு, மிரட்டல் தொனியில் சத்தத்தை உயர்த்தினார், தாழையா.

"ஏய் இங்க பாரு, 'வளவளா, வைக்கப்படப்பு'ன்னு சொல்லக் கூடாது. கேட்டதுக்கு மட்டும் 'கட், கட்'டுன்னு பதில் சொல்லணும். வேற காரணம் உண்டா?"

"இல்லே."

மொத்தக் கூட்டமும் ஓர் எதிர் பார்ப்பும் நம்பிக் கையுமாய் மௌனத்தில் புதைந்து கிடந்தது. புதிரான ஆர்வம். விவகாரம் தீர்ந்துபோகும் என்ற தெளிவில், வழங்குகிற ஒத்துழைப்பாக அந்த மௌனம்.

"நகை நட்டு பேசுனதுலே மாத்தம் உண்டா?"

"இல்லே."

"பேசுனதுக்கு மேக்கொண்டு அவுக கேக்காகளா?"

“இல்லே.”

“பேசுன பேச்சுப்படி செய்ய முடியாமப் போய்... கொறைச்சுச் செய்யணும்னு ஒனக்கு நோக்கம் உண்டா?”

“என்ன மச்சான், இப்புடிக் கேக்கீக?”

“மச்சான், நொச்சான்ங்குறதெல்லாம் அப்புறம். இப்ப நீ கேட்டதுக்கு மட்டும் பதிலைச் சொல்லு.”

தாழையாவின் அதார்ட்டியமான அதட்டலில், ஏழாயிரம்பண்ணைக்காரர்களுக்கு நம்பிக்கை வெளிச்ச அரும்புகள்...

சிங்காரம் அரண்டு போய், “இல்லே” என்று உயிரில்லாமல் முணங்கினான்.

“மாப்பிள்ளைப் பையனைப் பத்தி தப்பான தகவல் ஏதாச்சும் இப்பக் கெடைச்சிருக்கா?”

“அப்படீன்னா...?”

“குடி, சூது, அப்படி இப்படின்னு ஏதாச்சும் தகவல் உண்டா?”

“இல்லே.”

“அப்ப... அவுக பனையேறி நாடார்ங்கிற தகவல் இப்பத் தெரிஞ்சு, அந்த ஒரே காரணத்துக்காக மட்டும்தான் பொண்ணு இல்லேன்னு சொல்றே. இல்லே?”

“ஆமா.”

“நீ.... சாணானா, இல்லியா?”

நம்மைக் குற்றவாளி மாதிரி நிறுத்தி வைத்து, வக்கீல் மாதிரி கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டு, தாட்சண்யம் இல்லாமல் நடத்துகிறாரே என்று விசனப்பட்டுக் கொண்டிருந்த சிங்காரம், இந்தக் கேள்வியில் ரொம்ப அதிர்ந்து

போய்விட்டான். வெலவெலத்துப் போய் விழித்தான், புரியாமல் திகைத்தான்.

"என்ன சொல்லுதீரு மச்சான்?"

"நீ .... நா... இந்த நாட்டாமை, பஞ்சாயத்தாரு, இந்தா... கூடியிருக்குற நம்ம ஜனங்க எல்லாரும் யாரு? சாணான்ங்க தானே?"

"ஆமா."

"நீயும் சாணான்தானே?"

"ம்."

"சாணான்னா என்ன அர்த்தம்.... தெரியுமா?"

"நம்ம சாதிப் பேரு."

"அது. தெரியுது. அதோட அர்த்தம் என்னன்னு தெரியுமா?"

"தெரியலே."

உறைந்து போய் 'கப், சிப்'பாகியிருந்த கூட்டம், மெள்ளச் சலனப்பட்டது. சலசலத்தது. இந்தக் கேள்விக்கு நிஜமாகவே ஒருத்தருக்கும் பதில் தெரியவில்லை. நாட்டாமை நல்லையாவுக்கும் கூடத் தெரியவில்லை.

தர்மசங்கடமாய் நெளிந்தார். சம்மணக்கால் போட்டிருந்த காலை நீட்ட, கையைக் காலை அசைத்து செருமிக் கொண்டார். 'தாழையாவின் கேள்வி அத்துமீறலான கேள்வியோ' என்ற யோசனையும் புழுக்கமும் கூட்டத்துக்கு. நல்லையாவும் நினைத்தார். 'வாயடிக்கிற வேகத்துலேயும் பெருமையிலேயும் எல்லை மீறிப் போய்ட்டாரு, வாயடி மாப்ளே.'

ஆனாலும் பொறுமையிழந்து போனதைக் காட்டிக் கொள்ளவில்லை. பதற்றமும் பிரமிப்புமாய் அவர் வாய் அசைவையே கவனித்தார், நாட்டாமை.

அங்கே இங்கே கிசுகிசுப்பு. மெல்லச் சலசலப்பு.

"ஏய்... அங்க யாரு... 'கொச கொச'ன்னு பேசிக்கிட்டு?" தாழையா கூட்டத்தைப் பார்த்துப் போட்ட அதட்டலில் பஞ்சாயத்தார் உட்பட மொத்தமாக 'கப், சிப்.'

தாழையா செருமிக் கொண்டார். மறுபடியும் அதே கணீரென்கிற வெங்கலநாதம். உயர்ந்து நிதானித்த குரல்:

"சாணான்னா. 'சாண் நார்'னு அர்த்தம். பனையேறு றப்ப கரண்டைக்கால்கள்லே வட்டமாய் போட்டுக்குற சாண்நார்னு அர்த்தம். அதுதான் நம்ம பரம்பரைத் தொழில் சின்னம். சம்சாரிக்கு ஏர்க்கலப்பை மாதிரி, ஏவாரிக்கு தராசு மாதிரி, நமக்கு சாண்நார். அதை நம்புன பொழைப்பு, நம்ம பொழைப்பு, புரியுதா?"

"ம்..."

"அப்ப என்ன அர்த்தம்? நீ, நா, கூடியிருக்கிற நம்ம சாதி சனம் பூராவும் ஆதியிலே பனையேறிகதா. சாண் நாரை நம்பி வவுத்தையும் தலைமுறையையும் வளர்த் தவுகதான். கருப்பட்டி விக்கப் போனவுக ஏவாரியா யிட்டாக. அப்ப நீயும் நானும் ஏழு தலைமுறைக்கு முன் னாலே பனையேறுவதை நிறுத்திட்டு, சம்சாரித்தனம் செய்ஞ்சோம். இந்த ஏழாயிரம்பண்ணையாளுக போன தலைமுறையிலே பனையேறுவதை நிறுத்திட்டு தீப்பெட்டி யாபீஸ் வேலை பாக்குறாக..."

சிங்காரம் முகத்தில் புதிய வெலவெலப்பு. பறவை யாடுகிற கண்கள். பொறிக்குள் மாட்டிக் கொண்ட எலியின் தவிப்பு. தப்பிப்போன செம்மறியாட்டை ஓடிச் சுற்றி வளைத்து கிடையில் சேர்த்துவிட்ட ஆட்டுக்காரனின் வெற்றித் தொனி, தாழையாவின் முகத்தில்.

"இப்பச் சொல்லு. பனையேறினா மட்டம்னு சொல்றது, மல்லாக்கப் படுத்துக்கிட்டு எச்சி துப்புறமாதிரி

இல்லே? ஒரே சாதிக்குள்ளேயே ஒசத்தி தாழ்த்தின்னு கத்தி போட்டுப் பௌக்குறது, புத்திசாலித்தனமான காரியமா?"

மடத்துக்கே இப்பத்தான் மூச்சு வந்த மாதிரியிருந்தது. வரப்போகிற தீர்வை முன்னுணர்ந்த மகிழ்ச்சியோடு ஆசுவாசமாய் பேச்சுகளைப் பரிமாறிக் கொண்டது.

தாழையா தீவிரத்தைக் குறைக்காமல், அதே ஸ்தாயியில் பேசினார்;

"சாதி, மதம், எனம் எல்லாத்தையும்விட மனுசங்க தான் முக்கியம். மனுசத்தன்மையான மனுசங்க சேர்ந்து கலந்து மானத்தோட வாழ்றதுதா முக்கியம். காட்லே வெடிக்குற பருத்தி.... சட்டையா மாறணும்னாலேயே... எல்லாச் சாதி மனுசங்க ஒழைப்பும் தேவைப்படுது. மனுசங்களை சாதி சாதியா பிரிச்சுப் பேதப்படுத்திட்டா... சட்டை துணியில்லாம மானங்கெட்டுப் போய்த்தான் திரியணும், நாம. மனுசங்களை சாதியா பிரிக்குறதே கூறு கெட்ட வேலை. நீ என்னடான்னா... ஒரே சாதிக்குள்ளே மேலே— கீழேன்னு பிரிச்சுப் பேசி காரியத்தையே கெடுக்குறீயே... என்ன ஞாயம்?"

ஓங்கி ஒலித்த வாயடியின் சத்த பலத்தில்— சத்திய பலத்தில்— நியாயம் பிழைத்தது. ஊர் முழுக்க அவரை 'ஜே,ஜே' என்று வாய் நிறையக் கொண்டாடியது. "வாயடி வாய் வைச்ச வெவகாரம் ஜெயந்தான்" என்று பாராட்டியது.

"வாயடின்னா... வாயடிதான். இவர் வாய்ச் சாமர்த்தியத்துலே தீராத வெவகாரம் ஜெகத்துலேயே கெடையாது."

நாட்டாமை நல்லையா நாடார் வாயடியை ஒரு பிரமிப்புடன் பார்த்தார். மனசார— வாய் குளிரப் பாராட்டினார்.

"ஏய்... மாப்ளே, ஆயிரந்தான் சொல்லு... ஒன்னை ஜெயிக்க சுத்துபட்டி பத்து ஊர்லேயும் ஆளு கிடையாது. உன் மனசு சுத்தம். வாயடி பலம் வேற. நீ பேசி தீராத பஞ்சாயத்து, சுப்ரீம் கோர்ட் போனாலும் தீராது."

ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். சந்தோஷப் பெருமிதத்தில் ததும்பினாலும், தன்னடக்கமாய் சிரித்தார் தாழையா. "எங் கையிலே என்ன இருக்கு? எல்லாம் நீங்க குடுக்குற தைர்யந்தான்."

சிங்காரம் அவர் கையைப் பிடித்தான்.

"அப்ப மச்சான்... நா கல்யாண காரியத்தைப் பாக்கட்டா....?"

"செய் மாப்ளே, நல்லாச் செய். இதுக ஜேஜேன்னு பேரும் புகழுமா வாழும் மாப்ளே..."

ஏழாயிரம்பண்ணைக்காரரில் ஒரு பெரியவர் தாழையா கையைப் பற்றினார். உணர்ச்சி தழும்ப ஈர நெகிழ்வோடு அழுத்தினார்.

"நீரு... ரொம்பப் பெரீய மனசுக்காரரு. மலை போல மறிச்சு நின்ன வெவகாரத்தை பன்னீரா மாத்திட்டீரு... நீரு இந்த வெவகாரத்தை தீர்த்துவைச்சதுகூட பெருசா படலை எனக்கு."

"ம்."

"சாணாருக்கு ஒரு வெளக்கம் குடுத்தீரே... அதானய்யா வைரம் மாதிரி, எங்க மனசுலே வெளிச்சமா நிக்குது. பனையேறின்னு எங்களை எளப்பமா பேசறப்ப, பதில் சொல்லத் தெரியாம... கோபத்துலே 'திண்டுக்கு முண்டா' பேசுவோம். கரட்டுக்காட்டுக்கு மொரட்டு மம்பட்டியா பேசுவோம். நீரு சொல்லித்தான் எங்களுக்கு முழு வெவரமே தெரியுது."

"அப்படியா! அதான்... அதுக்கு நெசமான வெளக்கம்..."

அப்போது—

மடத்துக்கு ஓட்டமாய் ஓடிவந்தான் ஒருவன். ஓடி வந்த வரத்தில் மூச்சிரைத்தது. மொத்தக் கூட்டமே திக்கென்று நெஞ்சு பதைத்தது. அவன் ஓடிவந்த வேகத்தில் அபசகுனம் தெரிந்தது.

"சிங்கார நாடாரு மகா... மருந்தைக் குடிச்சுட்டா..."

மொத்தக் கூட்டமும் 'மொலோ'ரென்று கலைந்தது.

நாட்டாமை பதறிப்போனார். "எப்ப?"

"இப்பத்தான். இன்னிக்கு பூராவும் முகம் வாடிப் போயிருந்தாளாம். பூச்சி மருந்தை எடுத்துக் குடிச்சாளாம். குடிக்கும்போது பாத்துட்டாக. தட்டிவிட்டுட்டாக. பாதி மருந்தை குடிச்சிட்டாளாம். வாழைத்தண்டுச் சாறை குடுக்காக...."

"அதெல்லாம் சரிப்படாது. டக்கரை எடுத்துட்டுப் போங்க. தூக்கிப் போட்டுக்கிட்டு ஆஸ்பத்திரி கொண்டு போங்க. சீக்கிரம் சீக்கிரம்."

தாழையா ஆட்களை விரட்டினார். மடம் 'வெறீச்' சென்றிருந்தது.

ஓர் இளம் பெண்ணின் தற்கொலை முயற்சியில் ஊரே திடுக்கிட்டுவிட்டது. 'மரணம் நிகழ்ந்துவிடுமோ' என்ற பயத்திலும், அதிர்விலும் ஜனங்கள்.

டக்கர் புறப்பட்ட சத்தம். பெண்களின் அனுதாபப் புலம்பல்கள். அதிர்வு நிறைந்த அங்கலாய்ப்புகள்.

இப்போது மடத்தில்—

நாட்டாமையும், தாழையாவும், ஏழாயிரம் பண்ணைக் காரர்களும் மட்டும்தான். மாப்பிள்ளைப் பையன்

முகமெல்லாம் இருண்டு போயிருந்தான். கண் கலங்கி யிருந்தது. உடலில் மெல்லிய நடுக்கம்.

தாழையா தைர்யமாக இருந்தார், நிஜமாகவே. அவருக்குள் ஒருவிதமான நம்பிக்கை. ஆறுதல் சொன்னார்.

"தம்பி, பயப்படாதே. புள்ளைக்கு ஒன்னும் ஆகாது. ஆஸ்பத்திரி கொண்டு போய்ட்டாக. உசுருக்கு மோசமில்லே. உங்க கல்யாணம் குறிச்ச தேதியிலே நடந்தே தீரும்."

"அப்படியா?"

"ஆமா... பொண்ணுக்கு ஒன்னை ரொம்பப் புடிச்சுப் போச்சு. கல்யாணம் நடக்குற சந்தோஷத்துலே இருந் துருப்பா. இந்தப் பஞ்சாயத்து, வெவகாரம்னு வந்தவுடனே... கல்யாணம் நின்னுபோகுமோ...ங்குற பயத்துலேதான் மருந்தைக் குடிச்சிருக்கா."

"ம்."

"ஒனக்கும் அவா மேலே ரொம்பப் பிரியம். அதான் கண் கலங்குதே. இந்த அன்பும் ஒத்துமையும்தான் உங்களை காலம் காலமா சீரும் சிறப்புமா வாழ வைக்கப் போகுது."

அவர் சொன்னது பொய்யில்லை.

அவள் உடல் ஒரு வாரத்தில் குணமாயிற்று, ஐயாயிர ரூபாய் செலவில்.

கல்யாணம் கோலாகலமாய் நடந்தது. தாழையாவின் வாய்ச் சாமர்த்தியமும், அறிவுத் திறமையும், பஞ்சாயத்துப் பேசுகிற நேர்த்தியும் ஏழாயிரம்பண்ணை வட்டார மெல்லாம் புகழாகப் பரவியது.

கல்யாணத்துக்கு வந்திருந்த தெற்கத்தி நாடார் களெல்லாம் வந்து வந்து தாழையா கையைப் பிடித்துப் பாராட்டினர்.

அவர்களுக்குத் தெரியுமா? இதே பஞ்சாயத்தில் தாழையாவும் குற்றவாளியாக நிற்கப் போகிறார் என்பதுவும், கொடிய தண்டனைக்கு ஆளாகப் போகிறார் என்கிற அவலமும் காலத்தால் நிகழ்த்தப்படப் போகிறது என்பதைக் கண்டார்களா... அவர்கள்?

## 15

அகலக் கேரியலில் குறுக்காக ஒரு பலகை, போல்ட் போட்டு முறுக்கி, அதன்மேல் வெற்றுச் சாக்குகளை முறையாக மடித்து, நூல் கயிற்றால் கட்டியிருந்தான், கார்மேகம். பஞ்சுப் பிசுக்குகள் ஒட்டியிருக்கிற சாக்குகள். கேரியலில் சாக்குகள் கட்டியிருப்பதே ஓர் அழகு. லட்சணம். பிசிறில்லாத ஒழுங்கின் கச்சிதம்.

சைக்கிளின் முக்கோணத்திற்குள் அதன் வடிவத்தி லேயே தைக்கப்பட்டிருக்கிற சாக்குப் பை. அதற்குள் கைத்தராசு. ஹாண்டில் பாரில் சுழற்றிப் போட்டிருக்கிற பையில் படிக்கற்கள்.

கார்மேகம் கைலி, பனியனுக்கு மேல் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டான். எல்லாவற்றிலும் ஒரு துப்புரவு. சுத்தம். கண்ணாடியைப் பார்த்து தலை சீவிக்கொண்டான். எண்ணெய் வழிந்த முகத்தை துண்டால் அழுந்தத் துடைத்துக் கொண்டான். முகப் பவுடரில் தொட்டு நெற்றியில் திருநீறாக அணிந்தான். 'ம்... எல்லாம் ரைட்' என்கிற திருப்தி உணர்வு.

"அடேய்... நா வேலைக்குப் போவணும்பா..."

அம்மா தயாராக இருந்தாள், "நீ போம்மா..."

“நீ எப்ப ஏவாரத்துக்குப் போற?”

“இந்தா... கௌம்பிட்டேம்மா. நீ போ. நான் வீட்டுச் சாவியை கூரை வல்லடையிலே (எரவாரம்) வைச்சிருதேன்.”

“சரிப்பா. போய்ட்டு பத்திரமா வா.”

“ம்.”

அம்மா போய்விட்டாள். ஒரு முழ டர்க்கித்துண்டு எடுத்து சட்டைக் காலருக்குள் திணித்துக் கொண்டான். உள் வீட்டுக்குள் டிரங்க் பெட்டியைத் திறந்து ரூபாயை எடுத்தான். வீட்டைப் பூட்டினான்.

முற்றத்தில் சைக்கிள் இருந்தது. காலை வெயிலில் சைக்கிளின் பச்சைசீட் பளீரிட்டது. சைக்கிளை எடுக்கும் முன்பு, சகுனம் பார்க்கிற எண்ணத்தில் நிமிர்ந்தான். ஓர் இளம்பெண் இடுப்பில் நிறைகுடத்துடன் வந்தாள். அவனுக்குள் மகிழ்ச்சி.

அந்த இளம் பெண்ணை சற்று கூர்ந்து பார்த்தான். லேசுமாசாக நனைந்த மாராப்பு. அவனுக்குள் வாலிபச் சில்மிஷமான நினைப்பு. விசிலடிக்கிற மனசு. மோகச் சலம்பல்.

அலையும் மனசை இழுத்துப் பிடிக்கிற காரியார்த்தம்.

சைக்கிளை எடுத்துவிட்டான்.

தெருவில் சைக்கிள் விரைந்தது. பிரீவீலின் இரைச்சல் அவனுக்குப் பெருமிதமாக இருந்தது. ‘இன்றைக்குப் போகிற நேரம் நல்லாயிருக்கும். பருத்தி ஏவாரம் நல்லாச் சாயும். நிறைய கிடைக்கும். லாபமும்தான்.’

அவனுக்குள் விரிகிற சிறகுகளோடு கனவுகள்.

லாரி லாரியாக லோடு ஏற்றியனுப்புகிற வியாபாரி யாக வளரணும். மஞ்சள் பையில் ரூபாய்க் கட்டுகளோடு பருத்தி மருகைகளில் உட்கார்ந்து, சம்சாரிகளிடம் பட்டு வாடா பண்ணணும். ஊரே பார்த்து பிரமிக்கிற பணக்கார னாகணும். ஒரு பெரீய காரை வீடு கட்டணும். பெரிய பெரிய பணக்காரங்க எல்லாம் தாம்பாலத்துலே பொண்ணை வைச்சுக் கெஞ்சணும்...

ரெக்கை ஒடிந்து விழுகிற கனவுப் பறவை.

பூச்சி மருந்தைக் குடித்துவிட்டு நுரை கக்கச் செத்துக் கிடந்த கனியம்மாள், செத்துக் கிடந்த அலங்கோலம். கடைசி கணங்களின் திமிறல்களில் உயிர்த் துடிப்பான அலங்கோலம். தெறித்துவிடுவதைப் போல இருந்த கண் களில், வாழ்வின் தாகம் உறைந்திருந்த பயங்கரம்.

ஏன் செத்தாள்? எதற்காக மாய்த்துக் கொண்டாள்? என்ன காரணம்? என்ன காரணம்? ஊரே மர்மத்தில் திகைத்தது. கனியம்மாவின் அம்மாவுக்கும் தெரியவில்லை.

“அடிப்பாதகத்தி... தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டுட்டீயே... என்ன கொடுமைக்கு இப்படிச் செய்ஞ்சே? என்னத்துக்கடீ... மாய்ச்சுக்கிட்டே?” என்று அவள் தலையில் அடித்துக்கொண்டு அழுத அழுகை. அதன் ஓங்காரச் சத்தம். ஓயாச் சோகம்.

ஒரு நிமிசத்தில் சாம்பலாகிப் போனாள், கனியம்மாள். அவள் வயிற்றில் மூன்று மாசச் சீவன் இருந்த ரகசியம், எரித்த நெருப்புக்கு மட்டுமே தெரியும்.

நெருப்புக்குத் தெரிந்த ரகசியம் கார்மேகத்திற்கும் தெரியும்.

கார்மேகம் வியாபாரம் முடிந்து வீடு வர ஏழு மணிக்கும் மேலாகிவிடும். அப்புறம்தான் ஓடைக்குப்

போவான். இருட்டுக்குப் பயப்படமாட்டான். எந்தக் கிணற்றுக்குள்ளும் இறங்கிக் குளிப்பான், பிசாசாக.

தாயும் மகளும் கூலிக்காரிகளாக வாழ்ந்தவர்கள். கனியம்மாவும், அம்மாவும். குடிசை தவிர வேறு சொத்து இல்லை. மூக்குத்தி தவிர வேறு பொட்டுத் தங்கம் கிடையாது. கல்யாணத்துக்கு வழியேயில்லை என்கிற கசப்பான—பயங்கர—நிஜம். ஆகாய அந்தரத்தில் அற்றலைகிற கொடித் துளிராக கனியம்மா. பற்றிப் படர ஒரு பற்றுக்கோடு கிட்டாதா என்று ஏங்கித் தவித்து காற்றில் அலைகிற கொடி.

வறுமையிலிருந்து மேடேறி வருகிற கார்மேகம். இவன் 'தலையெழுத்து' வியாபாரம் செய்யத் துவங்கி, கையில் சில்லறை புழங்குகிற குடும்பமாக, கார்மேகக் குடும்பம். வளர்கிற ஆர்வப் பாய்ச்சலில் உழைக்கிற கார்மேகம்.

நம்பிக்கையுடன் தொடர்ந்த சந்திப்புகள். ஊரின் விளிம்புப் புஞ்சைகளுக்குள் நடந்த குசுகுசுப் பேச்சுகள். கிளுகிளுப்பான உரசல்கள். இளமையின் ஆர்ப்பரிப்பு. தேகத் தாகம். கணக்குகளை மறந்த களியாட்டம்.

தவறிப்போன மாதவிலக்கை உணரவே இவளுக்கு ரெண்டு மாசமாயிற்று. "என்ன செய்ய?" என்று கண் கலங்கினாள்.

"நா என்ன செய்ய முடியும்" என்று கை விரித்துவிட்ட கார்மேகம். அவள் ரெண்டு மூணு நாளாக மருகி மருகிக் கெஞ்சினாள்.

இவன் ஒரேயடியாக அடித்துச் சொல்லிவிட்டான். "கல்யாணத்தைப் பத்தி இப்ப நெனைக்கவே முடியாது. பெரீய்ய ஏவாரியா ஆனப் பெறகுதா அதை நா நெனைக்க முடியும்."

“அப்ப ஏங்கதி?”

“அதுக்கு நா என்ன செய்ய முடியும்?”

கெஞ்சலில் பலனில்லை. கண்ணீருக்குக் கரைகிறவ னில்லை கார்மேகம். வெளியே தெரிந்தால் கேவலம் இவளுக்குத்தான். அவன் கேவலத்துக்கு அஞ்சுகிறவனல்ல. லாபத்தில் மட்டுமே குறியாக இருக்கிற காரியக்காரன். சுய முன்னேற்றத்தில் மட்டுமே கண்ணாக இருக்கிற கல் நெஞ்சுக்காரன். காசுதான் வாழ்க்கை என்ற கணக்கில் இறுகிப் போனவன்.

கனியம்மாவுக்கு வேறு வழி தெரியவில்லை, உயிரை மாய்த்துக் கொள்வதைத் தவிர.

கார்மேகத்தின் மனசுக்குள் கிலியான நினைவுகள். அவள் திரேக ஸ்பரிசம். தொடும்போது குளிர்ச்சியாகவும், விலகும்போது உஷ்ணமாகவும் அவள் திரேகம். கனிந்த உஷ்ணம். குழைந்த கொதிப்பு. நெகிழ்ந்த தகிப்பு. பரவ சத்தில் நனைந்து சுடுகிற திரேகக் குழைவு.

அவள் செத்துக் கிடந்த பயங்கரம்.

அவனுள் மின்னலாய்ப் பாய்கிற பயக்குளிர்ச்சி. சைக்கிள் கனமாகிப் போன உணர்வு. கேரியலில் கனி யம்மா உட்கார்ந்திருப்பது போன்ற பிரமை. அவளது கிசு கிசுப்பான சிரிப்புச் சத்தம், காதோரத்தில் உரசுகிற அசுரத் திகில்.

திக்கென்கிற பயம். திரும்பிப் பார்த்தான். கேரியலில் சாக்கு மடிப்பு மட்டுமே.

“இந்தா பாருங்க... இது ஒங்களுக்கே நல்லதுல்லே... நா மானஸ்தி. மானத்தை உதுத்துட்டு, உசுர் வைச்சு இருக்க மாட்டேன். பாத்துக்கங்க.”

கண்ணீரில் உடைந்து கரைந்த கனியம்மாவின் குரல். இவனுக்குள் முள்முள்ளாகக் குத்துகிற வலி. பாவச் சுமையின் அழுத்தம்.

எல்லாவற்றையும் கூட்டிச் சேர்த்து பெருமூச்சாக விட்டான். சீட்டை விட்டு எழுந்து நின்று மிதித்தான். சாட்டை வீசிய காளைமாடாக புதுவேகமெடுத்த சைக்கிள். அதன் இரைச்சல். தராசுத் தட்டுகளும் சங்கிலிகளும் உரசிக் கொள்கிற சத்தம்.

தொம்பக்குளம் போய் இறங்கினான். தெருத்தெரு வாகச் சுற்றிக் கத்தினான். "பருத்தி இருக்கா. பருத்தீ."

தொம்பக்குளம் ஒருநாள் விட்டு ஒருநாள் வருவான். எல்லோரும் நல்ல பழக்கம். சில்லறை வியாபாரியாக இருந்தாலும் துட்டு விஷயத்தில் நாணயமானவன் என்ற பெயர், இவனுக்கு.

டீக்கடையில் நிறுத்தினான். ஒரு முழத்துண்டால் வேர்வையை துடைத்துக் கொண்டான்.

தினத்தந்தி பேப்பர் கிடந்தது. 'ஒரு டீ போடுங்க' என்று சொல்லிவிட்டு நின்ற நிலையில் பேப்பரை விரித்தான். பருத்தி மார்க்கெட்டை முதலில் பார்த்தான்.

பெஞ்சில் ஒரு நாயக்கர். வயதானவர். அறுபது வயசிருக்கும். கதர் வேட்டியும் கதர்த் துண்டுமாக இருந்தார்.

"என்னப்பா. கார்மேகம், பருத்தி விழுதா?"

"ஒன்னும் சாயமாட்டேங்குதே ஐயா. இன்னைக்கு வெறுஞ்சுத்தா சுத்திக்கிட்டிருக்கேன்."

"சில்லறைப் பருத்திதா வாங்குதீயா?"

"ஆமாய்யா..."

"அம்பாரமா பருத்தி இருக்கு, வாங்குறீயா?"

"அம்புட்டுக்கு கையிலே 'ஐவேசு' இல்லியே."

"வித்துட்டு வந்து குடு."

"அப்படி நம்பிச் செய்ஞ்சா, நா வாங்குறேன்."

"சில்லறை ஏவாரியா எத்தனை நாளைக்கு அலைவே? நீயும் பெரியாளா ஆகணும்லே?"

"ஆசை இருந்தா மட்டும் போதுமாய்யா? உங்களை மாதிரி பெரியாளுக சப்போர்ட் வேணும்லே?"

"நம்ம பருத்தியை வேணும்னா பாரு. நா நம்புதேன்."

"அப்பச் சரிய்யா."

விலை திகைந்துவிட்டது. இவனுக்குள் பரவசம். ரெக்கை முளைத்த மாதிரி ஆகாயத்தில் பறந்தான். ராஜபாளையும் பஞ்சுமில் போனான். தாட்டுக் கட்டு கொண்டு வந்தான். ஊர்த் தராசில் எடை. அன்றைக்கே மாட்டு வண்டியில் பாரமேற்றி சரக்கு ராஜபாளையம் போயிற்று. விற்று முதலாக்கி, நாயக்கரிடம் மொத்தமாகப் பணத்தைக் கட்டினான்.

அவன் கையில் ஏழாயிரம் மிச்சம். லம்ப்பாகக் கிடைத்த லாபம். அவன் தலை கால் புரியாமல் தத்தளித் தான்.

நாட்டாமை நல்லையா ஞாபகம் வந்தது.

"அடேய்... ஒரு உப்பு மூடை எடுக்கணும். ஏதாச்சும் கையிலே ரூபாயிருந்தா, கைமாத்தா கொடேன்."

"ஐயய்யோ... ஏங்கிட்டே ஏது பணம்? நானே திண்டாடிக்கிட்டிருக்கேன்."

இப்படிப்பட்ட பெரியாட்களின் தயவு தேவை. நல்லது. எப்போதாவது பயன்படும்.

அவருக்கு ரெண்டு மூடை யூரியா உப்பு எடுத்துக் கொண்டு போய் சைக்கிளில் சேர்த்தான்.

நல்லையா நாடார் திகைத்துத் தடுமாறிப் போனார்.

"என்னடா இது?"

"நாலு நாளைக்கு முன்னாடி ரூவா கேட்டீகளே...?"

"ஆமா. எள்ளுன்னு கேட்டேன்— எண்ணெயா வந்து நிக்குறீயே. வீட்டு வாசல்லே உப்புமூட்டைகளைக் கொண் ணாந்து போட்டுட்டீயே."

"கேட்டீக. இல்லேன்னுட்டேன். மனசு சங்கடமா இருந்துச்சு. ஒரு நல்ல ஏவாரம் கிடைச்சது. சரி, கொண் ணாந்து போட்டுருவம்னு வாங்கிட்டே வந்துட்டேன்."

"ரொம்ப நல்லதாய்ப் போச்சு. ஒனக்கு பத்து நாள்லே பணம் தர்றேன்."

"பதறாமத் தாங்க. அவசரமில்லே."

நல்லையா அந்த உப்பில் கரைந்து போய்விட்டார். கார்மேகத்தைப் பற்றியே நினைத்தார்.

தகப்பனில்லாத பயல். படிக்க வழியில்லாம பாதியிலே நின்னவன். கூலி வேலை பார்த்து, விறகு வெட்டிப் பிழைத்தவன்.

கஞ்சிக்கு வழியற்று கஷ்டப்பட்டவன். நல்ல பயல்தான். திறமையானவன்தான். உருண்டு புரண்டு கரையேறி விட்டான். கையை ஊன்றி, காலை ஊன்றி, கரணம் பாய்ந்துவிட்டான். கெட்டிக்காரப் பயல்தான்.

இனிமேல் 'டா' போட்டுப் பேசக்கூடாது. அது மரியாதையில்லே.

கார்மேகம் பற்றி அவருள் ஓடிக்கொண்டிருந்த எண்ணங்கள்.

கார்மேகம் இந்த உப்புமூடையே தூண்டில் புழுவாகத் தான் போட்டான். மீன் சிக்கிவிட்டது. அவனது குறிக் கோளே வேறு. ரொம்ப அடாவடித்தனம். தாறுமாறான குறுக்கு வழி.

வரப் போகிற பஞ்சாயத்துத் தேர்தலில் பிரசி டெண்ட் டுக்கு நிற்கணும். பணம் செலவழிக்கத் தயாராக இருக் கணும். சாதி ஆதரவு வேணும். அதற்கு நாட்டாமை பக்கபலமாயிருக்கணும்.

தலைவர் தேர்தலில் ஜெயித்துவிட்டால், ஏணியில் கால் வைத்துவிட்ட மாதிரி. மடமடவென்று ஏறிவிடலாம். உச்சிக்குப் போய்விடலாம். ஊரே முயன்றாலும் எட்டிப் பிடிக்க முடியாத உச்சிக்குப் போய்விடலாம்.

ஆனால், இதில் ஒரே ஒரு சிக்கல்.

இந்த ஊரில் தலைவர் தேர்தலில் போன தடவை நாடார் ஒருவர் நின்றார். தேவர்கள், நாயக்கர்கள் ஒத்துழைத்தனர் ஓர் ஒப்பந்த அடிப்படையில்.

அதாவது அடுத்த தலைவர் தேர்தலில் 'நாடார்கள், தேவர் ஒருவருக்கு ஆதரவு தர வேண்டும்' என்ற ஒப்பந்தம்.

அந்த ஒப்பந்தத்தை மீறினால்தான், கார்மேகம் போட்டியிட முடியும். மீறுவதற்கு இருக்கிற ஒரேயொரு பலவீனமான நியாயம்... கடந்த தேர்தல் முடிந்து பதினாறு வருடங்கள் ஆகிவிட்டது என்பதுதான்.

ஐந்தாண்டுகளில் தேர்தல் வந்திருந்தால் அந்த ஒப்பந்தம் செல்லும். பதினாறு வருடங்கள் ஆகிவிட்டதால் அந்த ஒப்பந்தம் ரொம்பப் பழசாகிவிட்டது என்று முரட்டு நியாயம் பேசலாம்.

அப்படி முரட்டு நியாயம் பேச நல்லையா நாடார் வேண்டும். அப்போதுதான் இவன் திட்டங்கள் நடை முறையாக முடியும்.

இப்படிச் செய்தால்...

தேவர்கள் ஆத்திரப்படுவார்களே... படட்டும்!

ஊர் ரெண்டு படுமே... படட்டும்!

சாதிவெறியும் சண்டையுமாய் ஊர் அமளிதுமளியாகுமே... ஆகட்டுமே!

எது எக்கேடு கெட்டால் என்ன...!

இவன் நிலை உயரவேண்டும். அது ரொம்ப முக்கியம்.

டா போடாமல் நாகரிகமாக மதித்துப் பேசுகிற நல்லையா நாடாரின் உள்மனசைப் புரிந்து கொண்டான். அவரைக் கைக்குள் போடுகிற முயற்சியில் இறங்கினான்.

அவருடன் ரொம்ப ஒழுக்கமாக—பவ்யமாக—பணத் தாராளமாக—நடந்துகொண்டான்.

## 16

**க**ல்யாணம் ஒன்றுக்குப் போக வேண்டும். தாழையா ரொம்பப் பரபரத்தார். காலையில் 6-40க்குப் பஸ். ஆற்றுப்பாலத்தில் போய் ஏற வேண்டும். ஒரு கிலோ மீட்டருக்கும் மேலிருக்கும். ஆறேகாலுக்காவது வீட்டி லிருந்து புறப்பட்டாக வேண்டும்.

இவருக்கு இது பெரிய இச்சிலாத்தி. சடங்கு, கிரகப் பிரவேசம், காதுகுத்து, கல்யாணம் என்று மாசத்துக்கு பத்துக்கும் மேல் பத்திரிகைகள் வந்துவிடும்.

"கட்டாயம் வந்துரணும். மொதநாளே உங்க முகத்தைப் பார்க்கணும். வராம இருந்துராதீக" என்று மருகி மருகி

வற்புறுத்தல்கள் வேறு. உறவுக்காரர்கள் மட்டும் என்றில்லை. எல்லாச் சாதியைச் சேர்ந்தவர்களும்தான். இவருக்கோ தரகுத் தொழில். எல்லோருடைய பழக்க வழக்கமும் தேவை. தொழில் அபிவிருத்திக்கே இந்த உறவுகள் ரொம்ப அவசியம். ஆக,எதையும் தள்ளமுடியாது. போகாமலிருக்க முடியாது.

எல்லா ‘நல்லது’களுக்கும் போவதென்றால் முதுமை ஒத்துழைக்க மறுக்கிறது. பெரும் தொல்லைகளாக— வேண்டாச் சுமைகளாக— மனசுக்குத் தோன்றுகிறது. ‘ச்சீ’, ‘த்தூ’வென்று சள்ளைப்படுகிறது.

அதிலும் பஞ்சாயத்துகள்— ஊர் வழக்குகள் இவற்றில் தலையிட்டு வாயடி பலத்தில் வெற்றிக்கொடி நாட்டிய புகழ் வேறு, இவரைப் பெரிய பிரமுகர்கள் வரிசையில் சேர்த்துவிடுகிறது.

“உங்களை மாதிரிப்பட்ட பெரிய மனுஷர்கள் வந்து கால் வைச்சா, எங்க வீட்டு விசேஷத்துக்குத் தனீ மரியாதை” என்கிற மாதிரியான குளிர்ச்சியான நச்சரிப்புகள். மறுத்துப் பேச வழியில்லை.

“ச்சேய்! மத்தவங்க நல்லது பொல்லதுகளுக்குப் போறதுலேயே பாதி ஆயுசு பறிபோயிரும் போலிருக்கே” என்று உள்ளுக்குள் குமைகிற எரிச்சல்.

ஆனால், இந்தக் கல்யாணத்திற்குக் கட்டாயம் போய்த் தீர வேண்டும். மூத்த மகனுக்குப் பெண் எடுத்த வழியில் சொந்தக்காரர்கள் வீட்டுக் கல்யாணம். யாரைப் பகைத் தாலும் ‘சம்பந்த’காரர்களைப் பகைக்க முடியாது. அதிலும், முதல் சம்பந்தகாரர்.

பால் சொசைட்டிக்குப் பால் பீய்ச்சி ஊற்றப் போகிற எருமை மாடுகளின் சத்தத்திலேயே முழிப்பு தட்டிவிட்டது,

அவருக்கு. மணி நாலரை இருக்கும். அப்புறம் உறக்கம் கண்ணில் ஒட்டவில்லை. நாலாவிதமான திசைகளில் நினைவுகளும் நேரமும் நழுவிக் கொண்டிருந்தது.

கண்ணை மூடிக்கொண்டே சும்மாவே படுத்துக் கொண்டிருந்தார். சத்த வடிவில் செவிகளுக்குள் பதிவாகிற வெளிஉலகம்.

முற்றம் தெளிக்கிற சத்தம். மாடுகளை தண்ணீர் குடிக்க விடுகிற சத்தம். தீப்பெட்டியாபீஸ் வேன்களின் பேயிரைச்சல். அடங்கிய பேச்சும், அமுங்கிய சிரிப்புகளுமாக நடந்து செல்கிற சிறுமிகளின் சத்தம்.

அஞ்சு மணிக்கு மேல் பொற்கொடியை உசுப்பி விட்டார்.

“வெந்நி போட்டு வையும்மா” என்று சொல்லிவிட்டு டீக்கடைப் பக்கம் போனார்.

வேலை ஜோலியில்லாத காலம். சம்சாரிகள், கூலி ஜனங்கள் எல்லாரும் டீக்கடையே தஞ்சம் என்று அடைந்து கிடந்தனர். அடைக்கோழி மாதிரி பலதுகளையும் மொணமொணத்துக் கொண்டு சோம்பிப் போய், சுவரில் சாய்ந்து கிடந்தனர்.

டீக்கடை இப்போதெல்லாம் ஊர்க்காரர்களுக்குக் கள்ளுக்கடை மாதிரியாகிவிட்டது. கிடையாகக் கிடந்து, மாறி மாறி டீ குடித்தனர். டீ இல்லாமல் இருக்க முடியவில்லை. கிறுக்குப் பிடித்த மாதிரியாகி விடுகிறது, டீ இல்லாவிட்டால்.

வீட்டில் வெல்லம் தேயிலைப் போட்டு கொதிக்க வைத்துப் பாலூற்றிக் குடித்தாலும், குடித்த மாதிரியே தோன்றாது. கடைட்டீக்கு மனசும் நாக்கும் அப்படிப் பழகிப் போய்விட்டது.

டீ. பீடி. டீ. பீடி... மாறி மாறி இதுதான். வயிறே மந்தித்துப் போய்விடும். நிறையப் பேருக்கு இப்போது காலைக் கஞ்சியே தொண்டையில் இறங்குவதில்லை.

தாழையா கடைக்குள் நுழைந்தவுடன், பேசிக் கொண்டிருந்த பேச்சு மூச்சிழந்து அறுந்தது. எல்லோரும் இவரை மையப்புள்ளியாக்கித் திரும்பினர்.

"என்ன சின்னையா, பருத்தி மார்க்கெட்டு எப்படி யிருக்கு?"

"கம்புக்கு ஏவாரி வருவாகளா மாமா?"

"மக்காச் சோளம் விலை விழுந்து கெடக்குதே. எதுவும் உசும்புமா?"

"பெல்லாரி வெங்காயத்தைச் சீந்துவாரில்லையா, மச்சான்?"

எல்லோருக்கும் பதில் சொல்லி அடைத்தார். டீ வரவும் வாங்கிக் குடித்துவிட்டுப் புறப்பட்டார். ஓடைக்குப் போய்விட்டு வந்தார். நடையில் ஒரு பரபரப்பு. குறிநோக்கிப் பாய்கிற வேகம்.

வெந்நீர் ரெடியாகியிருந்தது. பொற்கொடி முற்றம் தெளித்து, கூட்டிப் பெருக்கிக் கொண்டிருந்தாள்.

குளித்து துவட்டிக் கொண்டார். உள்ளங்கையை கத்திவசமாக வைத்து ஈரத்தலையை 'சட், சட்'டென்று உதறிக் கொண்டார். பலகை மேலிருந்து டிரங்க் பெட்டியை இறக்கித் திறந்தார். சலவை மணம் கம்மென்று மணந்தது. தேய்த்த மடிப்பும், பளீர் வெளுப்பும் மனசுக்குச் சுகமாக இருந்தது, பாலீயஸ்டர் வேட்டி. சந்தனக்கலரில் முழுக்கைச் சட்டை.

இதுபோன வருஷம் சுரண்டை வியாபாரி பாசத்துடன் வாங்கித் தந்த வேட்டி சட்டை. சன்மானம்.

கேரளாவுக்கு மூன்று லாரி லோடு மிளகாய் வற்றல் அனுப்பியாக வேண்டும். வந்து கிடைத்த ஆர்டர். ஆர்டர் மேல் சரக்கு அனுப்பி நம்பிக்கையைக் காப்பாற்ற வேண்டும். அதையும் உரிய நாட்களுக்குள் அனுப்பியா கணும். சுரண்டை வியாபாரி தத்தளித்தார்.

மஞ்சள் பை நிறைய பணக்கட்டுகளோடு வந்தார். நாலைந்து ஊர்களில் நாயாய் அலைந்தார். முட்டி மோதிப் பார்த்தார். முட்டிய முட்டலில் மண்டை காய்ந்ததுதான் மிச்சம். காரியம் ஆகிறமாதிரித் தெரியவில்லை.

நம்பிக்கைகள் சரிந்து, ஆயாசப்பட்டு, வேறு வழியில்லாமல் வந்து சேர்ந்தார், வாயடியிடம். நெருக்கடி நிலவரத்தைச் சொல்லிப் புலம்பினார்.

“நீருதான் தஞ்சம்னு வந்துட்டேன். ஒம்மாலேதான் முடியும்னு நம்பிக்கையோட வந்துருக்கேன்.”

“வந்துட்டீர்லே? வத்தல் லோடு பண்ணிட்டுப் போரும்.”

“அதுக்குத்தான் வாயடி வேணும்ங்குறது.”

சொன்ன மாதிரியே செய்து காட்டினார். மூன்று ஊர்களில் நாலைந்து அம்பாரங்களைக் குறிவைத்தார். வேறு சில சில்லறை ஐட்டங்கள். நடப்பு விலையைவிட ஐம்பது, நூறு விலையை உயர்த்தி வைத்தார். சரக்கு மளமளவென்று விழுந்தது. லாரிகளில் தாட்டுக் கட்டு வந்தது. ஒரே நாளில் எடை. பணப் பட்டுவாடா. சடசட வென்று ரெக்கை கட்டிப் பறந்தது, காரியம்.

மூன்றாவது நாள் மிளகாய் வற்றல் பாரத்தோடு லாரிகள் செங்கோட்டையைத் தாண்டின. சுரண்டை வியாபாரிக்கு சொல்லி மாளாத சந்தோஷம். வழக்கமான

தரகுத் தொகையோடு சேர்த்து, இருநூறு மேற்கொண்டு போட்டுத் தந்தார்.

விற்று முதல் சிட்டையுடன் திரும்பி வந்தார். மனிதர் தத்தளிப்போடு வந்தார். யோகம் அடித்த மாதிரி, நல்ல லாபம். ஒரே கொந்தளிப்பு.

வாயடி கையைப் பிடித்து மருகினார். நல்ல பாலீயஸ்டர் வேட்டியும், இந்தச் சந்தனக்கலர் சட்டையும் எடுத்துத் தந்தார்.

இவர் 'வேண்டாம், வேண்டாம்' என்று சும்மாவாச்சும் 'பிகு' பண்ணினார். அவர் விடவேயில்லை. வாங்கித் திணித்துவிட்டுப் போய்விட்டார். பாசத்திணிப்பு.

சட்டை மடிப்புகளை விரிக்கிறபோது மனசுக்குள் விரிகிற சுரண்டை வியாபாரியின் முகம். சிட்டையைக் காட்டி அவர் பட்ட சந்தோஷம். சொன்ன பாராட்டு வார்த்தைகள். நெகிழ்ந்த மனசின் குழைந்த வார்த்தைகள். தாழையா முகத்தில் ஒரு மென்முறுவலின் ஒளி. மீசை சற்று நிமிர்ந்து, அந்த இளஞ்சிரிப்பில் அந்தச் சின்னமுகமே விரிந்து அழகு பெற்றது.

'ராசா'வையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த செம்பகம், "என்ன சிரிப்பு" என்று மென்குரலில் விசாரித்தாள். அவர் மகிழ்ச்சியில் பங்கெடுத்துக் கொள்கிற ஆர்வம், அவளுக்கு.

"ஒன்னுமில்லே."

"அடச் சொல்லுங்களேன்."

"சும்மாதான்."

"கிறுக்கா ?"

"என்ன ?"

“கிறுக்குப் பிடிச்ச ஆளுகதா ஒத்தையிலே சிரிப்பாக.”

நிமிர்ந்து அவளைப் பார்த்தார். கட்டிலில் சற்றே சாய்ந்த நிலையில் தலையைத் தூக்கி சுவரில் சரிந்து உட்கார்ந்திருந்த அவள் முகத்தில் ஒரு மலர்ந்த பூவின் குளிர்ந்த வெளிச்சம்.

அவர் மனசுக்குள் குறும்பு செய்ய ஆசைப்படுகிற குறுகுறுப்பு.

“பழசை நெனைச்சுக்கிட்டேன்.”

“பழசுன்னா?”

“சந்தனக் கலர்ச் சட்டையைப் பார்த்தவுடனே நம்ம கல்யாணம் யாவுகத்துக்கு வந்துச்சு. அதான் சிரிச்சேன்.”

“பொய்யி.”

“என்ன பொய்யி?”

“அதை நெனைச்சு நாந்தான் சிரிக்கணும். நீங்க சிரிக்க முடியாது. வெக்கப்படத்தான் முடியும்.”

“ம்.”

“என்னைப் பாத்துப் பயந்துபோய் கல்யாணமே வேண்டாம்னு ஓட்டம் பிடிச்ச ஆளாச்சே, நீங்க. ஊர்லே உள்ள ஆளுக தேடிக் கண்டுபிடிச்சு, கோழிக்குஞ்சை அமுக்குன மாதிரி அமுக்கிக் கொண்ணாந்து மணவறை யிலே உக்கார வைச்சாக. கல்யாணத்தப்ப நீங்க பண்ணுன கூத்து, கொஞ்சமா?”

ஒரு சின்னப்பிள்ளை மாதிரியான குதூகலத்தோடும், பெரிய மனுசிக்குரிய அங்கலாய்ப்போடும் சொல்லி அவள் சிரிக்க, அவருக்குள் நிஜமாகவே பூத்த வெட்க உணர்ச்சி. கூச்ச உணர்வு. வாலிப கால அறியாமையை எண்ணித் தர்மசங்கடமாய் எழுகிற சுயபரிகாச உணர்ச்சி.

கூச்சச் சிரிப்போடு முகத்தைத் திருப்பிக் கொள்கிற அவரைப் பார்த்து பெரும் சிரிப்பாக சிரிக்க முயன்று, இருமலில் வந்து மாட்டிக் கொண்டாள்.

பொழுது 'பல, பல'வென்று விடிந்துவிட்டது. வைகறை மேக நிழலாக ஒரு வெளிச்சம். வெயிலுக்கு முந்தைய சாம்பல் நிற வெளிச்சம்.

அந்நேரம், வாசலில் மனித அரவம். சட்டைக்கையை மடித்துவிட்டுக் கொண்டே திரும்பிப் பார்த்தார். வாசல் கொள்ளாமல் நெடிதுயர்ந்த தோற்றத்தில் சிந்தாமணி.

"வாப்பா... வா... உக்காரு."

"ஆட்டும் மாமா... அத்தை, ஒடம்பு எப்படி இருக்கு? சீராக இருக்கா?"

"ஏதோ இருக்கு தம்பி. தொரத்தலும் மருந்தும் தொயந்து வந்துக்கிட்டேயிருக்கு."

"என்ன சிந்தாமணி, பட்டாளத்துலேயிருந்து ஏதோ லம்ப்பா பணம் வருதுன்னியே... வந்துருச்சா?"

"வந்துருச்சு மாமா... பேங்க்லே போட்டுருக்கேன்."

"வீடு கீடு கட்டுறதா உத்தேசம் இருக்கா?"

"கட்டணும் மாமா... கொஞ்சம் பொறுத்துச் செய்யணும்."

இடது கைச்சட்டையை மடித்துக்கொண்டே சிந்தாமணியைப் பார்த்தார். ஓங்கு தாங்கான உடம்பு. அளவெடுத்துச் செய்த சிற்பம்போல கச்சிதமான திரேக அமைப்பு. கறுத்து விரிந்த முகத்தில், ஒரு பாலீஷ். கீற்றுப்போல மீசை. பார்க்க ஆள் ரொம்ப லட்சணம். கம்பீரம்.

'பட்டாளத்து ரொட்டியிலேயும், கறியிலேயும் பயல் நல்லா கொழுத்துருக்கான்.' என்று மனசுக்குள் ஒரு லயிப்போடு ஓடுகிற நினைவு.

"மாமா... எங்கேயோ பெறப்புடறது மாதிரித் தோணுதே."

"ஆமா. ஒரு கல்யாணத்துக்குப் போகணும்."

"ஆத்துப் பாலத்து வண்டிக்கா?"

"ஆமா."

"நா வேணும்ன. சைக்கிள்லே கொண்ணாந்து வுடட்டுமா மாமா?"

"என்னத்துக்கப்பா ஒனக்கு வீண் சிரமம்?"

"இதுலே என்ன சிரமம் மாமா? சும்மாதானே இருக்கேன்."

"அப்பச் சரி. அதுவும் நல்லதுதான். பொடி நடையா போனாலும் அரைமணி நேரமாகும். சைக்கிள்னா... 'சள்'ளுன்னு போயிரலாம்."

நிகோடின் கறுமை படிந்த சிந்தாமணியின் உதட்டு விளிம்புகளில் சிறு மின்னலாய் ஒரு புன்னகை.

"ஏம்ப்பா... இனிமேலாச்சும் ஒரு கல்யாணம் காட்சியை முடிக்கிற வழியைப் பாரு. உங்க அம்மாவும் ஒத்தையிலே கெடந்து ரொம்பச் சீரழிஞ்சிட்டா."

"ஆட்டும் மாமா."

"எங்கக்காவை நெனைச்சா மனசுக்கு ரொம்ப வருத்தமாயிருக்கு. சின்ன வயசுலேயே அமங்கலமாயிட்டா. ஒன்னை வளர்த்தெடுக்குறதுக்காக அரும்பாடு பட்டா. வாய்க்கு ருசியா ஒருநாக்கூட அனுபவிச்சிருக்கமாட்டா.

அப்ப்...படித் தும்பப்பட்டா. நீ வேற ரெண்டு வருஷம் காணாமப் போய், அவளைத் துடிக்க வைச்சுட்டே. அவா ஆயுசு பூராவும் தும்பந்தான். துயரந்தான். வெறும் பொழைப்பு. சூன்யத்துலேயே எரிஞ்சு சாம்பலாயிட்டா."

சிந்தாமணி வெறுமனே தலைகவிழ்ந்தான். மாமாவின் சொற்களில் கசிகிற அம்மாவின் சோகத்தில், உள்ளூர உடைந்து நொறுங்கினான். மனம் முழுக்க ஒரு படபடப்பு. பரிதவிப்பு. ஒரு மனத்திணறல். கண்ணோரங்களில் நீரின் முள் உறுத்தல். ஓவென்று கதறியழ வேண்டும் போலிருந்தது.

அம்மாவின் மொத்த வாழ்க்கையே சூன்யமும் துன்பமுமாய் கழிந்து கரைந்து போயிருக்கிற அவலத்தை, சட்டென்று உணர்ந்து தவித்தான். கற்றையாக நெஞ்சுக்குள் வந்து தாக்குகிற அவலம்.

அம்மாவின் சோகம் அவனே அறிந்ததுதான். அடுத்தவர் மூலமாக அதுவே உணர்த்தப்படுகிறபோது—

அந்தக் கணத்தில்—

அம்மாவின் மீது அவன் கொண்டிருந்த பாசஉணர்வு, பல மடங்குகளாக அதிகரித்து, ஒரு பிரவாகமாக சீறிச் சினந்து, அவனையும் உள்ளிழுத்து சுழற்றி விழுங்குவதைப் போல...

அவனது கண்ணோரங்களில் மனத்துளிகள்.

"நீ வாழப்போற சந்தோஷமும், நீ பெத்துக் குடுக்கப் போற பேரன் பேத்தியுந்தான்... எங்கக்கா காணப் போற வாழ்க்கை."

மாமாவை நிமிர்ந்து பார்த்தான். அவனையே செதுக்கிய சிற்பியாக— தாய் குறித்த இவனின் கடமை களை உணர்த்திய ஆசானாக...

அந்தச் சின்ன உருவம், அவனுள் பிரம்மாண்ட மாகிறது.

அம்மா மீது அவர் வைத்திருக்கிற சகோதரவாஞ்சை அசலானது. ஈர மனசுக்குரிய குணம். அந்த வாஞ்சையின் அசல் தன்மைதான், அவரை அப்படிப் பிரம்மாண்ட மாக்குகிறது.

கனிந்த மனசின் உள் உலகத்தில் மூழ்கிக் கிடந்த தாழையா, நிஜ உலகின் லௌகீக வாழ்வுக்கு கரையேறி வருகிற முயற்சியாக மெல்லச் செருகிக் கொண்டார். தழைந்த குரலின் மிருதுத் தன்மையை—நெகிழ்வை—கடந்துவர முயன்றார்.

"சரியப்பா. எல்லாம் கிடக்கட்டும். அடுத்த என்ன செய்யுறாக உத்தேசம்? ஏதாச்சம் வேலை ஜோலிக்கு எழுதிப் போட்டிருக்கீயா?"

அப்பவும் அவரது குரலில் நெகிழ்ந்த மனசின் குழைவு. ஒருவித உணர்ச்சிக் கரகரப்பு.

கண்ணுக்குப் புலப்படாத உணர்வுச் சலனங்களின் நுட்ப இயக்கம் முழுசையும், மனசால் உள்வாங்கிக் கொண்ட சிந்தாமணிக்குள், பெரும் பிரளயம். மனப் பிசைவு. அடிவயிற்றின் உட்பகுதியை யாரோ பற்றியழுத்தி வதைப்பது போன்ற ஒரு வலி. மார்புக் கூட்டுக்குள் வெற்றிடமாகிப் போன மாதிரியோர் வேதனை.

பொங்கிப் பீறிட்டு வருகிற அழுகையை அடக்குவதற்கு ரொம்பச் சிரமப்பட்டான். இவன் சின்ன வயசில் பார்த்த அம்மா. தீபாவளி போன்ற பண்டிகை நாட்களில் மகனுக்காக பாடுபட்ட அம்மா. துணிமணி எடுக்க முடியாமல் தவித்து அழுத அம்மா.

முகம் முழுவதையும் உள்ளங்கைகளால் அழுந்தத் துடைத்து எடுக்கிற சில கணங்களில் உணர்ச்சிக் கொந் தளிப்பை கட்டுப்படுத்திக் கொண்டான்.

எத்தனை சிரமப்பட்டாலும் குரலின் தழுதழுப்பை மறைக்க முடியவில்லை. தொண்டைக்குள் பிசிறடிக்கிற சங்கடம்.

"சிமிண்டுப் பேக்டரியிலே டிப்பர் டிரைவருக்கு அப்ளை பண்ணியிருக்கேன். பி.ஆர்.சி.யிலேயும் எழுதிப் போட்டிருக்கேன். மிலிட்டரிக் கோட்டாவுலே கெடைக் கலாம்னு ஒரு நம்பிக்கை. பாக்கலாம், மாமா."

"அப்பச் சரி. நேரமாகுது. பெறப்படுவமா?"

"சரி மாமா. சைக்கிளை எடுத்துட்டு வாரேன்."

புறப்பட்டான். பொற்கொடியிடமும் செம்பகத்திடமும் சொல்லிக்கொண்டே வெளியேறிய தாழையா, வழக்கம் போல குலதெய்வம் தாழையடி அய்யனாரை மானசீகமாக நினைத்துக் கொண்டார்.

போன அரைமணி நேரத்திற்கெல்லாம்—

வீட்டு வாசலில் சைக்கிள் வந்து நிற்கிற சத்தம். உயிருக் குள் கலந்து பரிச்சயமான காலடிச் சத்தம். செம்பகம் மெல்லத் தடுமாறி எழுந்து தலையைத் தூக்கிப் பார்த்தாள்.

பார்த்தால் 'ராசா' உள்ளுக்குள் நறுக்கிட்டது. என்னவோ ஏதோவென்று மெல்லிய பதற்றம். உள்பதைப்பு. அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் செயற்கையான கேலியாகக் கேட்டாள்.

"என்ன இது, 'போன மச்சான் திரும்பி வந்தாரு. பூமணத்தோட'ங்குற மாதிரி வந்து நிக்கீகளே. கல்யாணத் துக்குப் போவலியா?"

“கல்யாணமேயில்லியாம்.”

“இதென்ன புதுக்குண்டைத் தூக்கிப் போடுதீக.”

“ஆமா. ஆத்துப்பால வண்டி வந்துச்சு. கல்யாணத்துக்குப் போயிருந்தவுக எல்லாம் அந்தப் பஸ்ஸிலேயே திரும்பிட்டாக. கல்யாணமே நின்னுபோச்சாம்...”

“அதான் கேக்கேன். எதுக்கு நின்னு போச்சாம்?”

“மாப்பிள்ளைப்பயல் எங்கயோ ஓடிப் போய்ட்டானாம்.”

அதிர்ச்சியான இந்தச் செய்திக்குச் சம்பந்தமில்லாமல், செம்பகம் குப்பென்று சிரித்தாள். ஒட்டிக்கிடந்த கன்னச் சதையில்கூட ஒரு மின்னலான ஒளிவெட்டு. உலர்ந்த உதட்டில் ஈரமலர்ச்சி. குழிக்குள் கிடந்த கண்களுக்குள் எட்டிப் பார்க்கும் குறும்பான ஏளனச் சிரிப்பு.

அதன் உள்ளர்த்தம் தாழையாவுக்குப் புரியாமலில்லை. இருந்தாலும் ‘சும்மாவாச்சும்’ கேட்டார்.

“என்ன... சிரிப்பு அள்ளிக்கிட்டு வருது? எதுக்குச் சிரிக்கே?”

“மாப்பிள்ளைப் பையன் உங்ககூடச் சேர்ந்தவன் போலிருக்கு. குடையைப் பார்த்து வெருள்ற காளை மாடு மாதிரி... கல்யாணத்தைக் கண்டு பதறிப்போய் ஓடியிருக்கான்.”

கோபம் பொத்துக்கொண்டு வரவில்லை, அவருக்கு. கூச்சமான குறுஞ்சிரிப்புதான் வந்தது.

“போ... கழுதே, நீ இதையே சொல்லிக்கிட்டு...” என்று சிணுங்கல் சிரிப்பாக சிரித்துவிட்டு அசடு வழிகிற முகத்தை மறைக்க உள்ளே போனார்.

அவருக்குள் அவர். வாலிபமான தாழையா. கல்யாண நாள் நெருங்க நெருங்க பதறிப் பதைத்த இளவட்டத் தாழையா.

பிறரிடம் பகிர்ந்துகொள்ள முடியாத அந்தரங்கப் பதற்றம். உள்மனசை முள்முள்ளாகக் குத்தி ரணப்படுத்திய ஊமைப் பயம்.

பயத்தின் நடுக்கத்திலேயே உறக்கங்களையும் நிம்மதியையும் தொலைத்துவிட்டு, குற்ற உணர்வு கொன்று வதைக்க அரைப் பைத்தியமாக உழன்ற நாட்கள். அந்த முள் நாட்கள்.

முட்புதர் இருட்டுகளாக வந்து மோதி மூழ்கடிக்கிற அந்த நாட்கள்...

## 17

**க**மலை இறைத்துக் கொண்டிருந்தார் சங்கரலிங்க நாடார். தார்ப்பாய்ச்சி கட்டியிருந்தார். தலையில் வட்டக்கட்டாக தலைப்பாகை. மாடுகள் முன்னுக்கும் பின்னுக்குமாகப் போக, கூனையிலிருந்து தண்ணீர் 'பொது பொது'வென்று வாய்க்காலில் கொட்டியது. கமலைக் குழியில் மாடுகளின் தடத்தில் புழுதி பறந்தது. புழுதியை அடக்க அவ்வப்போது வாய்க்காலிலிருந்து தண்ணீர் வாரியிறைத்தார், சங்கரலிங்கம்.

லேசுப்பட்ட சம்சாரியில்லை இவர். ஊரே மதித்துப் போற்றுகிற உழைப்பாளி. முன்மாதிரி விவசாயி.

அப்போதெல்லாம் ஊர் முழுக்க இறவைத் தோட் டங்களில் புகையிலைப் பயிர்தான். அகல அகல இலைக

ளோடு இடுப்புயரத்துக்கு வளரும். பார்க்க ஏகலட்சணமாக இருக்கும்.

ஆனால் ரொம்பக் கவனமாக கவனிக்க வேண்டும். கண்ணில் விளக்கெண்ணெய் ஊற்றிக் கொண்டு கவனித்து, பருவம் தப்பாமல் பக்குவம் செய்ய வேண்டும். பருவம் பிசகினால்... படு நாசம்.

அப்போது... வெள்ளைக்காரன் ஆட்சி. சென்னை மாகாணத்தில் மட்டும் ராஜாஜி ஆட்சி. போதைப் பொருளான புகையிலை மீது எதிர்ப்பு. கள்ளுக்கடை எதிர்ப்பு மாதிரியே, புகையிலை எதிர்ப்பும். திகிடுமுகிடாக வரியைப் போட்டுத் தள்ளினார்கள்.

புகையிலையைப் பயிரிட்ட விவசாயிகள், வரிச் சுமையில் திணறினர். மொத்த விளைச்சலும் வரிக்கே காணாது. அம்புட்டு வரி.

புகையிலை, பயிரிட முடியாத பயிராகிவிட்டது. சரி... அதற்கு மாற்று என்ன? வேறு எதைப் பயிரிட? வழி தெரியாமல் மறித்து நின்ற கேள்வி. விவசாயிகள் தாயைப் பறிகொடுத்த கோழிக் குஞ்சுகளாக ‘கியா...கியா’ என்று திகைப்போடு கத்தினர்.

சங்கரன்கோவில் கமிஷன் கடை ராவுத்தருக்கும், சங்கரலிங்கத்துக்கும் நல்ல பழக்கவழக்கம். ராவுத்தர் வீட்டு ‘சுன்னத்’ கல்யாணத்துக்கு பெரிய வளர்ப்புக் கிடாவை பரிசளிப்பார், சங்கரலிங்கம்.

இவர் வீட்டு விசேஷத்திற்கு மைதீன் ராவுத்தர் கார் போட்டு வருவார். ஊரே திரண்டு வந்து காரை வேடிக்கை பார்த்தது. நூறு இருநூறு என்று மொய் செய்வார். இந்து—முஸ்லீம் வேற்றுமையில்லாமல் உறவு.

‘ரம்ஜானு’க்கு இவர் போவார். தீபாவளி, பங்குனிப் பொங்கலுக்கு மைதீன் வருவார். தாயாய் பிள்ளையாய் உறவு.

அப்படிப்பட்ட அந்த உறவில், கமிஷன் கடையில் உட்கார்ந்து புகையிலைக்கு வந்திருக்கிற பேரிடி பற்றிச் சொல்லிப் புலம்பினார். 'இறவைப் புஞ்சைகளில் மாற்று வெள்ளாமை என்ன செய்ய' என்ற குழப்பத்தையும் சொல்லி மருகினார்.

மைதீன் ராவுத்தர்தான் சங்கரலிங்கத்திடம் சொன்னார்.

"ஏன் சித்தப்பா, உங்க தோட்டத்துலே மொளகாச் செடியை நட்டிப் பாருங்களேன்..."

"எப்படி மகனே, எங்க மண்ணுக்கு இது சரிப்படாதே."

"அட போட்டுத்தான் பாருங்களேன். 'வாய்ச்சால் நமக்கு, வாய்க்காட்டா புள்ளையாருக்கு'ன்னு போடுங்க சித்தப்பா."

"சரி மகனே, நீ கெடுத்த கெடுதலா இருந்தாலும் சரி, காட்டுன வழியாயிருந்தாலும் சரி, போட்டுப் பார்ப்போம்."

"நானே வாரேன். நாத்தாங்கால் போடுற வழிமுறை, நிலம் பக்குவம் பண்ற முறை, நட்டுற பாணி எல்லாம் சொல்லித் தாரேன். அப்பப்ப வந்து கவனிச்சுக்கிடுதேன்."

"வழியில்லாத திகைப்பு. இந்தப் பாதையிலேயும் போய்த்தான் பாப்பமே."

"சித்தப்பா, புதர்க்காட்லே மொதல் தடத்தை தைர்யமா எடுத்து வையுங்க. அப்புறம் சில கால்கள் வரும். ஒத்தை யடிப் பாதையாயிரும். ரோடாகிப் போக ரொம்ப நாளாது..."

ராவுத்தர் வாக்கு பொய்க்கவில்லை. சங்கரலிங்கம் நட்டிய மிளகாய்ச் செடியில் நல்ல விளைச்சல். ராவுத்தர் கமிஷன் கடையில் நல்ல விலை.

இன்றைக்கு ஊர் மட்டுமல்ல. வட்டாரமே மிளகாய்ச் செடி மயமாயிற்று. சங்கரலிங்கம் புண்ணியத்தில் சுத்துபட்டி பத்து ஊருக்கும் பாதை கிடைத்துவிட்டது.

எல்லா வத்தல்களும் மைதீன்ராவுத்தர் கமிஷன் கடைக்கே போயிற்று. தாயாய் பிள்ளையான உறவு வளர்ந்தது. இந்த வட்டாரக் கிராமங்களில் நடக்கிற மாரியம்மன் திருவிழா, செல்லியம்மன் பொங்கல் போன்ற இந்துத் திருவிழாவுக்கு நன்கொடைகள் தருவது ராவுத்தருக்கு வாடிக்கையாயிற்று.

பங்குனி மாசம். மிளகாய்ச் செடி ஓய்கிற பருவம். தண்ணீர் பாய்கிறது. பின்னாலேயே ரெண்டு பெண்கள், பாய்ந்த பாத்திகளில் பருத்தி விதை ஊன்றி வருகின்றனர். தண்ணீர் பாய்ச்சுகிற தாழையாவுக்கு வயசு பதினாறு பதினேழு இருக்கும். மீசை முளைத்தும் முளைக்காமலு மான பருவம்.

தண்ணீர் பாயப் பாய, பருத்தி விதை நடவு. அந்த ரெண்டு பெண்களும் நடு வயசுக்காரிகள். அருந்ததியர். விதைகளை ஊன்றிக்கொண்டே குனிந்த நிலையில் நிமிர்ந்து பார்த்தால், தாழையாவின் பார்வை ஓரே இடத்தில் நங்கூரமிட்டிருக்கும். தங்கள் மார்புச் சதையையே வெறித்துப் பார்க்கிற தாழையா. காணாததைக் கண்ட அதிசய வெறிப்பு. பட்டிக்காட்டான் மிட்டாய்க் கடையைப் பார்க்கிறதாக வெறிப்பு.

ராக்குக்கு அவனோடு விளையாடிப் பார்க்கிற குறும்புத்தனமான ஆசை. "யோவ் எளவட்டம். காய் கடிச்சிருக்கிறீரா?"

"என்ன காய்?"

"கொய்யாக்காய்."

"ம். கடிச்சிருக்கேன்."

அவனது வெள்ளந்தியான பதிலில் சிரிக்கிற ராக்கு.

"மரத்துலே வைச்சுக் கடிச்சீரா, புடுங்கியா?"

"புடுங்கித்தான்."

"நாஞ் சொல்றது, புடுங்க முடியாத காயை."

அவனுக்குப் புரியவில்லை. அடுத்தவள் 'சிரியோ, சிரி'யென்று சிரிக்கிறாள். இவன் வெகுளித்தனமாகக் கேட்டான்.

"புடுங்க முடியாத கொய்யாக்காய் இருக்கவா செய்யுது?"

"ம். இருக்கு."

"எங்க?"

"இங்கயே..."

"இங்கயா?"

"ம்... நீரு உத்து உத்துப் பாக்கீறே, அதுதான்."

இப்போதுதான் அவளது பரிகாசச் சிரிப்புக்கே அர்த்தம் விளங்கியது இவனுக்கு. ரொம்ப வெட்கமாக இருந்தது. அவமானமாக உணர்ந்தான்.

"ச்சீய்... அதுக்கு வேற ஆளைப் பாரு. நா அப்படிப் பட்டவனில்லே."

"அப்ப காய் கடிக்கலே?"

மௌனம் சாதித்தான், புண்பட்ட மனசோடு.

"ஒமக்கு கல்யாணம் மூய்ச்சி வைச்சா, என்ன செய்வீரு? எப்படிக் கட்டி மேய்ப்பீரு? மேய்க்கத் தெரியாத ஆளாயிருந்தா...'ஆடு' கள்ள மேய்ச்சல்லே எறங்கிரும்லே? என்ன செய்வீரு?"

இவனுக்கு அவமானமாக இருந்தது. அப்படியே மண்வெட்டியைப் போட்டுவிட்டு ஓடிவிடலாமா என்றிருந்தது. கோபம் கோபமாக வந்தது. ஒன்றும் பேசவில்லை. விசனப்பட்டவனாக அடுத்த வாய்மடை யைக் கொத்தி விலக்கினான். காய்ந்த மிளகாய் இலைச் சருகுகளை சரசரவென்று இழுத்து வருகிற வாய்க்கால் தண்ணீர். காலடி மண்ணைக் கரைக்கிற நீர். பாத்திக்குள் சரசரவென்று, சாரைப் பாம்பாக நுழைந்து பரவுகிற நீர்.

கேலியாகக் கேட்டாலும் ராக்குவின் வார்த்தைகள் அவனுக்குள் நிஜமாகவே முள்ளாகச் சொருகிக் கொண்டன. அவனை வளைத்து ஆக்ரமிக்கிற கேள்விகள். பாம்பாகப் பின்னிக்கொண்டு பயமுறுத்துகிற கேள்விகள்.

நிஜந்தானே? ஒரு பெண்ணை ஆளுமை கொள்ளத் தெரியுமா? அது எப்படி? அந்த வித்தையே தெரியாதே, என்ன செய்ய? வாழ்க்கையின் மிக முக்கியமான உறவு, தாம்பத்யம். உயிர்களைப் படைக்கும் பந்தம். மனித வம்சாவளியின் முடிவில்லா உறவு. அது எப்படி? எனக்குத் தெரியாதே. என்ன செய்ய?

ராக்குவும் மற்ற பெண்ணும் இவனைப் பார்த்து ஒரே சிரிப்பாணியாகச் சிரித்தார்கள். இவன் பேச்சு கொடுக்க மறுத்தவுடன், அவர்களாகவே பேசிக்கொண்டார்கள். பேச்சு பூராவும் இவனுக்காகத்தான்.

ராக்குதான் ஆரம்பித்தாள்.

"எனக்கு வாய்ச்ச மொதப்புருஷன் கதை தெரியுமா?"

"தெரியாதே..."

"தேனீக்காரன். ஆளு வாட்ட சாட்டமாயிருந்தான். வெள்ளையும் சொள்ளையுமா ஆளு. ஏகத் தடபுடல். கால்லே செருப்பு, கையிலே ரிஸ்ட் வாட்ச்னு ரொம்ப

ஜோக்கா இருப்பான். எனக்குப் பிடிச்சுப்போச்சு. எர நூத்தைம்பது ரூவா பரிசப்பணம். கல்யாணம் மூய்ஞ்சது. மனுசன் பகல் பூராவும் ஒரே சில்மிஷம். அங்க தொடுவான். இங்க தொடுவான். குறுஞ்சிரிப்பு சிரிப்பான். கண்ணடிப் பான். நா ரொம்ப மயங்கிப் போய்ட்டேன்."

"ம். அப்புறம்!"

"ராத்திரியாயிச்சு. வெளியே எல்லார் மத்தியிலேயும் கூச்சமில்லாம சேட்டைக செய்வான். ஒரே ரகளை. தனிச்சு வுட்டாக. பேந்தப் பேந்த முழிச்சான். ஒன்னுந் தெரியலே. கையும் ஓடாம, காலும் ஓடாம பிடிபட்ட மைனாக்குஞ்சு மாதிரி முழிச்சான்."

"நீயாச்சும் சொல்லித் தர வேண்டியதுதானே?"

"பொம்பளை எப்படி இதைச் சொல்லித் தரமுடியும்? அனுபவப்பட்ட கையான்னு கேட்டா என்ன சொல்ல?"

"அது வேற கூத்து. பெறகு?"

"பெறகென்ன? பேய் முழியா முழிச்ச பய, இருட்டுக் குள்ளே போன குருட்டுப்பய மாதிரி தடபுடன்னு மேலே வுழுந்து புரண்டான். 'பொசுக்'குன்னு சாய்ஞ்சட்டான். எனக்கு ஆத்திரம்னா ஆத்திரம். பகல் பூரா அவன் போட்ட ஆட்டம். தூண்டிவிட்ட ஆசை. இப்ப சுருண்டு கெடக்குற அலங்கோலம்... காலடியிலே கெடந்த அவன் நெஞ்சுலே ஒரே மிதி. உதைச்ச உதையிலே மல்லாக்கப் போய் வுழுந்தான். பொட்டைக் கழுதை மாதிரி அழுது சிணுங்குனான்."

"ம்..."

"பத்துநா பொறுத்துப் பாத்தேன். ஒன்னும் ஒப்பேறலை. அவனும் ஏங்கிட்டே மிதி வாங்க முடியாமப் பதறிப்

போய்ட்டான். பரிசப் பணம் எரநூத்தைம்பதுக்கு ஐநூறு ரூவாயை தீர்வையா கட்டிட்டு தாலியை வாங்கிட்டுப் போய்ட்டான்."

"அப்புறம்... அவன் என்னானான்?"

"தேனியிலே ஒரு கல்யாணம் மூய்ச்சான்; அதுவும் மறுமாசமே 'தீர்ந்'தாச்சு. அப்புறம் மருந்தைக் குடிச்சுச் செத்துப் போய்ட்டான்."

"ஐயய்யோ..."

"பெறகு? சொல்லித் தெரிவதில்லைம்பாக, இந்தக் கலையை. கண்டாச்சும் தெரிஞ்சுருக்கணும்லே? ஒன்னுந் தெரியாம ஒரு பொண்ணோட வாழ்க்கையைப் பாழாக்க லாமா? அது? பாவம்லே...?"

"அதைச் சொல்லு."

"இவரும் காய் கடிக்கலேங்குறாரு. இவருக்கு வாய்க்கப் போற புண்ணியவதி என்ன பாடு படப்போறாளோ...? எப்படி ஏங்கிச் சாகப்போறாளோ...? வேற யாரையும் கூட்டிக்கிட்டுப் போகப் போறாளோ? யாரு கண்டது? இவரு என்ன கூத்து பண்ணப் போறாரோ."

கேட்காதவனைப் போல எங்கோ பார்த்தாலும், இவன் காது பூராவும் இவள் கதையில்தான். இவனுக்குள் ரெண்டு காட்சி துல்லியமாக விரிந்தது.

நெஞ்சில் உதை வாங்கி மல்லாக்க விழுந்து அவமானப் பட்ட புதுமாப்பிள்ளை.

நுரை கக்கி செத்துக் கிடந்த ஓர் இளைஞன்.

இவனுக்குள் இந்தக் காட்சிகள், பயங்கர மிரட்டலாக இறங்கிற்று. படர்ந்தது. மனசின் மூலை முடுக்கெல்லாம் பரவியது.

நெஞ்சில் உதைபட்டு கேவலப் பிண்டமாக விழுகிற வனாக இவன்.

நுரை கக்கி செத்து விறைந்த நிலையில், தாழையா.

ஊன்றிய பருத்தி விதை முளைத்ததோ இல்லையோ... ராக்கு ஊன்றிய விதை, இவனுக்குள் முளைத்தது. விஷ விருட்சமாக எழுந்தது. அவனை அலைக்கழித்தது.

நாட்கள் கடந்தன. தாழையா போக்கே மாறிவிட்டது. இளவட்டங்கள் கூடிக் கூடிப் பேசுகிற குசுகுசு பேச்சுகளில் வேண்டுமென்றே கலந்தான். வேலி மரக்காட்டில் ஜோடி சேர்ந்து பின்னிக் கிடந்ததைப் பார்த்ததாக... பம்ப்ஷெட் ரூம்களில் மாறிப்போன கள்ளஜோடி பின்னிக் கிடந்ததாக... கதை கதையாகச் சொன்னார்கள். 'கண்டதாக'ச் சொன் னார்கள்.

இவனும் வேலை மெனக்கெட்டு காடுகளில் அலைந்து பார்த்தான். 'பின்னிக்கிடந்த கோலம்' இவனுக்கு மட்டும் கண்ணில் தட்டவேயில்லை.

இளவட்டங்களுடன் பேசிய பேச்சுப் பழக்கத்தில் ராக்கு சொன்னது சரியென்றே பட்டது.

குடும்பங்கள் சண்டைகளும் சச்சரவுகளுமாக 'லோல்' படுவதற்கும், சரசமும் சந்தோஷமுமாய் பொங்கிப் பூரிப்பதற்கும் ரெண்டுக்குமே மூலகாரணம் மன்மதக் கலைதான். பெண்ணை ஆளுமை கொள்வதில் வெற்றி கண்டு திருப்திப்படுத்திய புருஷனுக்கு காலடிப் புழுவாக மனைவி கிடப்பாள், சகலவிதமான சகிப்புத் தன்மை களோடு...

திருப்திப்படுத்தாத புருஷனை காலடிப் புழுவாக மிதித்துக் கேவலப்படுத்துவாள்.

இந்தச் சித்திரம்தான் கிடைத்தது. இதுதான் ராக்குவும் சொன்னது. இதெல்லாம் தாழையாவுக்குள் அச்சுறுத்தலை அதிகப்படுத்தியது. அனுதினமும் மிரட்டியது. அவனது தேடல்களை அதிகரித்தது.

தேடிக் கண்டடைகிற விஷயமாகத் தெரியவில்லை. ஏமாற்றமும் மிரட்சியுமே நிரந்தரமாயிற்று.

இப்படிப்பட்ட மனநிலையிலுள்ள இளைஞர்கள் தஞ்சமடைவதற்கென்று, கிராமத்தில் ஓரிடம் உண்டு. கிடைகாவல் கிருஷ்ணன்தான், அது.

அவன் மன்மதக் கலையில் ஒரு பல்கலைக்கழகம். அவன் குறிவைத்து, விழாத பெண்ணில்லை. கரைகண்ட ஆள். அவனிடமே தாழையாவும் தஞ்சமடைந்தான்.

வீட்டில் பருத்தியை களவாடுவான். கடையில் போட்டு சேவு, சீனிக்கிழங்கு, கருப்பட்டிப் பலகாரம் என்று நிறைய வாங்கிக்கொண்டு கிடைக்கே போய்விடுவான், தாழையா.

கிட்ணன் போட்ட கதைகள் ஒன்று ரெண்டு கிடையாது. வண்டி வண்டியாகக் கதைகள். எல்லாம் சம்பவங்கள். ஜோடி சேர்ந்த பறவைகள். ஜோடி மாறிய சோரக் கதைகள். கிழவனைச் சுற்றிய இளசுகள். இளசுகளை வேட்டையாடிய கிழடுகள்.

இவனுக்குள் மாய உலகம். விரிந்து விரிந்து மோக மூட்டுகிற கதைகள். நிஜம்போலத் தோன்றுகிற மோகினிகள் உலகம்.

கிட்ணனும் சலிக்க ஆரம்பித்துவிட்டது, தாழையா வுக்கு. அவனும் இன்பக் கதைகள்தான் போட்டான். ஒரு பெண்ணை ஆளுமை கொள்கிற அந்த மாயவித்தையைச் சொல்லித் தரவில்லை.

அப்போதுதான்—

சக்கிலியக்குடிக்கு கூனை தைக்கப் போனார் சங்கர லிங்கம். அவன் கிழிந்து கிடந்த கூனைத் தோலைத் தைத்த தோடு கிழிந்து கிடந்த தாழையா சங்கதியையும் தைத்து விட்டான்.

"மொதலாளி, உங்க புள்ளையாண்டன் போக்கு சரியில்லே."

"ஏன்... என்னாச்சு?"

"கெடை காவல் கிட்ணன் கூடவே சுத்துராக."

"யாரு...? தாழையாவா?"

"ஆமா... மொதலாளி."

கிடை காவல் கிட்ணன்கூட ஓர் இளவட்டம் சுற்று கிறான் என்றால் கல்யாண ஆசை வந்துவிட்டது என்பது, கிராமத்துக் கணக்கு.

அர்த்த பாவனையோடு சங்கரலிங்கம் தலையை ஆட்டிக் கொண்டிருந்தபோது, அவர் யோசனைக்கு வழிகாட்டுகிற மாதிரி கூனை தைக்கிறவன் சொன்னான்.

"மொதலாளி, ஊரே கையெடுத்துக் கும்புடுற குடும்பம், உங்க குடும்பம். புள்ளையாண்டனாலே ஒரு தலைகுனிவு வராமப் பாத்துக்கங்க. புள்ளை கைமீறிப் போறதுக் குள்ளே, ஒரு கால் கட்டு போட்டு கைக்குள்ளே பிடிச்சு வைச்சுக்கங்க."

"ம்"

அவரது யோசனை, ஒரு முடிவாகி அதுவும் செய லாகிறபோது தாழையா நிஜமாகவே அதிர்ந்து விட்டான். பருந்தைக் கண்ட நாகமாகப் பம்மிப் பதுங்கினான்.

# 18

**தா**ழையா ரொம்ப ஒல்லி. சின்ன முகம். சில்லாங்குச்சி (கிட்டிப்புல் குச்சி) மாதிரி உடம்பு. கரிசல் காடுகளில் கரட்டான் மாதிரியே சிறிசாக ஒன்று இருக்கும். அதற்குப் பெயர் சில்லான். அப்படித்தான் இருப்பான் தாழையா.

சங்கரலிங்கம் தாழையாவைக் கூப்பிட்டார்.

"என்ன அய்யா?"

"ஓங்கூட சுப்பையா மகன் வருவான். மாதாங்கோவில் பட்டியிலே முத்யைா நாடார் மகா செம்பகம்தான் பொண்ணு. போய்ப் பாத்துட்டு வந்துரு."

"யாருக்கு?"

"ம்" என்று ஒரு உறுமல் உறுமினார். அதிலேயே பாதி ஒடுங்கிப் போனான்.

"ஒனக்குத்தாண்டா."

"எனக்கா...? கல்யாணமா?"

"ஆமா... அதுக்குள்ளே ஐயா... கிட்ணன்கூட ரவுண்டு அடிக்க ஆரம்பிச்சிட்டீகளாம்லே?"

"அதெல்லாமில்லே."

"எல்லாந் தெரியும்டா. போய்ப் பார்த்துட்டு வா. சொன்னதைச் செய். எலும்பை எண்ணிருவேன். படுவா ராஸ்கல்."

அரண்டு போனான். அதற்குமேல் அரண்டு போனான், செம்பகத்தைப் பார்த்து. ஆள் நல்ல சிவப்பு. ஓங்குதாங்கான உடம்பு. வேலையில் வசக்காத வீட்டுக்கர்ளை மாதிரி, கம்பீரமான லட்சணமாக இருந்தாள். அவள் ஆசைப்பட்டால் இவனைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொள்வாள். அப்படித் திடகாத்திரம். அரேபியக் குதிரை மாதிரி நிமிர்ந்த தோற்றம்.

இவனிடம் அபிப்பிராயம் கேட்கவேயில்லை. காரியம் 'மளமள'வென்று நடந்தது. பூ வைப்பு, நிச்சயதார்த்தம் எல்லாம் நடந்தது.

தாழையா உள்ளுக்குள் நடுங்கினான்.

கல்யாணம் பண்ணி என்ன செய்யப் போகிறான்? எப்படி ஆளுமை கொள்வது? என்ன ஏது என்ற அரிச்சுவடி கூடத் தெரியாத இவன் எப்படிக் குடும்பம் நடத்த?

செம்பகம் நெஞ்சில் உதைத்தால்... இவன் எப்படி எகிறிப் போய் விழுவான் என்கிற கற்பனை, மாறிமாறி உள்ளுக்குள் வந்தது.

இந்தக் கேவலத்தை எப்படி எதிர்கொள்ள? இவனது அறியாமை அவளால் பரிகசிக்கப்படுவதை எப்படித் தாங்க? 'ப்பூ! நீயெல்லாம் ஒரு ஆம்பளையா? நீ கெட்ட கேட்டுக்கு கல்யாணம் ஒரு கேடா?' என்று கேட்டால் எப்படித் தலைநிமிர?

அவள் முன்னால் இவனை நிறுத்தினால் முதலிரவில் பேந்தப் பேந்த முழிக்கவா?

வரப்போகிற இழிவை எண்ணி எண்ணி மருண்டான்.

இந்தக் கேவலக்கூத்தை யாரிடம் சொல்ல? சொல்ல முடியுமா? சொன்னால் கைகொட்டி சிரிக்க மாட்டார் களா?

நீந்தத் தெரியாதவனை கிணற்று விளிம்பில் நிறுத்தி தள்ளிவிடப் போவதாகச் சொன்ன மாதிரி, மனசுக்குள் பதற்றமாகக் கதறினான். கிலியும் திகிலுமாக முகம் இருண்டு போய்த் திரிந்தான்.

கையாலாகாதவனாக இருப்பதிலுள்ள இழிவை— இதனால் வரப்போகிற கேவலங்களை நினைத்து நினைத்து மிரண்டான்.

கல்யாணத்திற்குப் பிறகு, கொஞ்ச நாட்கள் கழித்து இவள் ஓடிப்போய் விட்டால்...? இவனது 'அறியாமை' ஊரறிந்த விஷயமாக தண்டோரா போடப்பட்டு விட்டால்...? இவன் எப்படி உயிர் வாழ? எப்படி அந்தக் கேவலத்தைத் தாங்க?

நுரைவழிய செத்து விறைத்துக் கிடக்கிற தாழையாவை மனசுக்குள் கண்டு கண்டு நடுங்கினான். இவனது நடுக் கத்தைக் கண்டு தாட்சண்யம் காட்டவில்லை, நாட்கள். அவை தன்போக்கில் நெருங்கி நெருங்கி வந்தன.

அறுக்கப் போகிற ஆடுபோல தவித்தான். இந்த இக்கட்டிலிருந்து எப்படி மீள? மீண்டு எங்கு போக? அயலூர் போய் அறியாதவன். மிஞ்சி மிஞ்சி இவன் பார்த்த ஊர்கள் சங்கரன் கோவிலும், செவல்பட்டியும் தான். செவல்பட்டிக்கு புகையிலைப் பாரம் விற்கப்போன வண்டியில் போயிருக் கிறான். சங்கரன்கோவிலுக்கு மிளகாய் வற்றல் விற்கப்போன சங்கரலிங்கத்துடன் போயிருக்கிறான்.

நாட்கள் நெருங்கிவிட்டன. வீட்டில் கல்யாணக்களை கட்டிவிட்டது. நெல் குத்தினார்கள். மசால் சாமான்கள் இடித்தார்கள். சொந்தம் பந்தம் வரத் துவங்கிவிட்டது.

இவனுக்குள் நரக வேதனையாக, அச்ச நடுக்கம். நிமிசத்திற்கொரு கற்பனையும் பயபீதியுமாக நகரும் பொழுதுகள். மனசுக்குள் நிரந்தரமான தேள்கடி ரணம்.

வேறு வழியில்லை. கேவல இடி கிணற்றில் தள்ளப் படுவதைவிட அறிமுகமில்லாத மனித மக்களோடு போய் கலந்துகொள்வது பரவாயில்லை.

நள்ளிரவில் புறப்பட்டுவிட்டான்.

அவன் காணாமல் போனதை கல்யாணத்திற்கு முதல் நாள்தான் உணரப்பட்டது. எவ்வளவு ரகசியமாக பொத்திப் பொத்தி வைத்தாலும் விஷயம் எப்படியோ மாதாங் கோவில்பட்டிக்கு ரெக்கையடித்துவிட்டது.

செம்பகம் கேவலம் தாங்காமல், குன்றிப்போனாள். தனது இழிவான தலையெழுத்தை எண்ணி எண்ணி ஊமையமுகையாய் அழுது கசிந்தாள்.

மாப்பிள்ளை காணாமல் போகிறான் என்றால் அதற்கு ஒரே அர்த்தம்தான், சமூகநோக்கில். 'பெண் பிடிக்கவில்லை' என்பது ஒன்றுதான்.

வரப்போகிற கணவனால் இப்போதே வெறுக்கப்படு கிறோம் என்பது ஒரு பெண்ணுக்குத் தாங்கக்கூடிய இழிவா? வெறுக்கிறவனோடு ஆயுள் முழுக்க மாரடித்தாக வேண்டும் என்கிற நிர்ப்பந்தத்தில் கட்டுண்டு நிற்பது, ஒரு பெண்ணுக்கு எத்தனை பயங்கரம்?

யாரிடமும் முகம் கொடுக்காமல் மூலையில் கிடந்து 'மூசுமூசெ'ன்று அழுதுகொண்டேயிருந்தாள், செம்பகம். பச்சைத் தண்ணீர்கூட பல்லில் படவில்லை. சோறு தண்ணீர் காணாமல் சுருண்டு கிடந்தாள்.

இன்ன இடம் என்ற குறியில்லாமல் ரெக்கை விரித்துப் புறப்பட்ட தாழையாவுக்கு, ஆகாயமெல்லாம் கனத்த இருட்டாக மருட்டியது.

அவனைக் காணோம் என்றவுடன் மூலை மூலைக்கு ஆட்கள் புறப்பட்டார்கள், தேடி. நாலா மூலைகளுக்கும்

நிறைய ஆட்கள். காணாமல் போன கோழியை படப்பு களில்— குப்பைமேடுகளில்— சந்து பொந்துகளில்— கூரை வல்லடைகளில் தேடுவதைப்போல. ஆள் ஆளுக்கு எட்டுத் திசைகளிலும் வலைகளை விரித்தார்கள்.

சங்கரலிங்கம் இத்தனை களேபரத்திலும் இம்மிகூடக் கலங்கவில்லை. கல்யாண வேலைகளை அவர் பாட்டுக்குக் கவனித்தார். எல்லாருக்கும் தைர்யம் சொன்னார். தயங்கித் தயங்கி மயங்கியவர்களையெல்லாம் அதட்டி முடுக்கி விட்டார். அவர் நம்பிக்கை வீண்போகவில்லை.

முகூர்த்த நேரத்திற்கு சற்று முன்னால்—

கைது செய்யப்பட்டவனாகக் கொண்டு வரப் பட்டான், தாழையா.

கோடை மழையில் நனைந்த கோழிக்குஞ்சாகக் கிடந்து நடுங்கினான்.

கல்யாணம் ‘ஜே ஜே...’ என்று சீரும் சிறப்புமாக நடந்தது.

‘ஏண்டா ஓடுனே’ என்று ஒரு வார்த்தைகூடக் கேட்க வில்லை, சங்கரலிங்கம். வாழ்க்கை அதன் போக்கில் ராட்சஸ வலிமையோடு சுழன்று நகரும். அதன் பற்சக்க ரத்தில் சிக்கியவர்களையும், சிக்க மறுத்தவர்களையும் இழுத்துப் பிடித்து நசுக்கி, தன்னைப் போன்ற வடிவத்தில் வார்த்துவிடும் என்ற பலத்த நம்பிக்கையில், பரிபூர்ண நிதானமாக இருந்தார்.

தாழையா எதைக் கண்டு கடந்த ரெண்டு மூன்று வருஷமாக நினைத்து நினைத்து நடுங்கிச் செத்தானோ, அந்த முதலிரவு வந்தது.

ரொம்ப நடுங்கிப்போய், திகிலும் பீதியுமாக எதிர் கொண்டான். இன்னும் சில வினாடிகளில் செம்பகம் வந்துவிடுவாள். அவளுடன் தனித்து விடப்படுவான்.

'என்ன செய்ய?' மர்ம இருட்டாக சூழ்ந்து நெருக்குகிற மாயப் பய உணர்வு. எல்லோரும் சொர்க்கமாக நினைக்கிற அற்புதம், தாழையாவுக்கு மட்டும், பயங்கர நெருப்புக் குண்டமாகத் தோன்றி மருட்டுகிறது.

கதவு திறந்து மூடுகிற சத்தம். இவனுக்குள் திக்கென் கிறது. நெஞ்சு தடக் தடக்கென்று அதிர்கிறது. மெல்ல வருகிற செம்பகம். அண்ணாந்து பார்க்கத்தக்க உயரமாக அவள்.

நெஞ்சில் ஓங்கி மிதிக்கப்போகிறவள். முகத்தில் அரு வெறுப்புடன் காறித் துப்பப் போகிறவள். 'ஓடிப் போய்' கேவலப்படுத்தப் போகிறவள்.

அவனுக்குள் வியர்வை. சட்டையெல்லாம் 'தொப் தொப்'பென்று நனைந்துவிட்டது. பயத்தில் மருள்கிற கண்கள். வெளுத்துப் போய் அரண்டு போன முகம்.

அவன் அவனாக இல்லை. தன் வசமிழந்த நிலையில் அவன். அவனை மீறிக்கொண்டு ராட்சஸமாக நெருங்குகிற நேரம். கட்டுமீறிய நிலை. தலைக்கு மேல் வெள்ளம். பயந்து பலனில்லை. தப்பிக்க வழியில்லை. மாற்று மார்க்கமில்லை.

அவனை மீறிய அவன். மாய இயக்கத்தின் கையில் சுழன்ற அவன். என்ன செய்கிறோம் என்றுணர முடியாத மனநிலையில் இயக்கம்.

எப்படியோ அந்த நாள் கடந்துவிட்டது. நெஞ்சில் உதை விழவில்லை. செம்பகத்தின் முகத்தில்— அவளது கண்களின் ஆழத்தில்— பயத்தோடு, பார்வையை நிறுத்தினான். அவளிடம் அருவெறுப்பு இல்லை. அசூயையின் சாயல்கூட இல்லை. உள் ஒடுங்கிய வெறுப்போ, கோபத்தின் நிழலோ தென்படவில்லை.

நாணத்தின் சங்கடத்தில் புன்னகைக்கிற அவள். திருப்தியின் பூரிப்பில் குலுங்குகிற காலை ரோஜாவாக

அவள். அதிகாலைக் குளியலில் அழகு ரூபமாக சுடர் விடுகிற செம்பக முகம். ஒளி மின்னுகிற கண்களில், மனசு. எதிர்கொண்டு பார்க்காமல் தர்ம சங்கடமாக தவிர்ப்பதில் இவனுக்குள் வேர்பிடிக்கிற நம்பிக்கை. 'ஆளமுடிந்த ஆண்தான்' என்கிற தன்னம்பிக்கை.

ஆனால், அவனுக்கு வேறொரு வெட்க உணர்வு. இரு முழங்கால்களிலும் ரத்தம் கோதிப்போன புண். தோல் நைந்து போயிருந்தது. அந்தப் புண்ணே தண்டோரா. இவனது 'அறியாமை'யை ஊர் முழுக்கச் சொல்லிவிடும்.

ரொம்பப் பதறினான்.

வேட்டியை மடித்துக் கட்டவே பயந்தான். எந்நேரமும் கால்வரை விட்டேயிருந்தான், முழங்கால்களை மறைக்க.

மலையாக மறித்து நின்ற விஷயம், இப்படிப் பன்னீ ராகிப் போனதில் இவனுக்கு ஏகப் பிரமிப்பு. 'எதற்காகப் பயந்தோம்' என்று நினைக்கும்போதே, வெட்கக்கேடாக இருந்தது. 'ச்சே... இப்படி ஒரு விஷயத்திற்கா, இத்தனை காலமாக நடுங்கிச் செத்தோம்?'

மூன்றாவது பிள்ளை பிறந்த ஆறாவது மாசம். ரெண்டு பிள்ளைகளும் ஏற்கெனவே உறங்கிவிட்டன. பௌர்ணமி நிலா. பட்டுப் போல நிலா. பால் போல வெளிச்சம்.

ஆறு மாச மழலை அழுது சிணுங்கியது. இவன்தான் தோளில் வைத்திருந்தான். அது சிணுங்க ஆரம்பித்தவுடன் நெஞ்சில் போட்டு குலுக்கிக்கொண்டே நடந்தான்.

செம்பகம் குளிக்கிற சத்தம். தண்ணீரின் 'சளப்' சத்தம்கூட எழாமல், அமுத்தலான ரகசியமாகக் குளிக்கிற பெண் சாமர்த்தியம்.

குளிப்பதற்கு ஏன் பயப்படுகிறாள்? இவனுக்குப் புரிகிறது.

இந்நேரம் குளிப்பது என்பது ஒரு மொழி. தாம்பத்ய ரகசிய பாஷை. மகரந்தச் சேர்க்கையோடு மலர்ந்து சிலிர்க்கிற ஒரு பூவின் மொழி. தழுவலுக்கும் தத்தளிப்புக்கும் தயார் என்கிற உணர்த்தல்.

தாழையா சிரித்துக் கொண்டான். அவளைத் 'தொட்டு' ஏழெட்டு மாசமாகிவிட்டது.

"ஏய்... புள்ளே அழுகுது."

"என்ன செய்ய?"

"சீக்கிரம் வா, பசிக்கும் போலிருக்கு."

"இந்தா வந்துட்டேன்."

வந்துவிட்டாள். சீயக்காயின் நறுமணம். ஈரக்குளிர்வான மேனியின் சுகந்த வாசம். இவனுள் ஒரு திணவு.

வழக்கம்போல பிள்ளையை 'அமர்த்த' மறைவு தேடவில்லை. அவனோடு ஏதேதோ பேசிக்கொண்டே அவன் முன்னால்.

பிள்ளை வயிறு நிறைய நிறைய, கண் அயர்ந்துவிட்டது. அலுங்காமல் தூக்கி தொட்டிலில் போட்டாள். சற்றே நெளிந்து புரள்கிற மழலை. தொட்டிலின் ஆட்டத்தில் மறுபடியும் தூங்கிவிட்டது.

"படுக்கலியா?"

"படுக்கணும்."

"வெளியே பாய்தலைவாணியை எடுத்துட்டுப் போங்க."

"நீ?"

"உள்ளேதான்."

அடப்பாதகத்தி! எத்தனை மாய்மாலம்! அழைக்கிற மர்மச் செயல்கள். விரட்டுகிற வார்த்தைகள்.

"நா இன்னிக்கு உள்ளேதா."

"அதெல்லாம் முடியாது."

"என்ன முடியாது?"

"முடியாதுன்னா முடியாதுதான்."

மூர்க்கமூட்டுகிறாள். வெறிகொள்ள வைக்கிறாள். இதுதான் ஊடலா? மூர்க்கமும் வெறியும்தான், அவள் எதிர்பார்ப்பா?

"போய் வெளியே படுங்க."

"மாட்டேன்."

"என்ன பேச்சு. இது?"

"செல்லப் பேச்சு."

அப்புறம் அவளைப் பேச விடவில்லை, அவன். திமிறாமல் மறுக்கிற அவள். காட்டமில்லாத செல்லக் கோபங்கள். 'ச்சேய்' என்கிற செல்லச் சிணுங்கல்கள். ஆர்வமான ஒத்துழைப்பு. ஆசையான இணக்கம். பௌர்ணமிக் கடலின் ஆர்ப்பரிப்பாக அவள்.

மூர்க்கமும் வெறியுமாக இவன். காய்ந்த மாடு கம்மங்கொல்லையில் விழுந்த மாதிரியான வேகம். உக்கிரம். ஆரவாரம். உணர்ச்சிப் படையெடுப்புகள்.

எல்லாம் முடிந்து, படைகள் விலகிச் சரிந்த பிறகு—

திளைப்பின் உச்சத்தில் செம்பகம். வேர்வைப் பிசுபிசுப்பான அவன் கன்னத்தில் கடித்து, தோளைப் பிசைந்து 'ராசா... ராசா...' என்று மிழற்றி...

களைத்த உடம்பு. வெற்றிப் பெருமிதத்தில் திளைக்கிற அவன். பெருமித எண்ணங்களின் ததும்பல்.

இப்படிப்பட்ட நேரத்தில் பேசுவதேயில்லை, அவர்கள். பின்பும் இதைப் பற்றிப் பேசுவதுமில்லை. பேசுவதை அவள் அனுமதிக்க மாட்டாள்.

இன்றைக்கு ஏனோ... பேசாமலிருக்க முடியவில்லை அவனால்.

"செம்பு..."

"ம்."

"ஏய்... செம்பு."

"என்ன?"

"இப்ப இப்படி இருக்கோமே... நம்ம கல்யாணத் தன்னிக்கு நா எப்படிப் பயந்து கிடந்தேன்... தெரியுமா?"

"தெரியும்."

"ஆனா... நீ அன்னிக்கும் நீ திருப்தியாகத்தான் இருந்தே..."

"ம். நா என்னத்தைக் கண்டேன்? நீங்க தந்ததுதான் 'அது'ன்னு நெனைச்சிருந்தேன். அம்புட்டுத்தான் அதுன்னு நெனைச்சுக்கிட்டேன்."

"ஒனக்கு எப்பவும் வெறுப்பே வரல்லியா? 'இவன் என்ன ஆம்பளை'ன்னு எப்பவும் எளப்பமா மனசுக்குள்ளே நெனைக்கலியா?"

"எதுக்கு நெனைக்கணும்? நாம் பாத்த ஆம்பளையே நீங்கதான். உங்க கொணம் ரொம்பப் புடிச்சுப் போச்சு. என்னை மதிச்சு நடத்துன உங்க நடப்பு, ரொம்பப் புடிச்சுப் போச்சு. அதுலே.... மத்த கொறை எதுவும் பெரிசாத் தெரியலை எனக்கு..."

"நெசம்மாவா?"

“கொறைக இல்லாம ஒலகத்துலே யாரு இருக்காக? உத்துப் பாத்தா... சாமிகிட்டேகூட குத்தம் பாக்கலாம். சகிச்சுப் போறதுதா மனுசத்தன்மை. ஒரு கொறையை இன்னொன்னு விழுந்து நெறையாக்கிரும். அப்படி நெனைச்சாத்தான்... வாழ்க்கை. இல்லேன்னா.... நரகந்தான்.”

“ம்.”

“இந்த விஷயத்துலே அறியாம இருக்கிறது, கேவலமில்லே. பெருமைப்படணும். யோக்கியம்ங்குறதுக்காக, ஒழுக்கம்ங்குறதுக்காக பெருமைப்படணும். ராவணனுக்கு இருந்த தேர்ச்சி, ராமனுக்கு எப்படி இருக்கும்? இல்லாம இருக்குறதுதானே... பெருமை?”

செம்பகம்தானா பேசுவது? அவளுக்கா இத்தனை அறிவு?

தாழையா தடுமாறிப் போனான். மூன்றாண்டு காலமாக பயந்து பயந்து வெட்கப்பட்டுப் போயிருந்த அறியாமையையே... ஓர் அழகு என்கிற செம்பகம். இது... முற்றிலும் புதிய கோணம். புதிய பார்வை.

ராக்குவின் விஷ விருட்சம் ஒரு மாயமாக மறைந்தது.

செம்பகம் வெறும் பெண்ணில்லை. இவனை அளந்து முடித்த ஞானி. இவனது பலவீனத்தையும், அறியாமையையும் தாயின் மனத்தோடு தாங்கி, இவனை வழிநடத்தியிருக்கிற சாரதி. இவனுக்காகவே இவனை நேசித்திருப்பவள். இவனே உலகம், இவனே சகலம் என்று சங்கமித்திருப்பவள். நம்பிக் கிடந்தவள். தாழ்ந்து... சகித்து... இவனை வார்த்து... உயர்த்தியவள். வாழ்க்கைக்கு தகுதியானவனாக மாற்றியவள். இவனது சிருஷ்டிகர்த்தா, அவள்.

அன்றைக்குத்தான்...

தாழையா செம்பகத்தின் முழுமையை உணர்ந்தான். மண உலகத்தின் உள் நரம்புகளை தொட்டுணர்ந்தான். மன உலகின் ஆளுமையை— அன்பின் முடிவில்லா ஆழத்தை— ஆத்ம சங்கமிப்பின் இறுக்கத்தை உணர்ந்தான்.

செம்பகம் அவனது ஆத்மாவானாள். அவனது உயிர்த் துடிப்புகளிலெல்லாம் செம்பக அதிர்வுகள்; அவனது உள் நரம்புகளில் ஓடுகிற ரத்தமாக அவள்.

அவனது உயிராக...வே, அவள்.

அப்போது...

ஏனோ இப்படி நினைத்தான்.

'சாகுறப்ப கூட ஒன்னாவே செத்துப் போகணும்...'

அபசகுனமான இந்த நினைப்பில் அதிசயமான பரவசத்தை உணர்ந்தான்...

'இன்றைக்குத்தான் அவளைக் காதலிக்கத் துவங்கி யிருக்கிறான்' என்பதை அவனே உணர்ந்ததில்லை.

## 19

**ந**ல்லையா நாடார் உள்ளூர எதிர்பார்த்திருந்தார், 'கார்மேகம் வருவான்' என்று. அந்த யூகம் பொய்யாக வில்லை. சாப்பாடு எல்லாம் முடிந்து, கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தார். மணி பத்து இருக்கும்.

வீட்டுக்குக் கிழக்கே மாட்டுத் தொழுவம். காளை மாடுகளும், பசு மாடுகளும் கட்டிக் கிடந்தன. ஒரு வெள்ளாடு.

காவலுக்கு அதன் வாசலில் கட்டில் போட்டிருந்தார். போர்வையை விரித்து தலையணையைப் போட்டார். வெற்றிலையை துப்பிவிட்டு வாயைக் கொப்புளித்தார். ரெண்டு மடக்கு தண்ணீரைக் குடித்துவிட்டு படுக்க எண்ணுகையில்... பக்கத்தில் ஆள் அரவம்.

"யாரப்பா... இந்நேரத்துலே?"

"நாந்தான்... பெரியப்பா."

"அடடே... கார்மேகமா? என்னப்பா?"

"ஒன்னுமில்லே பெரியப்பா, உங்ககிட்டே தனிப்பட ஒரு யோசனை கேக்கணும்னு நெனைச்சேன்."

"அதான்... யாருமில்லாத நேரத்துலே இங்க வந்தீயாக்கும்?"

"ஆமா... பெரியப்பா..."

"சரி... உக்காரு" என்று கட்டிலின் விளிம்பைக் காட்டினார், நல்லையா. "இல்லெ பெரியப்பா, நா இங்கனே உட்காந்துக்கிடுதேன்" என்று பக்கத்தில் கிடந்த கல்லில் உட்கார்ந்தான்.

அந்த மரியாதையும் பவ்யமும் நல்லையாவின் நாட்டாமை மனசுக்குப் பிடித்திருந்தது. கார்மேகத்தின் நுட்பமும், தந்திரமும், சாமர்த்தியமும் வயசுக்கு மீறிய விஷயம். எப்படியேனும் முன்னேறிவிடத் துடிக்கிற வெறி, அவனுள் பலப்பல திறமைச் சிறகுகளை வளர்த்திருக்கிறது.

நேற்று டி.வியிலும் வானொலியிலும் சொன்னார்கள், 'உள்ளாட்சித் தேர்தல் வரப்போகிறது' என்று. அந்நேரமே யூகித்தார், 'இவன் வருவான்' என்று.

இன்றைக்கு எல்லா நாளிதழ்களிலும் தலைப்புச் செய்தியே இதுதான். பஞ்சாயத்துத் தேர்தல் பற்றியும், அதன் விதிகள் பற்றியும் விரிவு விரிவாகச் செய்திகள்.

நல்லையா நினைத்தது பொய்யாகவில்லை. இதோ... வந்துவிட்டான், கார்மேகம். கோழி களவாட ஈரச் சாக்குடன் வருகிற கள்ளன்மாதிரி.

"ம்.... சொல்லு" என்றார் நல்லையா.

"ஒன்னுமில்லே பெரியப்பா... ஊரெல்லாம் தேர்தல், கீர்தல்னு பேசிக்கிடுதாகளே..."

"ஆமா.... பஞ்சாயத்துத் தேர்தல் வரப்போவுதுங்காக. என்ன செய்யணும்ங்கே? நீ நிக்கப்போறீயா?"

"அது சம்பந்தமாத்தான் உங்ககிட்டே யோசனை கேட்டுட்டுப் போவலாம்னு வந்தேன், பெரியப்பா..."

"பிரசிடெண்டுக்கு நிக்கணும்ங்குறீயா?"

"நிக்கலாமா... பெரியப்பா?"

"நிக்கலாம். ஏகப்பட்ட ரூவா செலவாகுமே... பத்தா யிரத்துக்கும் மேலே ஆகுமே..."

"செலவைப் பாத்தா முடியுமா பெரியப்பா? உங்களை மாதிரி பெரியவுக 'நில்லு'ன்னு சொல்லிட்டா... பணத்தைப் பத்தி யோசிச்சிக்கிட்டிருக்க முடியுமா?"

பேச்சு பேச்சாக இருந்தாலும்... அவருள் நக்கலும் வியப்புமான நினைப்பு, தனி ரூட்டாக ஓடிக்கொண் டிருந்தது. 'நாம் பார்க்க பிறந்த சின்னப் பயல், கஞ்சிக்கு வழியற்று வேலி விறகு வெட்டித் திரிந்த பயல், ஏதோ சைக்கிளை உருட்டி, நாலு வருஷமாக சில்லறைப் பருத்தி வியாபாரம் செய்த பயல்— அதற்குள் மான் வேட்டைக்குத் தயாரான புலியாக... வந்து பம்முகிறான்.

அற்பப்பயலுக்கு வந்திருக்கிற ஆசையைப் பாரு. கோவணத்துலே நாலு துட்டு சேர்ந்தா.... கோபுரத்துக் கொண்டையிலே எடம் கேக்குது.

நாட்டாமை நான். சுத்துபட்டி பத்து ஊரும் போய் பஞ்சாயத்து பண்ணி தீர்த்து வைக்கிறவன். பெரிய மனிதர். ஊர் கையெடுக்கும்.

ஆனால்... பிரசிடெண்டாக ஆவதற்கு வழியில்லை. அதற்குப் பணம் வேண்டும். பணம்... பணம்... கட்டுக் கட்டாக பணம் வேணும். நல்ல குணம் வேண்டாம். பொதுச் சேவை மனோபாவம் வேண்டாம். மனித நேயம், தேசப்பற்று.... ஒரு மண்ணும் வேண்டாம். பணம். பணமிருந்தால்... பதவிக்கு ஆசைப்படுகிற யோக்யதை வரும்...

நாடு அப்படியாகி விட்டது... நிலவரம் தலைகீழாகி விட்டது.

"என்ன பெரியப்பா... ரொம்ப யோசிக்கீக?"

அவனது தவிப்பு... இவருக்குப் புரிகிறது. பதவிக்கு வந்து சேவை செய்கிற துடிப்பா? கூட்டியள்ளிவிடத் துடிக்கிற தவிப்பு. குறுக்கு வழியில் பணக்காரனாகி விடுகிற துடிப்பு.

இவனை இன்னும் கொஞ்சம் தவிக்கவிடலாம்.

"ஒன்னுமில்லே கார்மேகம்... யோசிக்கணும்லே?"

"அப்படியா?"

"ஆமா... இதென்ன கொத்தைப் பருத்தி ஏவாரமா? ஊர் வெவகாரமில்லே? இதுலே நெறைய யோசிக் கணும்லே?"

"அப்பச் சரி பெரியப்பா... நா வாரேன்... பெரியம்மா என்னமும் சொன்னாகளா...?"

"இல்லியே..."

"வீட்லே ஒரு மூவாயிரம்... குடுத்துட்டுப் போனேன்..."

"ஆமா... மா... அதைச் சொன்னா...."

என்ற நல்லையா குரலை சற்று கனியச் செய்து கொண்டார்.

"எதுக்கும்... ரெண்டு நா பொறு. ஊர் நெலவரம் எப்படியாகுது, யார் யார் என்ன மாதிரி வாராகன்னு பாப்போம். தேவமார் விஷயம்தான் ரொம்பச் சிக்கலா வரும்."

"என்ன சிக்கல்?"

"போன தேர்தல்லே நாடார் பிரசிடெண்டா ஆகுற துக்கு, தேவமார்க உசுரைக் குடுத்து ஒழைச்சாக. அப்பவே... வாய் மூலமா ஒப்பந்தம். அடுத்த தேர்தல்லே தேவர் பிரசிடெண்டா வர்றதுக்கு நாம ஒத்துழைக்கணும்னு..."

"வருஷம் பதினாறாச்சுல்லே? பழசாயிருக்கும்லே?"

"அப்படியெல்லாம் சொல்ல முடியாது. நீ நம்பிக் கையோட போ..."

நல்லையா நிறைய யோசித்தார். இருட்டு வானத்தையே வெறித்தார்.

அவரவர் அவரவர் வேலை ஜோலிகளைப் பார்த்துக் கொண்டு தன் போக்கில் இயங்கிக் கொண்டிருந்த மொத்த ஊரையும், ஊர்களையும் பஞ்சாயத்துத் தேர்தல் வந்து உசுப்பிவிட்டது. குளத்தில் வந்து விழுந்த எருமை மந்தைகளாக... குளமே ரணகளம்.

ஆள் ஆளுக்கு ஒரு நோக்கம். சாதி உணர்வு தீயாகப் பற்றிக் கொழுந்துவிட்டெரிந்தது. சாதிக்குள்ளேயே 'வகையறா' பிரிவினை வேறு. சதிகளும், ரகசியங்களும், திட்டங்களும், செயல்பாடுகளுமாக... கூட்டம் கூட்டமாக குசுகுசுப்புகள்.

சம்பிரதாய பூர்வமாக தேவர்கள் பிரமுர்கள் வந்து நல்லையாவிடம் ஆதரவு கேட்டனர். நல்லையாவே இப்படிச் சொன்னார்.

"நாங்க நன்றி மறக்கலே. ஒப்பந்தத்தை மதிக்கிறோம். இந்த வருசம் பிரசிடெண்ட் ஒரு தேவர்தான். நாங்க முழுசா ஆதரிக்கிறோம்... போதுமா...?"

"அப்படீன்னா... கார்மேகம்...?"

"அவன் தலைப்புரட்டு பிடிச்ச பய. எங்க சாதி சனத்தைக் கேளாம... அவனாகவே ஏதோ ஏற்பாடு பண்ணிக்கிட்டிருக்கான். நாங்களும் கண்டிச்சுப் பாத் துட்டோம்... கேக்கமாட்டேங்குறான்."

"அப்படியே விட்டா... எப்படி? ஓட்டுக் கலையும்லே?"

"கலையாது. ஒத்த ஓட்டுகூட சிந்தாம சிதறாம உங்களுக்கு வந்து விழும். அதுக்கு நா காரெண்டி. ஆனா... நீங்க ஒன்னு செய்யணும்."

"என்ன?"

"ஊர் நல்லாயிருக்கணும். பஞ்சாயத்துலே நெறைய சர்க்கார் வேலை நடக்கணும், அதுக்கு நாணயமான— நல்ல ஆளா, பாத்து நிப்பாட்டுங்க. 'காமா சோமா' ஆளு வேண்டாம்."

"அதை நாங்க பாத்துக்கிடுதோம்...."

நல்லையா ஒரு திட்டத்துடன் 'பொடி' வைத்தார். 'நல்ல ஆள்' என்கிற பொடி. நிறுத்தப்படுகிற ஆளை, நல்ல ஆள் இல்லை என்று குறை சொல்லி, அதிருப்தி தெரிவித்து, ஆதரவை வாபஸ் பண்ணிக் கொள்ளலாம் என்று திட்டம்.

அப்படியே நடந்தது. தேவர்களில் முக்கியமானவர்கள் யாரும், தேர்தலில் பணம் செலவழிக்க விரும்பவில்லை. பணமுமில்லை. தயாராகி முன் வந்தது 'சங்கையா' தான்.

வேறு எந்தத் தேவரும் தயாரில்லை என்ற நிலவரத்தை சரியாகப் புரிந்துகொண்டார், நல்லையா.

அதனால் “சங்கையா என்றால்... ஆதரவு தர மாட்டோம். ஒப்பந்தத்தை மீறி தோற்கடிப்போம்” என்று ஆணியடித்த மாதிரி நாட்டாமை சொல்ல....

ஒவ்வொரு விஷயமும் ஊர் முழுக்க ஒலிபரப்பாயிற்று, உடனுக்குடன். ஒன்றுக்கு பத்தாக... வெவ்வெறு வர்ணங்களில்...

எதிரும் புதிருமான கருத்துகள். வெவ்வேறு அபிப்பிராயங்கள்...

“சங்கையாவா...? அவன் பிரசிடெண்டா? போச்சுடா, நரிக்கு ரெக்கை முளைச்ச கதைதான். பறக்க ஒரு பறவை மிஞ்சாது.”

“நல்லவங்க உக்கார வேண்டிய பொறுப்பான இடத்துலே... இவனை உட்காரவிட்டா.... ஊர் விளங்குமா?”

“கார்மேகம் யோக்கியமாக்கும்? அவனும் கழுதை முழுங்கிப் பயதான். ஆப்புட்டா... ஆகாசத்தையே மடிச்சு உள்சட்டைப் பையிலே ஒளிச்சிக்கிடுவான். நம்ம சாதிக்காரன்னா... நயம்னு சொல்லவா?”

“என்ன இருந்தாலும் சாதியை வுட்டுரக் கூடாது. சாதியை வுட்டுக் குடுத்துட்டா... நாளைக்கு ஒரு நாய்கூட நம்மளை மதிக்காது.”

“ஒப்பந்தம்...?”

“ஒப்பி வந்தாத்தானே பந்தம்? நாம சொல்றதை அவுக ஒப்பலைன்னா, நாம எதுக்கு ஒப்பந்தத்துலே கெடந்து தொங்கணும்?”

இப்படி மூலை மூலைக்குப் பேச்சுகள். பெண்கள் மத்தியில் சாதிவெறி இன்னும் கூடுதலாக இருந்தது.

கடைகளில்— மடங்களில்— வேலைத் தளங்களில்— டீக் கடையில் எங்கும் இதே பேச்சுத்தான். எல்லாச் சாதியி லேயும் இதே ரகப் பேச்சுகள்.

சாதி... சாதி... சாதி வெறி... பேச்சு பூராவும் ரத்தமாய் ஓடிப் பரவுகிற சாதிவெறி.

ஒவ்வொரு சாதியிலும் வேலை மெனக்கெட்டு சாதி வெறியைத் தூண்டிவிடுகிற ஆட்கள். டென்சன் தணிந் தால்... அவதூறுகளைப் பரப்பி பரப்பி முறுக்கேற்றி விடுகிற விஷமிகள். துரும்புகளை தூணாக்குகிற குசும்புகள்.

ஆங்காங்கே தெருக்களில் வாய்ச்சத்தம். தேவமார்— நாடாக்கமார்களிடையே குதர்க்கமும் வெறுப்புமான வாயாடல்கள். வெக்கையான சத்தங்கள்.

உள்பதுங்கிக் கிடந்த சாதி வெறி, நாகரீக உடைகளைக் களைந்தெறிந்துவிட்டு... அம்மணமாக ஆட்டம் போட்டன. அன்பு, கருணை, பாசம், மனிதநேயம், தாட்சண்யம் எல்லாம் ஒதுக்கி வைக்கப்பட்டு... விஷமம், பகைமை, வெறுப்பு, குரோதம், ராட்சஸம் எல்லாம் முன்னுக்கு வந்தன.

சகஜ வாழ்க்கை ஸ்தம்பித்தது. நாளுக்கு நாளாக மாறிவந்த மோசமான உணர்வுகள். விபரீதச் சம்பவங்கள்....

ஒப்பந்தத்தை மீறிவிட்ட நாடார்களின் மீது, தேவர் களுக்குத் தார்மீகக் கோபம். 'நரித்தனம் செய்கிறார்கள்' என்கிற குற்றச்சாட்டு. கோபமும் குரோதமும் மனித முகங்களின் புன்னகைகளை அடகு வாங்கிக் கொண்டன. சாதி கடந்த நட்புகள், சோதனைக் களமாயிற்று. கிராமம், வளர்ந்து வந்த ஜனநாயகப் பண்புகளின் பல ஆண்டுகளை விழுங்கிப் பொய்யாக்கிவிட்டு... கடந்த கால அநாகரீகங் களுக்குள் முகம் புதைத்து சுகம் கண்டது.

மனித முகங்கள் வெறுப்பும் விரோதமுமாக விறைப்பேறி லட்சணங்கெட்டுப் போயிற்று.

ஆக... கார்மேகம் நின்றான். நாடார்கள் முழுக்க ஆதரவு. தேவர்கள் சார்பில் சங்கையா. ஒப்பந்தத்தை மீறிய நாடார்களின்— வஞ்சனைப் போக்குப் பிடிக்காத நாடார்களின் நட்புச் சாதிகள் எல்லாம், தேவர்களுக்கு ரகசிய ஆதரவு.

வெப்பமான நாட்கள். உக்கிரமான நாட்கள். நரம்புத் தளர்ச்சியாகிப் போன மனிதர்கள்.

தேர்தல் முடிவு வந்தது. ரெண்டு பேரும் தோற்றனர்.

இதே பஞ்சாயத்தைச் சேர்ந்த அடுத்த கிராமத்துப் பிரமுகர் ஜெயித்துவிட்டார்.

நூற்றைம்பது குடும்பங்கள் உள்ள நாடார்களின் வேட்பாளரைவிட, எழுபது குடும்பங்கள் உள்ள தேவர்களின் சங்கையா அதிக ஓட்டுகள் வாங்கியிருந்தான். தோற்ற கேவலத்தைவிட, இந்தக் கேவலம் நாடார்களுக்குள் பெருத்த கேவலம். அவமானம். கண்மூடிய ஆத்திரம். பழி வாங்குகிற வெறி. பகைத் தீயின் ஜ்வாலைகள்.

அந்த ஜ்வாலைகள் யாவும்... தாழையா குடும்பத்தை சுற்றி வளைத்துக் கொண்டன என்பதுதான்... விதிக் கொடுமை!

## 20

**ப**சுமாட்டை வெளியே கொண்டு வந்து கட்டினாள் பொற்கொடி. சாணமும் மூத்திரமுமாய் மாட்டின் உடம்பெல்லாம் அடை அடையாய் ஒட்டி உலர்ந்து

போயிருந்தன. வாலின் குஞ்சமெல்லாம் சடைசடையாக சாணத் துகள்கள்.

தொழுவத்தையெல்லாம் பெருக்கிச் சுத்தப்படுத்தினாள். மாடு நிற்கிற கல்தரையையெல்லாம் குச்சிமாறால் தேய்த்து, நீரை ஊற்றிக் கழுவி விட்டாள். கழுவிப் பெருகிய அழுக்கு நீரையெல்லாம் சட்டிகளில் சுமந்து, குப்பையில் ஊற்றினாள்.

தொழுவத்தை உலர விட்டு விட்டு மாட்டுப் பக்கத்தில் பானைத் தண்ணீரை வைத்து அள்ளி அள்ளி மாட்டின் மேல் ஊற்றினாள். வைக்கோலை கையில் வைத்து, பசுவைத் தேய்த்தாள். பசுவைக் குளிப்பாட்டி முடித்தாள்.

அந்நேரம் அந்தப் பக்கமாக வந்தான் சிந்தாமணி.

"என்ன பொற்கொடி, வீட்லே மாமா இருக்காகளா?"

"இல்லே மாமா..."

அவன் முகத்தில் ஒரு புதிய மலர்ச்சி. உதடுகளின் மின்னல் சிரிப்பாக புன்னகை. அளவில்லாத சந்தோஷத் ததும்பலில் அவன்.

"என்ன மாமா... ஏதேச்சும் விசேஷமா?"

"ஒன்னுமில்லே."

"என்னமோ ஒரே ஆதாளியாயிருக்கீக..."

"ஆமா... கொஞ்சம் சந்தோஷந்தான்."

"ஏங்கிட்டே சொல்லக்கூடாதா... மாமா?"

"ஞாயமாப் பாத்தா... ஓங்கிட்டேதான் மொதல்லே சொல்லணும்."

"என்ன மாமா?"

"பி. ஆர். சி. யிலே டிரைவர் வேலை கெடைச்சிருக்கு. பட்டாளத்துக் கோட்டா."

"நெசம்மாவா...?"

"ஆமா பொற்கொடி, நெசந்தான்."

"எங்கயேும் போகணுமா?"

"இல்லே... இங்கேயிருந்து போய்ட்டுப் போய்ட்டு வந்துரலாம்."

"ரொம்ப நல்லதாய் போச்சு."

"என்ன நல்லது?"

"உங்களை அடிக்கடி பாத்துக்கலாமே..."

"அது ஒரு நல்லதா?"

"ஆமா... அது எனக்கு நல்லது. ஆனா... ஒரு வருத்தம்."

"என்ன வருத்தம்?"

"முந்தியெல்லாம் காராச்சேவு, பொறிகடலை வாங்கி வாங்கித் தருவீக. கதை போடுவீக... இப்ப அதெல்லாம்... இல்லே."

"நீ சின்னப் புள்ளே இல்லே... வளர்ந்துட்டே, பெரிய மனுசியாயிட்டே..."

"அப்ப ஒன்னும் கெடையாதா? தரக்கூடாதா?"

"தரணும். தந்துக்கிட்டிருக்கேன்.... எப்பவும் தந்துக் கிட்டேயிருப்பேன்."

"என்னத்தை?"

"என்னைத்தான்."

'கப்'பென்று அடங்கிப் போனாள். மௌனம். துள்ளலும் துடிப்புமான மௌனம். மனசின் ஆழம் வரை அதிர்ந்து குலுங்கி, கும்மியடிக்கிற மௌனம். ரெக்கை விரிய 'விர்ர்'ரென்று வெளியைப் பிளந்து பறக்கிற

மௌனம். பசுமாட்டின் பெருமூச்சு, பெரும் இரைச்சலாகி... மௌனத்தைக் கலைத்தது.

"என்ன பொற்கொடி."

"ம்."

"ஒன்னும் சத்தத்தைக் காணலியே."

"ம்?"

"கோபமா?"

"இல்லே" என்பதுபோல தலையைக் குலுக்கினாள். பசுவின் முன்கால் குளம்புகளையே பார்த்தாள். அதன் வால் சுழன்று சுழன்று செல்லமாக முதுகில் அடித்துக் கொண்டது. அதன் மெல்லிய 'திம்ம்' சத்தம்.

அவளுக்குள் அவள் கண்ட கனா. அதில் பச்சைக் கைலியும், வெள்ளைப் பனியனுமாக வந்த உருவம்...

அவளுக்குள் கனவுப் பறவைகள். வர்ணக் கனவுகள்.

"பொற்கொடி..."

"என்ன மாமா...?"

"அம்மா அய்யாவைப் பத்திக் கவலைப்படாதே. அய்யாவுக்கு நெறையத் தும்பம் வரும்னு நெனைக்கேன். நீ பயப்படாதே. நாதியத்துப் போயிருந்த எங்கம்மாவுக்கு மாமா பாதுகாப்பாயிருந்தாரு. நா உங்களுக்குக் கூடத் தொணையாயிருப்பேன்..."

"ம். என்ன தும்பம் வரும்?"

"ஊர் நெலவரம் சரியில்லே. மனுசங்க கொணம் நெறம் மாறியிருக்கு. புயலா வந்த பஞ்சாயத்துத் தேர்தல், மழையையும் தந்துருக்கு. அழிவையும் தந்துருக்கு. நல்லதுக்கு மரியாதையில்லாமப் போச்சு."

"ம்."

அவளுள் பயம். பறவையாடுகிற கண்கள். பீதியும் கிலியுமாக அரண்டு போகிற முகம். உயிரொளியற்றுப் போய் வெளுக்கிற முகம்.

"பயப்படாதே. எது வந்தாலும் பயப்படாதே. நா இருக்கேன். சுப்ரமணி, வேல்சாமி பலத்தோட நா இருக்கேன்."

போய்விட்டான், சிந்தாமணி. அவனுக்குள் வர்ணம் வர்ணமாக நினைவுகள். பொற்கொடி. பூப்போன்ற மிருது. பொன்போன்ற நிறம். அந்தி வெயிலையும் வெட்கித் தலைகுனியச் செய்கிற ஒளி. லட்சணம். கண்களின் ஒளிர்வும், நாசியும், இதழ்களும், இதழ்களின் ஈரக் குழைவும் எல்லாமே கச்சிதம். கச்சிதமே ஒரு லட்சணம்.

மங்கலம் காணாத எனது வீடு. துன்பமும் வறுமையும் இழிவும் கால் நீட்டித் தூங்கிய வீடு. இப்போது வறுமை யில்லை. துன்பமில்லை. ஆனாலும் வீட்டின் வெறுமை. வசந்தமில்லாச் சூன்யம். குளிர்ச்சியோ— புல்லரிப்போ இல்லாமல் சும்மா கழிந்து போகிற நாட்கள்...

வீடு புதுசாகணும். புது வெளிச்சமாகணும். தங்கக் குழைவாக பொற்கொடியின் தகதகப்பில், வீடு லட்சண மாகணும். ஒளியும் உயிரும் பின்னிப் பிணையணும். உயிர்களின் பரவசத்தில் புது உயிர் மலரணும்.

மழலை வடிக்கும் பன்னீர் எச்சிலில், வீடு வாசம் பெறணும். வாழ்க்கையின் சிரிப்பில், மனசுகள் சிலிர்க்கணும்.

அவனுள் நிறைய 'ணும்'கள் முடிவில்லாமல் நீள்கிற 'ணும்'கள். வாழ்க்கையின் தாகமாக உணர்கிற 'ணும்'கள்.

தெற்குத் தெருவுக்குள் நுழைந்தான், சிந்தாமணி. வேல்சாமி இவனைத் தேடி ஓடிவந்தான். அவன் வருவதைப் பார்த்து சிந்தாமணி தேங்கினான்.

"என்ன வேல்சாமி?"

"என்னமோ கூட்டமாமே? நீ சொல்லிவிட்டதாக சுப்ரமணி சொன்னானே."

"என்ன சொன்னான்?"

"என்னமோ கூட்டமாம். ஏதோ மாவட்டத் தலைவர் வாராறாமே...?"

"ம்."

"என்ன விஷயம்?"

"நம்ம ஊர்லே இந்திய ஜனநாயக வாலிபர் சங்கம்னு ஒரு அமைப்போட கிளை அமைக்கப் போறோம். இன்னைக்கு அமைப்புக் கூட்டம். மாவட்டத் தலைவர் தாமஸ் வர்றார்."

"அது என்ன அமைப்பு?"

"இந்த ஊர்லே சாதிச் சங்கங்கதான் இருக்கு. பஞ்சாயத்துத் தேர்தலுக்குப் பிறகு, சாதிச் சண்டையை வளர்க்குற தன்மைதா வளருது. பகையும் வெறுப்புமா ஊர் ஜனங்க. இதைத் தடுத்து நிறுத்தியாகணும். சாதிச் சண்டை வராம பாத்துக்கணும். இந்தப் பெரிய வேலையை நம்மளை மாதிரி எளவட்டங்கதான் செய்ய முடியும்."

"சாராயம் சினிமான்னு சீரழிஞ்சுக்கிட்டிருக்கிற எளவட்டங்களா?"

"ஒன்னைப் போல என்னைப் போல நல்ல எளவட்டங்க இல்லியா? எல்லாச் சாதியிலேயும் இருந்து

எளவட்டங்க வரப்போறாங்க. கொறைஞ்சது இருபத்திரண்டு பேரு. தேவர், நாடார், நாயக்கர், அரிஜன்னு எல்லாச் சாதி எளவட்டங்களும் சேரப்போறோம்."

"ம்."

"இன்னைக்கு அமைப்புக் கூட்டம். அடுத்த வாரம் கொடியேத்தப் போறோம்."

"இது நல்ல யோசனைதான். சாதி சாதியா பிரிச்சு பகையை வளர்க்குறாங்க பெரியவங்க. நாம எல்லாத்தையும் ஒன்னு சேர்க்குறது ரொம்பச் சரி."

"அது மட்டுமில்லே, வேல்சாமி, ஜனங்க காலம் பூராவும் ஒழைக்காக. காலம் பூராவும் கஷ்டப்படுறாங்க. நஷ்டப்படுறாங்க. தும்பப்படுறாங்க. 'தும்பத்துக்கு யாரு காரணம்'னு யோசிக்க விடாம, சாதிவெறியும் வெறுப்பும் வந்து மூடிக்கிடுது. நாம ஒன்னு சேருவோம். எல்லா ஏழை சனத்துக்கும் ஒத்துமையோட வலிமையை உணர்த்துவோம். வாழ்க்கையை மாத்தியமைக்க முடியும்னு காட்டுவோம். நம்ம ஊருக்கு மட்டுமில்லே, நம்ம நாட்டுக்கே..."

"ம்... நெனைச்சுப் பாத்தா ஆச்சரியமாயிருக்கு."

"என்ன ?"

"நாடாக்கமாரும் தேவமாரும் மொறைச்சிக்கிட்டிருக்காக, நம்ம ஊர்லே. நாம கூடிப் பேசி திட்டம் போடுதோம்."

"எளவட்டங்க முழிச்சிட்டாங்கன்னா இந்தியாவே சரியாயிரும். பகத்சிங், வாஞ்சிநாதன் இவங்க செய்ஞ்ச தியாகத்துலேதான், சுதந்திரத் தீ கொழுந்துவிட்டெரிஞ்சது."

சிந்தாமணி வாலிபர் அமைப்புக்கு வர சம்மதித்துள்ள இளைஞர்களின் பெயர்களைச் சொன்னான்.

"நீயும் பாத்தா சொல்லு. நானும் பாத்தா சொல்றேன். இன்னிக்கு சாயங்காலம் எங்க வீட்லே கூட்டம்."

"ஆட்டும்."

வேல்சாமிக்குள் புதிய உற்சாகம். ஏதோ ஒரு பொறுப்பை நம்பி ஒப்படைக்கிற அளவுக்கு தன்னை மதிக்கிற சிந்தாமணி. 'விறகு வெட்டிக்கு என்ன தெரியும்' என்று அலட்சியப்படுத்தவில்லை. விவரம் சொல்கிறான். விலாவாரியாகச் சொல்கிறான். நம்பிக்கையோடு பொறுப்பை ஒப்படைக்கிறான்.

அந்த வாரமே கொடியேற்றி விட்டார்கள். உலக சமாதானத்திற்கான நம்பிக்கை நட்சத்திரமாக, வெள்ளைக் கொடியில் சிவப்பு நட்சத்திரம். கிராமத்தின் ஏழை மக்களிடையே வந்துள்ள சாதீய பேதங்களை நீக்க முடியும், மக்கள் ஒற்றுமையை நிலைநாட்ட முடியும் என்கிற நம்பிக்கையின் சின்னம். காற்றில் சடசடத்து பறக்கிற கொடி.

சிந்தாமணி நடுத்தெருவில் டீக்கடையில் உட்கார்ந் திருந்தான். பரபரப்பாக இருந்தது, அந்தக் காலை நேரம்.

"சதி நடக்கு, சதி நடக்கு" என்று நாடார்களிடையே பதற்றமான பேச்சு.

நாலைந்து பேர்கள் கிணறுகளில் பம்ப்ஷெட் மோட் டார்களைக் காணோம். ரவ்வோடு ரவ்வாக கழற்றப்பட் டிருக்கின்றன. கழற்றி அகற்றப்பட்டிருக்கின்றன. எல்லா மோட்டார்களும் நாடார்கள் மோட்டார்.

ஐந்து மோட்டார்களைக் காணவில்லை. இது களவு. களவு மட்டுமல்ல, நட்டப்படுத்திப் பார்க்கிற வன்மம்.

நட்டப்படுத்துவதன் மூலம் வம்பு இழுக்கிற முயற்சி. சண்டையைத் தூண்டியிருக்கிற முயற்சி. மூர்க்கமான முயற்சி.

ஒரு மோட்டார் பத்தாயிரம் பெறும். பறிகொடுத்த விவசாயிகளின் விவசாயம் பாழாகும். பயிருக்கு நீர் இறைக்க முடியாது. ஒரு வருஷ வெள்ளாமையே நாசமாகும்.

இது யார் செய்த சதி? சதிக்குப் பின்னால் இருந்து கொண்டு மர்மப் புன்னகை செய்வது யார்?

நாடார்களின் இயல்பான மனநிலையில், தேவர்கள் மீதுதான் சந்தேகம் திரும்பியது. பகைமை உக்கிரமமாயிற்று. வெப்பம் அதிகரித்தது. எல்லார் மனசும் கொதித்தது. ஆள் ஆளுக்கு நெருப்புத் துண்டங்களாக வார்த்தைகளை எறிந்தனர்.

கோபமும் கொதிப்புமாக ஊரே குணம் மாற இந்த நிலைமை எங்கு போய் முடியுமோ என்ற பதைப்பில் சிந்தாமணி.

## 21

"அன்புள்ள சிந்தாமணி,

நலம். நலமறிய நாட்டம். உன் கடிதம் பார்த்தேன். உங்கள் ஊர் நிலவரம் பற்றி கலவரப்பட்டிருந்தாய். அஞ்சுவதால் மிஞ்சுகிற நன்மை எதுவுமில்லை. கலக்கமின்றி பிரச்சினைகளை எதிர்கொண்டு நிதானமாக அணுகு. சாதிச் சண்டைகள், இந்த நூற்றாண்டு நாகரீகத் துக்குச் சம்பந்தமற்ற வெட்கக்கேடு. சகோதரத்துவம்தான்,

தொழில் யுகத்தின் பண்பு. இதுவே மனித நேயமாக—சர்வதேச சமத்துவமாக பரிணாமம் கொள்ள வேண்டும்.

நம் நாட்டில்தான் காலத்துக்குப் பொருந்தாத பிற்போக்குத்தனமான கலவரங்கள், மனப் பிணக்குகள், சாதிபேதங்கள். நிலம் சார்ந்த சமூகத்தின் அத்தனை குணங்களும் அப்படியே நீடிப்பது, நமது துரதிருஷ்டம்.

இதுதான் நிலைமை. புலம்புவதால் புண்ணியமில்லை. வேல்சாமி, சுப்ரமணியை நன்கு பயன்படுத்து. நட்பு குன்றாமல் காப்பாற்று. பதற்றப்படாமல் துணிச்சலாக அணுகு. உன் தேசப்பற்றும், மனித நேயப் பண்பும் உன்னை மாவீரனாக மாற்றும்.

நீ சார்ந்திருக்கிற அரசியல் கட்சியையும், ஊர்ப் பிரச்சினையில் தலையிட வை. எப்படியேனும் மக்கள் ஒற்றுமையும், அமைதியும் மீண்டும் வாழ்வின் நிஜமாகட்டும்.

வாழ்த்துகளுடன்
**ராஜசேகர்**
சென்னை."

மாலை ஆறுமணிக்குத்தான் வண்டியை வேறொரு டிரைவரிடம் ஒப்படைத்துவிட்டு, ஊருக்கு வருகிற பஸ்ஸில் வந்தான். வீடு வந்தவுடன் காக்கிச் சட்டையைக் கழற்றினான்.

அம்மாதான் சொன்னாள்.

"சிந்து, ஒனக்கு ஒரு காயிதம் வந்துருக்குடா."

"கொண்டாம்மா..."

வாங்கினான். இன்லெண்ட் லட்டர். ஒழுங்காகப் பிரித்தான். ராஜசேகர் சாரின் கடிதம். இவனுக்கு ட்ரெயினிங் ஆபிஸராக இருந்தவர். திருமங்கலத்துக்காரர்.

ஓய்வு பெற்று வந்துவிட்டார். சென்னையில் வீடு கட்டியிருக்கிறார். ஏதோ ஒரு சின்ன நிறுவனத்தை நடத்தி வருகிறார். அவருடன் தொடர்ந்து கடிதத் தொடர்பு வைத்திருக்கிறான்.

இவனது முதல் ஆசான். உலகத்தை— வாழ்க்கையை— காட்டும் சாளரமாக இருந்தவர். இவனுக்கே இவனை உணர்த்தியவர். இவனது ஊர் மக்கள் அசல் சுபாவத்தை உணர்த்தியவர். அற்புதமான மனிதர்.

கடிதத்தை வாசித்து முடித்தான். அவனுள் ஆழ்ந்த பெருமூச்சு.

காக்கி பேண்ட்டை கழற்றினான். கைலியைக் கட்டிக் கொண்டான். தொட்டித் தண்ணீரை அள்ளி கால், கை, முகம், நெஞ்சு எல்லாம் கழுவித் துடைத்துக் கொண்டான்.

சுப்ரமணியைத் தேடிப் புறப்பட்டான். மோட்டார் களவுக்குப் பிறகு என்ன நிலவரம்? அறியணும்.

“ஏண்டா சிந்து.”

“என்னம்மா...”

“சாப்பிட்டுட்டுப் போயேன்.”

“இந்தா... வந்துருதேன்ம்மா...”

முற்றத்துக்கு வந்தான். தேடிப்போன மூலிகை காலடியில் கிடந்ததைப் போல சுப்பிரமணி வந்தான்.

“என்னப்பா விசேஷம்...?”

“நேத்து எங்க சாதிக் கூட்டம் போட்டாக.”

“ம்.”

“மோட்டார் களவு சம்பந்தமாக ரொம்பக் கவலையா யோசனை பண்ணுனாக.”

"ம்."

"அதுலே வலுவா ஒரு விஷயம் வந்துச்சு."

"என்ன விஷயம்?"

"எங்க சாதியிலே எவனுக்கும் ஸ்பேனர் பிடிக்கக்கூடத் தெரியாது. கரண்டு சம்பந்தமா ஒன்னும் தெரியாது. அதனாலே எவனும் இம்புட்டுப் பெரிய காரியங்களை பண்ணியிருக்க முடியாது."

"ம்."

"நாடாக்கமார், தேவமாருக்கு இடையிலே வந்துருக்குற பகையை— வெறுப்பை— முறுக்கேத்தி மும்முரப்படுத்தற கெட்ட எண்ணத்துலே, எவனோ செய்ஞ்சிருக்கணும். மோட்டார் பம்ப்ஷெட், கரண்டு விஷயங்கள்லே கரை கண்ட எலெக்டிரீஷியன்க நாலு பேரும், நாடாக்கமாரு தான்."

"அப்படியுமிருக்கலாம். அதுக்கும் ஞாயமிருக்கு."

"பகையை முறுக்கேத்தி விடுறதுலே யாருக்கு என்ன லாபம்?"

"லாபமில்லாம இருக்காது. சோளியன் குடுமி சும்மா ஆடாது."

"ம்."

"இது எங்க போய் முடியப் போவுதோ..." என்ற கவலையில் வருத்தப் பெருமூச்சு விட்டான். சட்டென்று சுதாரித்த சிந்தாமணி புதுமலர்ச்சியோடு சொன்னான்.

"நம்ம ஆபிஸர் தேவர்கிட்டேயிருந்து காகிதம் வந்துருக்கு."

"அப்படியா?"

"கொண்டா... கொண்டா."

அவனுக்குள்ளும் ஆவல் பரபரப்பு.

நல்லையா நாடாரும், இன்னும் சிலரும் பக்கத்து டவுனில் இருந்த காவல் நிலையம் போயிருந்தார்கள். அங்கும் அவர்களுக்குக் கசப்பான அனுபவங்கள்தான்.

மோட்டார் களவு போன விஷயத்தை புகாராக எழுதி ஊர் சார்பாக— அதாவது சாதி உறவின் முறை— சார்பில் நீட்டினார்.

இன்ஸ்பெக்டர் பார்த்துவிட்டு முதலிலேயே முகத்தைச் சுளித்தார்.

“மோட்டார் யாருக்குச் சொந்மோ அவங்கதா, தனித்தனியா புகார் தரணும். அதான் முறை. சாதிச் சண்டை போடுற ஆசையிருந்தா இப்படி எழுதலாம். ஆனா, நாங்க இந்தப் புகாரை எடுத்துக்க மாட்டோம்” என்றார்.

நல்லையாவுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. உள்ளூர் பிரமுகர்கள் மத்தியில் தான் முட்டாளாகிறோமே என்கிற தர்மசங்கடம்.

அப்புறம் மொத்தமாக நிலவரத்தை விசாரித்தார், இன்ஸ்பெக்டர். கதை போட்ட மாதிரி இவர் விளக்க, இன்ஸ்பெக்டர் எரிச்சலை அடக்கிக்கொண்டு சமாளிக்கிற நிலையில்.

நல்லையாவுக்கு அடிவயிறு கலங்கியது.

“உங்களுக்கு யார் மேலே சந்தேகம்?”

“தேவமார் மேலேதான். அவுகளைத் தவிர வேற யாரும் செய்ய ஞாயமில்லே.”

“மொத்தமா சொன்னா எப்படி? குறிப்பிட்டு ‘இன்னார், இன்னார்’னு சொல்லணும்.”

"அப்படிச் சொல்ல முடியாது."

"சாதியடிப்படையிலே புகார். சாதியடிப்படையிலே சந்தேகம். இதெல்லாம் சாதிச் சண்டையை மூட்டணும்னு ஆசைப்படுறவங்க செய்ற முறைகள். இப்பச் சொல்றேன், கேட்டுக்கங்க. விவகாரம் ரொம்பச் சிக்கலாகாமப் பாத்துக்கங்க. முடிஞ்சளவுக்கு நிதானமாப் போங்க. அடி தடி, வம்பு வழக்கு, மல்லுக்கட்டு கில்லுக்கட்டுன்னு வந்துச்சுன்னா, நாங்க பாத்துக்கிட்டு சும்மாயிருக்க மாட்டோம். ரெண்டு சைடுலேயும் அம்பது அம்பது பேரை கேஸ்லே சேத்து, வலுவான செக்ஷன்லே மாட்டி விட்டுருவேன். அப்புறம், கோர்ட்டுக்கு அலைஞ்சே, உங்க ஊரு நாசமாய் போயிரும். பாத்துக்கங்க."

நல்லையாவுக்குள் புளியைக் கரைத்துக் குடித்த மாதிரி யிருந்தது. அவருக்கு படபடப்பாக வந்தது. வியர்த்துக் கொட்டியது. சத்தத்தை உயர்த்தாமல் சொன்னாலும், இன்ஸ்பெக்டரின் மிரட்டலின் முழுமையை உணர்ந்தார்.

அதைவிடப் பயங்கரம் என்னவென்றால் 'சாதிச் சண்டையை மூட்டுறதே நீங்கதான்' என்கிற கோபமான குற்றச்சாட்டையும் மறைமுகமாகச் சொல்லியிருக்கிறார்.

புகார் கொடுக்காமலேயே திரும்பி வந்தார்கள். அவர்களுக்குள் ஊமைக் கோபம். ரகசியமாக அவமதிக் கப்பட்ட ஆத்திரம். கோபம் கோபமாக பேசிக்கொண் டார்கள்.

"நம்ம சாதிப் பயல்களே நமக்குக் குழிவெட்டுறாங்க. அப்புறம் நம்மளை எவன் மதிப்பான்?"

"வெளியே இருக்கிற விரோதியைவிட, உள்ளே இருக்குற துரோகிக ஆபத்தானவங்க."

“நெசந்தா... இவங்களைத் தண்டிக்கிற தண்டனை யிலேயே வெளியே இருக்குற எதிரிக, அலறிக்கிட்டு ஓடி ஒளியணும்.”

“ஆமா, இதுலே தாட்சண்யமே காட்டக்கூடாது. அவரு எவ்வளவு பெரிய கொம்பனாயிருந்தாலும் சரி. ஊர்க் கூட்டத்துலே நிறுத்தி, தண்டிச்சேயாகணும்.”

“ஊர் முடிவை மீறி தர்ம ஞாயம் பேசி ஊடு கலைப்பு வேலை செய்றவங்க ரெக்கையை, மொதல்லே முறிச்சுப் போடணும்.”

அவர்கள் எல்லோரும் குறிவைத்துப் பாய்வது, தாழையாதான் என்பது நல்லையாவுக்குப் புரிந்தது. இவருக்கும் தாழையாவைப் பிடிக்கவில்லை. மனச்சாட்சி மாதிரி நின்றுகொண்டு தொல்லை கொடுக்கிறார். ஆனால் எப்படித் தண்டிப்பது?

ஊருக்கே வழிகாட்டிய சங்கரலிங்கம் மகன். எல்லாச் சாதி மக்களிடமும் நல்லபெயர் சம்பாதித்து வைத்திருக்கிற தரகர். வாயடி. நிஜமாகவே விவசாயிகளுக்கு நிறைய உதவிகள் செய்திருப்பவர். ‘அண்ணன் தம்பிககூட இப்படி உறுத்தா (அக்கறையா) உதவி செய்வாகளா? நீரு தங்கமான மனுசனய்யா’ என்று ஊரே சொல்கிறது.

அவரைத் தண்டிக்கப் போய், சாதி சனம் பூராவும் எதிர்த்துவிட்டால்...?

நல்லையா கதி?

இதுதான். இவருக்குள் இருந்துவந்த நடுக்கம். இப்போதும் இதேதான் தயக்கம்.

தேர்தலுக்குப் பத்து நாட்களுக்கு முன்பு—

பக்கத்துக் கிராமத்து மக்களிடம் வாக்குச் சேகரிக்க நல்லையாவும், கார்மேகமும், இன்னும் சிலரும் கிளம்பிக்

கொண்டிருந்தனர். அந்தப் பக்கமாக தாழையா போய்க் கொண்டிருந்தார்.

"ஏய் மாப்ளே. இங்க வா."

"என்ன மாமா...?"

நல்லையாவும் தாழையாவும் தனித்துப் போனார்கள்.

"வாரீயா...?"

"இல்லே மாமா..."

"ஏன்?"

"எனக்குச் சம்மதமில்லைன்னு அன்னிக்கே உங்க கிட்டேச் சொன்னேன்லே?"

"இன்னைக்கு ஊர் முடிவா ஆகிப்போச்சுல்லே?"

"ஆக்கிட்டீக. பாவம், நம்ம சாதியாளுக அப்பாவிக. நீங்க ஏத்திவிட்ட சாதிப் போதையிலே, கண்ணு மூக்குத் தெரியாம ஆடுதாக."

"நா ஏத்திவிட்ட போதையா? சங்கையா மாதிரிப்பட்ட ஆளை ஆதரிக்கணும்ங்கீயா? முத்துலட்சுமி கதையை மறந்துட்டீயா? இப்படிப்பட்ட ஆளை பிரசிடெண்டா ஆக்குனா, ஊரோட கதி என்னாகும்னு யோசிச்சுப் பாத்தீயா?"

"தாயா புள்ளையா பழகிக்கிட்டிருக்குற தேவமாருக்கு வஞ்சகமா துரோகம் பண்ணி, பேசுன ஒப்பந்தத்தை மீறி, பகையை உண்டாக்கி ஊரையே நாசக்காடு பண்ணி..நீங்க ஆதரிக்கிற கார்மேகம் எப்படிப்பட்ட ஆளு? யோக்கியமா? கனியம்மா கதை தெரியாதா ஒங்களுக்கு? யாரை ஏமாத்துறீக, மாமா? உங்களை மாதிரி நாட்டாமை, இப்படிக் காரியம் செய்யலாமா?"

"கோபப்படாதே மாப்ளே, அனுசரிச்சுப் போ."

“எதை அனுசரிக்க? பகையை உண்டாக்குறதையா? ஊரையே சண்டைக் காடாக்குறதையா? சாதிக்குச் சாதி பகையாக்கி, ஒத்துமையை நாசம் பண்றதையா? நா தரகன் மாமா. எனக்கு எல்லாச் சாதி சம்சாரிகளும் வேணும். ஆடு மாடு வளர்க்குற எல்லாச் சாதிக் கூலி ஜனமும் எனக்கு வேணும். எந்தொழிலுக்கு எவரையும் பகைச்சுக் கிடக் கூடாது. பகைச்சிக்கிடறது, ஊருக்கும் நல்லதுல்லே.”

“அப்ப என்ன செய்யப் போற மாப்ளே? சாதிக் கூட்டத்துலே எடுத்த முடிவுக்கு, எதுர்த்து நிக்கப் போறீயா? ஊரைப் பகைச்சிக்கிடப் போறீயா?”

“சாமர்த்தியமாகப் பேசாதீக மாமா. ஏங்கிட்டேயே உங்க திறமையைக் காட்டாதீக. மூவாயிரம் கதை தெரியும். யூரியா உப்பு மூடை வந்த கதை தெரியும். இந்தப் பிச்சைக் காசுக்காக, ‘கோக்கு மாக்கு’ வேலைக செய்ஞ்சு, மொத்த ஊரையே நாசம் பண்ற சூட்சுமமும் தெரியும். ஏங்கிட்டே உங்க வேலையைக் காட்டாதீக...”

“இப்ப என்ன சொல்றே, நீ?”

“எம்போக்குலே என்னை விட்டுருங்க. எல்லாச் சாதி சனமும் எனக்கு அண்ணன் தம்பிக. தாய் புள்ளைக. இவுக ஒத்துமை கலைய விடமாட்டேன். சண்டை சச்சரவு நடக்கவிட மாட்டேன். என்னோட உசுரைக் குடுத்தாச்சும், ஊரு சன ஒத்துமையைக் காப்பாத்துவேன்.”

“எப்படி?”

“எங்க அய்யா ராவுத்தமார் கூடவே ஒறவுமொறை வைச்சுக் கிட்டவரு. ஊரு பூராவையும் அப்படி ஆக்குன வரு. நா... நம்ம ஊரு சனத்தையாச்சும் பகையாக்கிடாம காப்பாத்த வேண்டாமா?”

"இது நல்லதுல்லே ஒனக்கு?"

"எது நல்லதுன்னு எனக்குத் தெரியும். நீங்க உங்க ஜோலியைப் பாருங்க."

'பட்பட்'டென்று அவர் சீறி வெடித்த விதம்— தாட்சண்யம் பார்க்காமல் நியாயம் பேசிய அவரது தீவிரம்— ரகசியங்களை முகத்துக்கு நேராகப் போட்டு உடைத்த வேகம்—

நல்லையாவுக்குள் ஏகப்பட்ட யோசனைகள். நடுக்கம். தயக்கம். நாளைக்கு...?

சாதிக் கூட்டத்திலேயும் இதே மாதிரி போட்டு உடைத்தால்...? முகங்களைக் கிழித்தால்? தாழையாவின் நியாயம் எடுபட்டு விட்டால்?

முகத்தை எங்கே கொண்டு போய் வைக்க? கேவலத்தை எப்படித் தாங்க?

என்ன ஆனாலும் சரி. சாதிக் கூட்டத்துக்கு தாழையாவை வரவிடாமல் பண்ணனும்?

அதுக்கு வழி?

கேள்விகள் நூல் நூலாகப் பின்னிக் கொள்ள, ஒரு வலையாக உருமாற, அதற்குள் வகையாக சிக்கிக் கொண்டார், தாழையா.

## 22

செம்பகம் படுக்க முடியாமல் தத்தளித்தாள். குடலைச் சுருட்டிக்கொண்டு வருகிற இருமல். விடாமல் தொடர்கிற சங்கிலி இருமல்கள். அவளைச் சுருட்டிக் கசக்கிப் போடுகிற மாதிரியான தொடர் இருமல்.

துப்பக்கூட முடியவில்லை. நாடியில் வழிகிற சளி. தாழையா அவளை நெஞ்சில் சாய்த்துப் போட்டுக் கொண்டார். ஒரு துணியால் சளியைத் துடைத்தார். பனங்கற்கண்டு, சித்தரத்தை போட்டு கொதிக்க வைத்த கசாயத்தை ஆற்றிக்கொண்டு வந்தாள், பொற்கொடி. அம்மாவின் வாயில் கிளாஸை வைத்துக் குடிக்க வைத்தாள்.

தாழையா தொண்டையை நீவிவிட்டார்.

இருமி முடித்த செம்பகத்திற்கு 'கேது, கேது' என்று இளைத்துக்கொண்டு வந்தது. நெஞ்சுக் கூட்டுக்குள் 'கலகல, கலகல'வென்ற இரைச்சல். திணறுகிற சுவாசம். 'திக் திக்'கென்று அடித்துக்கொள்கிற மார்பு.

"படுத்துக்குறீயா?"

"ம்."

தலையணையை ஒழுங்குபடுத்தி மெல்லப் படுக்க வைத்தார். தாழையா முகம் இறுகிப் போயிருந்தது. நாலைந்து நாட்களாகவே அவர் முகத்தில் உயிர்க்களை யில்லை. ரொம்பத் துவண்டு போயிருந்தார்.

கட்டில் சட்டத்தில் உட்கார்ந்துகொண்டு மனைவி முகத்தைப் பார்த்தார். மனசின் கவலைகள் முகத்தில் இருளாகப் படிந்திருந்தது. வருத்த இறுக்கத்தில் உறைந்துபோய்... யோசனையில் மீசையை நீவிவிட்டு முறுக்கிக் கொண்டார். கண்களில் தேங்கி நின்ற சோகம்.

கல்யாணமான புதிதில் குளித்து மொழுகி சேலை கட்டி வந்துவிட்டால் 'கம்ம்'மென்று மணக்கும். மஞ்சளும், சீயக்காயும் கலந்த நறுமணம். மனசை மயக்குகிற வாசம். ஆள், தங்க நிறத்தில் குழைந்து போய் தகதகப்பாள். பக்கத்தில் உரசிக்கொண்டு வந்து நின்றால் உயிரே கிடந்து துடிக்கும்.

உழைப்பில் ராஜாளி. உறக்கம் பார்க்காமல் உழைப் பாள். வீட்டுக் கஷ்டம் இவர் கண்ணில் பட்டுவிடக் கூடாதே என்று பறந்து பறந்து பாடுபடுவாள். ஓங்கு தாங்கான திரேகம். உரம் வாய்ந்த மனசு. புருஷன் மேல் கொள்ளைப் பாசம்.

‘உஸ்ஸ்’ஸென்று அயற்சிப் படாமல் உழைப்பாள். அப்பேற்பட்ட வைரம் பாய்ந்த கட்டை.

இன்றைக்கு உட்காரக்கூட ஜீவனில்லாமல் கிடக் கிறாள். நனைந்த காகிதமாகத் துவண்டுபோய் நைந்து கிடக்கிறாள். இருமச் சத்து இல்லாமல், ஓடிக்களைத்த நாயாக இளைத்துக் கிடக்கிறாள்.

அவருக்குள் பழைய இளைய செம்பகமும், இன்றைய நோயாளிச் செம்பகமும், ரெண்டுமே பொருந்தி வராத சித்திரங்கள். ‘அவள்தானா இவள்’ என்று நம்பவே முடியவில்லை. நம்பித் தீரவேண்டிய நிர்ப்பந்தத்தில் மாட்டிக் கொள்கிறபோது, மனசின் வேர்வரை பற்றிக் கொள்கிற நெருப்பு. பகீர் என்கிற சோகம்.

இந்த நாலைந்து நாட்களாக ரொம்ப மோசமாகத் தளர்கிறாள். விடாத இருமல். மாத்திரைகளை பொருட் படுத்தாமல் முற்றுகையிட்டு நெறுக்குகிற நோயின் உக்கிரம். சீக்கின் பேயாட்டம்.

“என்ன உக்காந்துட்டீக...?”

“சும்மாதா...”

“ஏன் ரொம்பச் சங்கடப்படுதீக? எனக்கு ஒன்னும் செய்யாது.”

“இல்லே, ஒனக்கு ரொம்பச் சொகமில்லே. தாங்க முடியாம தவிக்குறே.”

“எல்லாம் மனசுதான் காரணம்.”

"மனசுலே என்ன கவலை ஒனக்கு?"

"உங்க முகத்துலே உசுர் இல்லை. என்னமோ மாதிரி யிருக்கீக?"

"என்ன மாதிரி?"

"எதையோ நெனைச்சுப் பயப்படுறீக. நீங்க தலை யிட்டுத் தீராத வெவகாரமில்லே. முடியாத ஏவாரமில்லே. தொட்டதெல்லாம் ஜெயம். அப்பேர்ப்பட்ட நீங்க எதுக்கோ பயப்படுறீகன்னா.,, நெலைமை ரொம்ப மோசம்ந்தா."

"நெசந்தா... ஊர் நெலவரம் சரியில்லே, செம்பு."

"ஊரைப்பத்தி எதுக்கு ரொம்பக் கவலைப்படுதீக?"

"ஊரை வைச்சுத்தானே நம்ம தொழில், பிழைப்பு எல்லாம்? ஊரு ரெண்டு பட்டா, கூத்தாடிக்கு வேணு மின்னா கொண்டாட்டமாயிருக்கலாம். நமக்குத் திண் டாட்டந்தானே?"

"அப்படியா?"

"ஆமா செம்பு... ஊர்லேயிருக்குற எல்லாச் சாதி சனத்தோட சப்போர்ட்டு இருந்தாத்தானே, நம்ம தரகுத் தொழிலு நடக்கும்? வெறுப்பும் விரோதமுமா சாதிக்குச் சாதி முகத்தை வெறைச்சுக்கிட்டிருந்தா, யாருகிட்டே போய், தொழில் பண்றது? அது மட்டுமில்லே..."

"ம்..."

"ஊரு இப்படிக் கிழிஞ்சு துண்டு துண்டா போறதைப் பாக்க மனசு தாங்கலே. நல்லாயிருந்த நீ, இப்படிக் கிழிஞ்சு கிடக்குறதைப் பாத்தா... எம்மனசு எப்படிச் சங்கடப் படுதோ... அதே மாதிரித்தான், ஊரைப் பாக்குறப்பவும்."

"மனசு சங்கடப்பட்டு ஆகப்போறது என்ன?"

"அப்படியில்லே, செம்பு."

"ஏதாச்சும் செய்ய முடியுமா?"

"கவலைப்பட்டாத்தான் யோசனை வரும். யோசிச்சாத் தான் ஏதாச்சும் செய்ய வழி கெடைக்கும்."

"சரி. எதுக்குப் பயப்படுறீக?"

"பயமாத்தான் இருக்கு. நமக்கே ஏதாச்சும் தும்பம் வருமோன்னு நெனைக்கேன்."

"எதுக்கு?"

"நம்ம ஆசையிலே மண்ணு விழுமோன்னு பயப் படுதேன், செம்பு. நம்ம புள்ளைக 'ஊரை விட்டு வந்துருங்க'ன்னு கூப்புட்டப்பவெல்லாம், 'இந்த ஒடம்பு இந்த மண்ணுக்குத்தான்'னு வைராக்கியமா சவடால் பேச்சுப் பேசினோம். இந்த ஊர்லேயிருக்குற எல்லாச் சாதிசனமும் 'என்னைச் செல்லப் புள்ளையா நெனைச்சுக் கொண்டாடும்'னு பெருமை பெருமையா பீத்திக்கிட் டோம்."

"ஆமா, அதுக்கென்ன இப்ப?"

"அந்த நெனைப்புலேதா, 'மண்ணு வுழப் போகு தோ'ன்னு பயமாயிருக்கு. இந்த ஊர்லேயே நாம நாதி யத்துப் போவம்னு நடுக்கமாயிருக்கு."

பொற்கொடி வந்தாள்.

"அய்யா..."

"என்னம்மா..."

"சிந்தாமணி மாமா இருக்குற வரைக்கும் உங்களுக்கு அந்தக் கதி வராதுய்யா."

"என்னம்மா சொல்லுதே...?"

"சிந்தாமணி மாமா ஒத்தையாளா இல்லே. ஒரு கூட்டத்தோட இருக்காரு.

அந்தக் கூட்டமும் சாதாரணக் கூட்டமில்லே. நாடு முழுக்க நல்ல ஆளுக ஆதரவு அதுக்கு இருக்கு."

"ம்... சிந்தாமணி நல்ல பையன்தான்— இருந்தாலும், அவன் பலத்துலே நாம நிக்க வேண்டிய நெலைமை வர்றதே... நமக்கு அவமானந்தானே?"

"அவரு யாரு...? உங்க அக்கா மகன்தானே?"

"ம்... ஓங்கிட்டே என்னமும் சொல்லியிருக்கானா?"

மீசையில் கை விளையாட, ஓர் ஆழ்ந்த பார்வையாக மகளைப் பார்த்தார். தனக்குத் தெரியாமல் தனது காலடியில் எதோ நடந்து கொண்டிருப்பதாக புதிய எண்ணம். ஒரு கூர்மையான சந்தேகம்.

அதை அவளது உள்ளுணர்வும் புரிந்துகொண்டது. மனசுக்குள் நாக்கைக் கடித்தாள். அதிகமாக வாய்விட்டு விட்டோமே என்ற சுயவிமர்சனம். அய்யாவுக்குத் தைர்யம் சொல்கிற ஆர்வக் கோளாறில், வார்த்தைகளை ரொம்பச் செலவழித்து விட்டோமோ...

பொற்கொடி தடுமாறினாள். அங்கும் இங்குமாக அலைபாய்கிற கண்கள்.

"என்னம்மா...?"

"ஒன்னும் சொல்லலை."

"இல்லே. ஏதோ சொல்லியிருக்கான்."

"ம்..."

"என்ன?"

"பயப்பட வேண்டாம்னு தைர்யம் சொன்னாரு."

“ம். சொல்லும்மா... உள்ளதைச் சொல்லும்மா...”

“என்னை நெனைச்சு நீங்க ஒன்னும் கவலைப்பட வேண்டாம்னாரு.”

அந்த ஒரு வாக்கியத்திலேயே, அவருக்குள் விரிந்து விளங்கிப் போன ஏராளமான விஷயங்கள். ஒன்றிணைய அலைபாய்கிற இரு மனசுகள். அடுத்த தலைமுறையின் புதிய தளிர்ச் சிந்தனைகள்.

“சரி. நீ போய் வேலையைப் பாரு.”

பொற்கொடி போய்விட்டாள். உள்ளுக்குள் பயப் படபடப்பு. ‘அப்பா என்ன நினைக்கிறாரோ’ என்கிற அச்சம். அச்சுறுத்துகிற நினைவுகளின் முற்றுகையை உடைத்துக்கொண்டு, ஒரு புதிய ஒளிக் கீற்றாக ஒரு தெளிவு.

“அய்யா... எதிர்மறையா எதுவும் சொல்லலை.”

தாழையாவுக்குள்ளும் அதேபோல் ஒரு தெளிவு. ஓர் ஒளிக்கீற்று. ஒரு திடமான நம்பிக்கை. “ஊர் நெலவரம் என்ன ஆனாலும் சரி. என்ன குழப்பம் வந்தாலும் சரி. மகளைப் பத்தின கவலையில்லே. சிந்தாமணி பாத்துக்கு வான்.”

இந்த ஒளிக்கீற்றை விழுங்கிவிட்டு, பைசாசமாக நெருங்குகிற அவமான இருட்டு.

‘ஊர்லே மதிப்பும் மரியாதையுமா ஜேஜேன்னு இருந்த நம்ம குடும்பத்துக்கு, ஏழு தலைமுறைக்குக் கழுவினாலும் தீராத களங்கம் வரப் போகுது. இழிவும் கேவலமும் வரப் போகுது.”

கற்றையாக அவருக்குள் நினைவுகள். கறுப்பான நினைவுகள். பயங்கரக் கற்பனைகள். அவருள் மின்சாரமாக ஓடிப் பரவி, அதிர்ந்து நடுக்குகிற நினைவுகள்.

சாதிக் கூட்டத்துக்குப் போகிற பரபரப்பில் நல்லையா நாடார்.

"சீக்கிரமா சோத்தை வை."

"எங்க பறந்துகிட்டிருக்கீக?"

"ஊர்க் கூட்டத்துக்குப் போகணும்லே?"

தட்டிலை வைத்தாள், தங்கம்மா. சோறு போட்டு குழம்பை ஊற்றினாள். மேல் துண்டை கீழே போட்டு உட்கார்ந்தார். இவரது பரபரப்பு பிடிக்காமல், முகம் சுளிக்கிற தங்கம்மா.

"என்ன, மூஞ்சியைத் தூக்கி வைச்சுக்கிட்டிருக்கே?"

"ஆமா... நாட்டாமை, பெரிய நாட்டாமை! என்ன பாவம் பண்ணி, யாருக்கு நாசம் செய்ஞ்சீகளோ... நம்ம வீடு வெளங்கலே. காடு கரை ஏறெடுத்துப் பாக்க மாட்டேங்குது. போட்ட துட்டுகூட வெளைஞ்சு வீடு வரமாட்டேங்குது. ஒன்னுக்குமத்த சின்னப் பயகிட்டே யெல்லாம், கைமாத்தும் கால்மாத்தும் வாங்கி நாளைக் கழிக்க வேண்டியிருக்கு."

"இப்ப என்ன ஒனக்கு? ஓரே புலப்பமா புலம்புதே."

"வாயடியண்ணாச்சி தர்மராசா. எல்லாரும் நல்லா யிருக்கணும்னு ஆசைப்பட்டவரு. அவராலே ஏண்ட (இயன்ற) ஒத்தாசையெல்லாம் ஊர்சனத்துக்குச் செய்துருக்காரு."

"இப்ப என்ன அவனைப் பத்தி?"

"அந்த அண்ணாச்சிக்கு மனசாலேகூட தீங்கு நெனைச்சுராதீக. ஊர்க்கூட்டத்துலே ஏடாகூடமா எதுவும் பண்ணித் தொலைச்சிராதீக."

"ம்."

"அந்தப் பாவத்தைத் தாங்க நம்ம குடும்பத்துக்கு சக்தி இல்லே."

அள்ளிய கவளம் கையிலிருக்க, கோபத்துடன் 'விருட்' டென்று நிமிர்ந்தார், நல்லையா. அவர் கண்கள் இடுங்கின. கன்னச் சதையில் கோபத் துடிப்பு.

"வீட்டுக்குள்ளே கெடக்குற பொட்டை நாய்க்கெல் லாம், எதுக்கு இந்த மணியம்? ஊர்லே என்ன செய்யணும்னு, எங்களுக்குத் தெரியாது?"

"உங்களுக்கு என்ன தெரியும்? மூவாயிர ரூவாய்க்கும், யூரியா உப்புக்கும் நீங்க என்னென்ன கோல்மால் வேலையெல்லாம் செய்ஞ்சீகன்னு எனக்குத்தானே தெரியும்? ஊர்லே எவனுக்குத் தெரியும்?"

"போய்ச் சொல்லேன், தெருத் தெருவா."

"சொன்னா என்னாகும்? உங்க பேச்சை கேட்டுக் கிட்டு, கிறுக்காட்டம் போட்டுக்கிட்டிருக்குற அப்புராணி நாடாக்கமார் எல்லாம் உங்க மூஞ்சியிலே காறித் துப்பு வாக."

"வாயை மூடுடி நாயே..." என்று சீறியவர், கையாலா காத கோபத்தில், குமைச்சலில் உறுமினார். சோற்றுக் கையை உதறினார்.

"ச்சேய்!" என்ற அலறலோடு எழுந்தார்.

"இந்த நச்சரிப்புலே மனுசப்பய சாப்புட முடியுமா...?" என்று துண்டை உதறி தோளில் போட்டுக்கொண்டு கைகழுவ வெளியேறிவிட்டார்.

கட்டுப்படுத்த முடியாத ஆத்திரம், அவருக்குள் உலை பானைச் சோறாகக் கொதித்தது. 'பொண்டாட்டிகூட

நம்மளை உப்புக் கல்லுக்கு மதிக்க மாட்டேன் என்கிறாளே' என்கிற ஆத்திரம்.

தாழையாவால் வந்த பலவீனம், இது. ஊருக்குள் அவன் தருமராசா. நா என்ன துரியோதனனா? வரட்டும். ஊர்க்கூட்டத்துலே வைச்சுக்கிடுவோம் கதையை.

ஆத்திர நினைவுகள் அவரைத் துரத்தின.

ஊர்க்கூட்டம், மடத்தில். நாடார் சாதிக்கூட்டம். 'ஜே, ஜே' என்று கிடந்தது. மோட்டார்களைப் பறி கொடுத்த ஆத்திரம். நூற்றியம்பது தலைக்கட்டுகள் உள்ள நாடார்களிடம் வந்து, மோட்டார்களைக் கழற்றிக்கொண்டு போவதென்றால் எம்புட்டுத் திமிர் இருக்கணும்? நம்மளை எம்புட்டு அலட்சியமா நெனைச்சுட்டாக? கால்லே ஒட்டுன தூசியா— கோழைப் பயல்களா நெனைச்சுருக் கணும்?

வுடக்கூடாது. இதை இப்படியே வுட்டுடக் கூடாது. ஏதாச்சும் செய்யணும். பார்க்கிறவன் அரள்ற மாதிரி, ஏதாச்சும் செய்யணும்.

குமுறுகிற உணர்வுகள். வெறிகொண்ட மனசுகளின் திணவு.

நல்லையாவுக்கு இதுதான் வேண்டும். புகுந்து விளையாட இப்படிப்பட்ட உணர்வுத் தளம்தான் வேண்டும்.

ரொம்ப நேரமாகப் பேசினார். ஆத்திரமூட்டும்படிப் பேசினார்:

"நூத்தியம்பது தலைக்கட்டுள்ள நம்ம சாதிக்காரனுக்கு வுழுந்த ஓட்டுகளைவிட, எழுபது வீடுகள் உள்ள தேவமாருக்கு எப்படி ஓட்டு கூடுச்சு? நம்ம விரோதிகளை

விட, துரோகிகதான் ஆபத்தானவங்க. துரோகியை அடிக்கிற அடியிலே, விரோதிக கலைஞ்சு பயந்து ஓடணும்" என்று பயங்கரமாகக் கத்தியைத் தீட்டினார்.

கடைசியில்,

இப்படி முடிவாயிற்று.

"நம்ம சாதிக்காரங்க நிலத்தை நம்புன கூலிக்காரங் களான அரிஜன மக்களோட இனி எந்தத் தொடர்பும் வைச்சுக்கிடறதுல்லே.

பூ கட்டுறவங்க, தேர் கட்டுறவங்க, குழி வெட்டுறவங்க, இழவு சொல்லிப் போறவங்க, இவங்களையும் ஒதுக்கி வைக்கிறது.

நாவிதரை நீக்கிட்டு, புது நாவிதரை கொண்டு வர்றது.

தேவமார்களோட எந்தப் பேச்சு வார்த்தையோ, பழக்கவழக்கமோ, தொடர்போ வைச்சுக்கிடறதுல்லே.

இத்தனை முடிவுகளையும் ஒப்புக்கொள்ளாத நாடார் கள் யாரையும் சாதிக் கூட்டத்துலே வைச்சுக்கிடறதுல்லே. குறிப்பாக தாழையா நாடார். இந்த முடிவுகளை அவர் எதிர்த்தால்... அவரை ஊரைவிட்டு 'தள்ளி' வைப்பது."

இந்த முடிவுகளில் எல்லோருக்கும் உடன்பாடுதான், தாழையா விஷயம் தவிர.

தாழையா என்றவுடன் நாடார்களில் பலர் தடு மாறினர். தத்தளித்தனர். மாற்றுக் கருத்துகள் முணு முணுப்புகளாக... சலசலப்புகளாக வெடித்தன.

நல்லையா நாடார் ரொம்ப நேரம் 'கத்தி'யைத் தீட்டினார். கல் மாவைப் போட்டு 'சர்சர்'ரென்று தீட்டி னார். ஆத்ம பலம் முழுவதையும் செலவழிக்க வேண்டி யிருந்தது.

கடைசியாக அரை மனசாக ஒப்புக்கொண்டனர்.

தாழையா நாடார் வரவழைக்கப்பட்டார். விசாரிக்கப் பட்டார். இப்படித்தான் நடக்கும் என்று அவரும் எதிர்பார்த்ததால், அதிக வார்த்தைகளை செலவழிக்க வில்லை. கனத்த மனசோடு சுருக்கமாகப் பேசினார்.

“இதை நா ஒப்புக்கொள்ளலை. இது நாடாக்கமாருக்கே நல்லதுல்லே. சகிப்புத்தன்மைதான் மனுச வாழ்க்கை. தப்பு செய்த நாம மத்தவுகளை தண்டிக்குறது, ரொம்ப அநியாயம். மனுச மக்களை சாதியா பிரிக்கிறதே தப்பு. பேதம் பார்க்கிறதே தப்பு. இதுலே பகையை வளர்க்குறது, ரொம்ப ரொம்பத் தப்பு. இது ஊருக்கும் நல்லதுல்லே. நமக்கும் நல்லதுல்லே. அதனாலே இந்த முடிவை நா ஒப்புக்கொள்ள முடியாது.”

என்று சொல்லிவிட்டு மறுபேச்சில்லாமல் மடத்தை விட்டு வெளியேறிவிட்டார்.

சாதியை விட்டு ‘தள்ளி’ வைக்கப்பட்டிருக்கிற பயங்கர நிஜத்தை எதிர்கொள்ளும் மனத்தெம்பு இல்லை, அவருக்கு.

கால் கையெல்லாம் நடுங்கிற்று. மனசு கிடந்து பதறிப் பதைத்தது. தள்ளி வைக்கப்பட்டு ‘ஒற்றையாளாகி’ப் போனோம் என்கிற நிஜம், விழுங்கிக் கொள்ளத்தக்க கசப்பல்ல. ஆளைச் சுருட்டுகிற பூச்சிகொல்லி மருந்து.

அரை உயிராக வீடு போய் விழுந்தார், தாழையா.

## 23

மடத்தை விட்டுப் படிகளில் இறங்குகிறபோது, தாழையாவின் உடம்பில் உயிரேயில்லை. ‘இன்றுபோய்

நாளைவா' என்று ஸ்ரீராமர் சொல்லக் கேட்ட இராவ ணேஸ்வரனைப் போல, மனசெல்லாம் ஒடிந்து துவண்டு போய் ஓய்ந்திருந்தார்.

மொத்த ஜனமே அவரை நோக்கிப் பரிகசிப்பதைப் போல ஒரு பிரமை. இதென்ன கொடுமை! சங்கரலிங்க நாடார் மகனுக்கா இந்த விதி?

அம்மணமாய் தெருவில் நிறுத்தப்பட்டதைப்போல, அவமான அவஸ்தையில் அரைபடுகிற மனசு. கண்ணைக் கட்டிக்கொண்டு மயக்கமாக வருவதைப்போல, ஓர் உணர்வு.

'இந்தக் கணத்தில் இப்படியே செத்து விழுந்தால்கூட கௌரவமாக இருக்குமோ' என்கிற வினோத நினைவு, மின்னி மறைந்தது.

ஏழாயிரம்பண்ணைக்காரர்கள் வழக்கைப் பேசி ஜெயித்துவிட்டு, ஏகோபித்த பாராட்டுகளோடு இந்தப் படிகளைக் கடந்தவர்தான். இப்படி எத்தனையோ பஞ்சாயத்துகள்! ஒன்றா இரண்டா, ஏராளம். கணக்கு வழக்கேயில்லை. பெருமைகளும் பாராட்டுக்களும் பூத்தூவலாக மழை பெய்ய மனத் ததும்பல்களோடு இறங்கிப் போனவர்தான்.

இன்றைக்கு...???

'எடுபட்ட பயலே' என்று வைவார்கள், கிராமத்தில். அது ஒரு வசவு. இவரே எத்தனையோ தடவைகள், யார் யாரையோ அந்த வசவைப் பயன்படுத்தித் திட்டித் தீர்த்திருக்கிறார்.

'சமூகத்தில் வாழத் தகுதியில்லாமல், சமூகத்தினால் நிராகரிக்கப்பட்டவன்; தண்டிக்கப்பட்டு விலக்கப்பட் டவன்' என்பதுதான் அந்த வசவுக்கான பொருள்.

இன்றைக்கு... இவரே 'எடுபட்ட பயலாக...'

சாதியிலிருந்து தள்ளி வைப்பது— ஒதுக்கி வைப்பது— என்றால் சாதாரணத் தண்டனையா? தூக்குத் தண்டனை யைவிடக் கொடியது. கிராமங்களில் உச்சபட்சத் தண்டனையே, அதுதான். உயிருடன் வைத்திருந்து, தனிமைப்படுத்தி அவமதித்து சித்திரவதை செய்வதுதான்.

நாளை முதல் நாடார்கள் யாரும் பேசக்கூடாது, இவருடன். சாதிக்காரர்கள் கடையில் சரக்கு வாங்க முடியாது. சாதிக்குப் பாத்தியப்பட்ட 'நீர் மாலை'க் கிணற்றில் நீர் இறைக்க முடியாது. நாவிதர் கிடையாது. ஏகாலி கிடையாது. இவ்வளவு ஏன்... செத்தால்... சாதிக்குப் பாத்தியப்பட்ட சுடுகாட்டில் புதைக்கவிட மாட்டார்கள்.

அதை நினைக்க நினைக்கத்தான், அவருள் வேக்காடு. தலைமுறை தலைமுறையாக இந்த ஊர் மண்ணில் வாழ்ந்த பரம்பரை. மண்ணுக்குப் பெருமை சேர்த்த பாரம்பர்யம். மண்ணில் புரண்டு, வியர்வை சிந்தி வளர்ந்தவர். இந்த மண்ணின் மடியிலேயே கட்டையைப் புதைக்க வேண்டும் என்று கனா கண்டவர். மண்ணின் மடியையே தாய்மடி யாக நினைத்து வந்தவர்.

அந்த மண்ணாசையிலேயே மண் விழுந்துவிட்ட கொடுமைதான்— அவரால் தாளமுடியாத கொடுமை. அவரை வேக வைக்கிற கொடுமை.

இந்த அவமானத்தையும் தாங்கிக்கொண்டு உயிர் வாழ வேண்டுமா? நாளை விடிந்தால்... மற்றவர்கள் முகத்தில் எப்படி விழிப்பது?

செம்பகம் தாங்குவாளா? நாலைந்து நாட்களாக வாடிப் போயிருந்ததற்கே, அவள் உயிர் கிடந்து துடித்ததே. மனசு சரியில்லாமப் போய், இருமல் கூடியதே... இந்தச் செய்தியை அறிந்தால்...

உயிரையே விட்டுவிடுவாளா? அவளை விட்டு நான் உயிரோடு இருக்கவா? முடியுமா? நடக்குமா?

அவரால் இன்னும் நம்பமுடியவில்லை. "நம்மையா 'தள்ளி' வைத்திருக்கிறார்கள்?"

அப்படி என்ன குற்றம் செய்தோம்? ஊரைக் கெடுத்தேனா? யார் குடியையாவது கெடுத்தேனா? என்ன செய்தேன்? நான் வாழ வைத்த குடும்பங்கள் உண்டு. நான் ஏற்றி வைத்த தீபங்கள் பல வீடுகளில், ஒளி தருகின்றன. அதற்காகவா?

வியாபாரிகளிடமிருந்து, விவசாயிகளை இயன்ற அளவுக்கு ஓடி ஓடி காப்பாற்றினேனே... அதற்காகவா?

சாதிசனம் பேதப்படாமல் ஒற்றுமையாய்—அண்ணன் தம்பிகளாக—தாயா பிள்ளைகளாக வாழ வேண்டும் என்றேனே... அதற்காகவா?

எதற்காக இந்தத் தண்டனை?

முடிவில்லாத குமைச்சல், மனசுக்குள். தாளமுடியாத துக்கத்தில் நைந்துபோன மனசோடு, மாறிமாறிப் புலம்பினார். கிறுக்குப் பிடித்தவர்போல குழம்பிக் குழம்பிப் புலம்பினார்.

வீடு ரணகளமாயிற்று. அழுகையும் கதறலுமாய் இழவு வீடு போலாயிற்று.

**ம**றுநாள்—

ஊரே அலறிப் புடைக்கிற மாதிரிச் சம்பவங்கள்.

சாயங்காலம் நாலு மணியிருக்கும். கூலி ஜனங்கள் வேலை முடிந்து வீடு வருகிற நேரம்.

'ராமையா தாத்தா கிணற்றில் விழுந்து செத்து விட்டார்' என்ற தகவல், ஊரெல்லாம் நெருப்பாகப் பரவியது.

'அவருக்குத்தான் நீச்சல் தெரியுமே. எப்படிச் செத்தார்?' எல்லோருக்கும் இதே கேள்விதான், மனசுக்குள் வந்தது. ஒரே திகைப்பு.

காலையிலிருந்து சாயங்காலம் வரைக்கும் சிங்கார நாடார் புஞ்சையில்தான் உட்கார்ந்து கதை பேசிக் கொண்டிருந்தாராம். வேலை முடிகிற நேரத்தில், குளிப்பதற்காகக் கிணற்றுக்குள் இறங்கினாராம். படிகளில் இறங்கும்போதே ஒரு கல் தடுக்கிவிட்டதாம். தலைகுப்புற சுவரில் விழுந்து, கிணற்றுக்குள் விழுந்தாராம். தண்ணீருக்குள் விழும்போதே, செத்துத்தான் விழுந்தாராம். சுவரில் முகம் மோதி அடித்த அடியிலேயே, உயிர் போய்விட்டதாம்.

உடல் நீருக்குள் மூழ்கவேயில்லையாம். தக்கையாக மிதந்திருக்கிறது.

பிறகென்ன செய்ய? கிணற்றிலிருந்து எடுத்து, கட்டிலில் போட்டு, அப்படியே சுடுகாடு கொண்டுபோய் விட்டார்கள்.

சிதையில் தீ மூட்டிவிட்டு, மயானக்கரை வேலைகள் முடிந்து ஆட்கள் குளித்துவிட்டு ஈர வேட்டி சட்டையோடு, ராமையாத் தாத்தாவின் கதைகள்— வாழ்வு— சாவு வந்த அதிசயம் பற்றிப் பேசிக்கொண்டே ஊருக்குள் நுழைந்தால்—

சிங்கார நாடாரின் பெரிய நாற்றுப்படப்பு, தீப்பிடித்து எரிகிறது. பட்டப்பகலில் இவ்வளவு பெரிய படப்புக்கு எந்தப் பாவி தீ வைத்தது? எப்படி முடியும்? வாயில்லா

ஜீவன்களின் வயிற்றுத் தீவனத்தில், தீ வைக்கிற பாவத்தை யார் செய்திருப்பார்?

ஒரு இழவும் புரியவில்லை.

அதிர்ச்சியில் ஜனங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனாலும் ஆள் ஆளுக்கு குடங்களோடும், வாளிகளோடும் ஓடினார்கள். மண்ணை வாரி இறைத்தார்கள். தீயோடு தீயாகப் பரபரத்தார்கள்.

ஒன்றும் பலனில்லை. எல்லாம் எரிந்து சாம்பலாயிற்று.

எல்லோருக்குள்ளும் ஒரு சந்தேகம். 'தாழையா நாடார் தண்டிக்கப்பட்டதற்காக, தேவமார்கள் பழிவாங்கியிருப் பார்களோ... அவர்கள் வைத்த தீயாகத்தான் இருக்குமோ..."

'தாழையா நாடாரை தள்ளி வைக்கக்கூடாது' என்று எதிர்த்து முணுமுணுத்தவர்களின் தொண்டைக் குழிகளை நெரித்துவிட்டது, இந்தப் படப்புத்தீ.

**கா**லை நேரம். கார்மேகம் வியாபாரத்திற்குப் போகவில்லை. அம்மா கூலி வேலைக்குப் போய்விட்டாள். திண்ணையில் உட்கார்ந்திருந்த கார்மேகம், வீட்டுவாசலில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த சைக்கிளையே பார்த்தான். சைக்கிளின் பச்சைசீட், காலை வெயிலை எதிரொலித்து மின்னியது. ஆண்டில்பாரில் வெள்ளித் தகதகப்பாகப் பளீரிட்டது.

ராசியான சைக்கிள். பழைய சைக்கிளாகத்தான் வாங்கினான். எழுநூற்று முப்பது ரூபாய். வாங்கி சீர்படுத்தினான். நிறைய புதுச் சாமான்கள் போட்டான். லோடு கட்டவேண்டிய வண்டி. ரிக்ஷா டயர்கள், ரிக்ஷா ரிம்கள், ரிக்ஷா வீல் கம்பிகள் என்று வகைவகையாக

வாங்கிப் போட்டு புதூ...ச் சைக்கிள் மாதிரி ஆக்கி விட்டான்.

இந்த வண்டி வந்த நாளிலிருந்தே, 'ஏறுகால்'தான். நல்ல வியாபாரம். கையில் தாராளமாக துட்டுப் புழக்கம்.

தேர்தலில் தோற்றுப் போனாலும் ஒன்றும் நட்ட மில்லை.

தாழையா நாடாரை 'தள்ளி' வைத்தாகிவிட்டது. அவரது ரெக்கை சுத்தமாக ஒடிந்துபோய் விட்டது. இனி நூற்றியம்பது குடும்பங்கள் உள்ள நாடார் சாதிக்குள், தாழையா நுழைய முடியாது. விவசாயிகள் விளைய வைக்கிற பருத்தி, கம்பு, மக்காச்சோளம், மிளகாய் வற்றல் எல்லாம் இவனை நம்பித்தான்.

இவன்தான் வாங்கியாக வேண்டும். இவனுக்கான விரிந்த மார்க்கெட் வட்டம். லாரிகளில் லோடு அனுப்புகிற பெரிய வியாபாரியாகிவிட வேண்டும் என்கிற அவனது நீண்ட நாளைய கனவு, கைக்கு வந்துவிட்டது. மஞ்சள் பையில் பணக் கட்டுகளோடு பட்டுவாடா பண்ணலாம்.

இனி கார்மேகத்தின் மதிப்பே தனீ. கஞ்சிக்கு வழியற்ற பழைய கார்மேகமல்ல. பெரிய வியாபாரி. ஊர்ப் பிரமுகர்களில் ஒருவன். பஞ்சாயத்தில் உட்கார்ந்து, வழக்கை விசாரிக்கிற பெருமைகூட வந்துவிடும்.

கார்மேகத்திற்குள் பெருமித நினைவுகள். அலைஅலை யாகச் சந்தோஷ நினைவுகள். ததும்பித் ததும்பி நுரை வழிகிற சந்தோஷம்.

இவனது கனவு, இத்தனை சுலபத்தில் கை வந்துசேரும் என்று கனாக்கூட கண்டதில்லை, இவன்.

நல்லையாதான் இவனது குலதெய்வம். அவர்தான் இத்தனையும் சாத்தியம் என்று நிரூபித்துக் காட்டியவர்.

இவன் வாழ்வில் விளக்கேற்றியவர். வழிகாட்டியவர். செயல்பட்டவர்.

அவர் இல்லாவிட்டால் இந்த நிலை ஏது?

யோசித்துப் பார்த்தால் அவரா குலதெய்வம்? இல்லை. குலதெய்வம் கையிலுள்ள அரிவாள்தான் இவர். காலடியில் நிற்கும் வேட்டை நாய்தான், இவர்.

உண்மையான குலதெய்வம், மூவாயிரம் ரூபாய், உர உப்பு மூடைகள், அதுதான் குலதெய்வம். மெயின் சுவிட்சு. இவர், வெறுமனே எரிந்த பல்ப்தான்.

இவனுக்குள் நீள்கிற நினைவுகள். கடந்துபோன சமீப நாட்கள் பற்றிய திளைப்பான எண்ணங்கள். தித்திக்கிற நினைவுகள்.

அந்தச் சுய மயக்கத்தில் மூழ்கித் திளைத்து, தேனில் சிக்கிய எறும்பாக கார்மேகம் பரவசப்பட்டிருந்த அந்த இனிமையான நேரத்தில்—

தார்ப்பாய்ச்சிய வேட்டி. தலையில் வட்டக் கட்டாக தலைப்பாகை. முகமெல்லாம் கண்மூக்கு தெரியாத ஆத்திர வெறி. வலது கையில் நீளமான வீச்சரிவாள். சிங்கார நாடார், கோபமும் வியர்வையுமாக 'வேகு, வேகு' என்று வந்தார்.

'என்னமோ கொலை பாதகம் நடக்கப் போகிறது' என்ற பதைப்புடன், அவருடன் வருகிற அவரது உறவுக்காரர்கள். 'என்ன, ஏது' என்று தலையிட்டுக் கேட்க முடியாத அளவுக்கு, கோப வெறியில் சிங்கார நாடார்.

மூவாயிர ரூபாய் பெறுமான நாற்றுப் படப்பை நெருப்பு வாயில் பறிகொடுத்த கோபவெறி...

வேகவேகமாக வந்த சிங்கார நாடார், வந்த வேகத்தில் கார்மேகத்தின் சைக்கிள் டயரில் ஓங்கி ஒரு போடு போட்டார், அரிவாளால். 'டமார்' என்ற சத்தத்தில், வெடித்த டயரோசை.

கார்மேகம் 'இன்னது' என்று புரியாமல் வெல வெலத்துக் கிடக்க, கண்மூடி முழிக்குமுன், சிங்கார நாடார் அவன் மேல் பாய்ந்துவிட்டார்.

அவன் தலைமுடியை இடதுகையால் கொத்தாகப் பற்றி 'வெக்'கென்று, ஓர் இழுப்பு இழுத்து உதறினார். வீசியெறியப்பட்ட வாழைத்தொலியாக சொத்தென்று முற்றத்தில் விழுந்தான். 'தக்'கென்று வலது காலைத் தூக்கி, அவன் நெஞ்சில் மிதித்து அமுக்கிக் கொண்டார். அரிவாளை தலைக்குமேல் ஓங்கி நின்றார், பத்ரகாளியாக.

"சொல்லுடா, பொறுக்கி நாயே, முந்தா நாளு நீயும் ராமையா நாடாரும் தலாக்கெணத்துலே என்னடா பேசுனீக...? சொல்லுடா..."

திடீர்த் தாக்குதலில் வெலவெலத்துப் போயிருந்த கார்மேகம், இந்த ராமபாணத்தில் வாயடைத்துப் போனான். பயத்தில் வாய் வரவில்லை. மரணபயத்தில் அல்லாடுகிற விழிகள். வாய் அசைந்தது. ஆனால் வார்த்தை வரவில்லை.

"சொல்லுடா... சொல்லலைன்னா... சைக்கிளைப் போட்ட மாதிரி, ஒன்னையும் ஒரே போடுதான். ஜோலியை முடிச்சுருவேன். படுவா... சொல்லுடா.."

"ஒன்னும் பேசலை."

"பேசலியா? பொய்யா சொல்லுதே? நாயே... எம்படப்புக்கு தீ வைக்குறதைப் பத்திப் பேசலை? 'தாழையா நாடாரை 'தள்ளி' வைச்சது. நெறைய பேருக்குப்

பிடிக்கலை. அவுக வாயை அடைக்கணும்னா, ஒரு படப்பு வேகணும்'னு நீ சொல்லலே?"

"இல்லே... இல்லே... யாரு சொன்னா...?"

"இல்லேன்னு பொய் சொன்னே. வெட்டிப் பலி குடுத்துருவேன் ராஸ்கல். தலாக்கிணத்துலே பேசுன பய, 'வேலிக் காட்லே யாரும் உக்காந்துருக்காகளா'ன்னு பக்கம் பாத்து, ரகசியம் பேசணும்டா, அறிவு கெட்ட நாயி. நீ தீ வைக்கச் சொல்ல... ராமையா நாடாரு தீ வைச்சதை, ஆள் மூலமா சாட்சியோட நிரூபிச்சிரட்டாடா?"

இப்பத்தான் சுற்றியிருந்தவர்களுக்கு விஷயமே விளங்கியது. 'இனியும் விட்டால் ரத்தக் குழப்பமாகிவிடும். அவனும் செத்து, இவரும் ஜெயிலுக்குப் போய்... ரெண்டு குடும்பமும் நாசமாகிப் போகும். ம்ஹூம், இதை இப்படியே விடக்கூடாது.'

இப்படி நினைவுகள் அலை பாய, சுற்றி நின்று உறைந்துபோயிருந்த சுற்றத்தார், சலனப்பட்டனர். செயல் பட்டனர். ஓடிவந்து இவரைப் பிடித்துக் கொண்டார்கள்.

"வாரும் மாமா, இந்தச் சின்னப் பயலுக்காக, நீரு ஒம்ம பொழைப்பை எதுக்குப் பாழாக்கணும்? இவனைக் கவனிக்கிற எடத்துலே கவனிக்கிற விதமா கவனிச்சுரு வோம்."

என்று ஒருவன் அவரது அரிவாளைப் பிடுங்கினான். ஆள் ஆளுக்கு ஆத்திரமாகப் பேசி சிங்கார நாடாரின் ஆத்திரத்தைத் தணித்தனர். இழுத்துச் சென்றனர்.

அப்பவும் அவர் திமிறினார். திமிறவிடாமல் இறுகப் பற்றிக்கொண்டு, கடத்திக்கொண்டு போனார்கள்.

பின்னும் திரும்பித் திரும்பிப் பார்த்தார். அடங்காத ஆத்திரத்தில் கத்தினார்.

"ஏலேய்... பாவிப் பயலே... நீ வெளங்குவீயடா? எம்புள்ளே வாழ்க்கையிலே வெளக்கேத்தி வைச்சவரு, வாயடி மச்சான். எத்தனையோ குடும்பங்கள்லே அவரு ஏத்தி வெச்ச வெளக்கு எரியுது. அந்த மகராசன்— புண்ணியவான்— வெளக்கையே ஊதீட்டீயடா பாவி... நீ எம் படப்புலே வந்து வெளக்கேத்திட்டீயடா... நாயி.. பாரு... ஒன்னை என்ன செய்றேன் பாரு..."

பீதியும் கிலியுமாக புழுதியில் கிடந்தான், கார்மேகம். இன்னும் அவன் அடிவயிற்றில் பகீரென்கிற பயஉணர்ச்சி.

தலைக்கு வந்த வீச்சரிவாள், விலகிப் போய்விட்டது. ஆனாலும் வினை விடாது. சனியன் தொடரும். சிந்தா மணியை கூட்டிக்கொண்டு நிச்சயமாக போலீஸ் ஸ்டேஷன் போவார், சிங்கார நாடார்.

கார்மேகத்திற்குள் பயங்கரக் கற்பனைகள். அடி வயிற்றைக் கலக்குகிற பீதியான யூகங்கள். எதைப் பற்றியும் யோசிக்காமல் வீட்டுக்குள் பாய்ந்தான்.

ரூபாயை எடுத்துக் கொண்டான்.

அம்மாவைப் பற்றி— வீட்டைப் பற்றி— வியாபாரத் தைப் பற்றி— எதையும் யோசிக்க நேரமில்லை. மனத் திடமில்லை.

கண் காணாத இடத்திற்கு ஓடிப் போய் தலைமறை வாகிவிட வேண்டும். தாமதிக்கிற ஒவ்வொரு கணமும் ஆபத்துதான்.

"போலீஸ் ஸ்டேஷன் போனால்... படப்புக்கு தீ வைத்த கேஸோடு பம்ப்ஷெட் மோட்டார் களவும் சேர்ந்து கொள்ளும். ஆயுள் முழுக்க ஜெயில்தான். போலீஸிடம் அடிவாங்கியவன் பிழைத்து வாழ்வது கஷ்டம்... தீயை வைத்துவிட்டு சிங்கார நாடாரிடமே பேசிக்கொண்

டிருந்துவிட்டு... செத்துப்போன ராமையா நாடாரு சாவும்... இவன் தலையில்தான் விழும். நிச்சயமா தூக்குதான்...”

நினைவுகள் தாறுமாறாக ஓடின. வரிசை தப்பிய மூர்க்கமான நினைவுகள். அச்சமே அவனைச் சாட்டை யால் ‘பளீர், பளீர்’ என்று அறைய ஓட்டமாய் ஓடினான்.

ஊரைவிட்டே ஓடிப்போய், எங்கோ தலைமறைவாகி விட ஓடினான். கார்மேகத்திற்கு நிற்க ஓர் ஆகாயம் இல்லாமல் போய்விட்டது.

# 24

தாழையா நாடார் வீட்டுக்குள்ளிருந்து மூன்று பேர் வெள்ளையும் சொள்ளையுமாக படுகோபமாக வெளி யேறினர். அவர்கள் முகமெல்லாம் சிடுசிடுப்பு. அனற் பொறிகள்.

“ச்சே! வயசு ஏறுன மாதிரியே, பிடிசாதனையும் ஏறிப் போச்சு. சொன்ன வார்த்தையை மதிக்காரா...? பாரேன்.”

“மதியாத வாசல்லே மிதியாதேன்னு சொலவடை. சாதியை விட்டு தள்ளி வைச்சுக் கேவலப்படுத்திட்டாங்க, நன்றி கெட்ட ஊருசனம். இன்னும் இவுகளை விட்டுட்டு வரமாட்டேன்னு சொன்னா என்னத்தைச் சொல்ல?”

“ராசாப் போல கௌரவமா இருக்கலாம், நம்மகிட்டே. அதை விட்டுட்டு, இந்த நாசமாய் போற பட்டிக்காட்டுலே கெடந்து, ‘சீப்படப்போறேன்’னு பிடிசாதனை பண்ணுனா... நாம என்ன செய்ய?”

"சுடுகாட்டு மண்ணுலேகூட எடமில்லேன்னு மூஞ்சியிலே அடிச்ச மாதிரி, சாதிக்காரங்க சொன்ன பெறகும், இங்கேயே கெடக்கப் போறேன்னு அடம் பிடிச்சா, என்ன செய்ய? வாதத்துக்கு வைத்தியம் பாக்கலாம். பிடிவாதத்துக்கு என்ன வைத்தியம் பாக்க...?

"இதெல்லாம் ஒரு ஊரா? காலம்பூரா நல்லது செய்ஞ்ச நல்ல மனுசனை, நடு வீதியிலேயே நிறுத்திக் கேவலப் படுத்துற ஊரு. இந்த ஊரை இன்னும் மதிக்கிறாரே..."

மூன்றுபேரும் அவரது மகன்கள்தான். இதெல்லாம் தூவானம்தான். வீட்டுக்குள் 'பெருமழை'யாகவே பெய்தார்கள். அய்யாவை கண்டிப்பும் மரியாதையுமாக சத்தம் போட்டனர். ஊரைத் திட்டினர். சாதியைத் திட்டித் தீர்த்தனர். "இந்தச் சனியன் பிடிச்ச ஊரே, வேண்டாம். டவுனுக்கு வந்துருங்க" என்று கெஞ்சிக் கூத்தாடினர்.

தாழையா ஒன்றும் பேசவில்லை. பேச என்ன நியாயம் இருக்கிறது? குற்றம் செய்துவிட்ட சிறுவனைப் போல, உட்கார்ந்து சுவரில் சாய்ந்து கிடந்தார். முகம் பேயறைந்த மாதிரி இருண்டு கிடந்தது. கற்றைச் சோகத்தில் கனத்துக் கிடக்கிற கண்கள். தலைகுனிந்தே கிடந்தனர். மகன்களின் குமுறல்கள்... கோபச் சீறல்கள்... ஆத்திரமும் ஆவேசமுமான சாடல்கள்... எல்லாமே இவர்மீது கொண்டிருக்கிற பாசத்தின் வெளிமுகங்கள். ஆழ்ந்த மரியாதையின் அடையாளங்கள்.

"என்னை விட்டுடுங்க... இங்கதான் எம்முடிவு..." என்று ஒரே வாக்கியத்தை மாறி மாறிச் சொன்னார்.

"இந்த ஊர்லே அப்டி என்னங்க இருக்கு?"

"எங்க ஆத்தா அப்பன் உசுர்க அலையுது. எங்க தாத்தா... தாத்தவுக்குத் தாத்தா... எல்லாருடைய வேர்வை

வாசம் இந்த ஊருக் காத்துலே அலையுது. தாயா புள்ளையா பாசங்காட்டுன ஏழை ஜனங்க இருக்குது."

"அவுகதா உங்களைச் சாதியிலேயிருந்து 'தள்ளி' வைச்சுட்டாங்களே. சூப்பனகை மாதிரி உங்களை மூக் கறுத்துட்டாங்களே..."

"எல்லாரும் இல்லே... நாடக்கமாரு எல்லாரும் அப்புராணிக. பாடுபடுற சம்சாரிக. சகிப்புத் தன்மையோட பழகுறவுக. தாயா புள்ளையா வாழணும்னு ஆசைப்படுற நல்லவுக."

"அவங்கதானே உங்களை இக்கதியிலே நிறுத்தி யிருக்காக?"

"நல்லையா மாதிரி நாலு பேரு செய்ற அக்குருமம் இது. நாடாக்கமாரு எல்லாரும் இதைச் செய்யலே. ஏதோ ஒரு வெறியிலே நல்லையா பேச்சுக்குத் தலையாட்டி யிருக்கலாம். நல்லது கெட்டது பாக்க, ரொம்ப நாளாகாது."

"சரி... இதெதுக்கு வளவளாப் பேச்சு? நீங்க இப்ப எங்க கூட வாரீகளா... இல்லியா?"

"வரல்லே..."

"இது எங்களுக்குக் கேவலம். 'மூணு ஆம்பளைப் புள்ளைக இருந்தும், தாய் தகப்பனை நாதியத்துப் போக விட்டுட்டாக'ன்னு... ஊர்லே எங்களுக்கு நாலு பேச்சு. கேவலம்..."

"நானாகத்தான் வரல்லேங்கேன். நீங்க என்னைக் கை விடலையே... எதுக்கு உங்களைப் பேசணும்? நீங்க ஊரைப் பாத்துப் போங்க."

அப்பவும் 'காச், மூச்'சென்று கத்தினார்கள். அதிலும் தலைப்பிள்ளை 'தங்கு, புங்'கென்று குதித்தான். கோடை

மழை மேகமாகக் குமுறிக் குமைந்தான். ஒன்றும் பாட்சா பலிக்கவில்லை.

ஒரேயடியாக வேர்பிடித்து விட்டவரைப் போல, தாழையா குலுங்காமலிருந்தார். அசையவேயில்லை. வலுவான கட்டை. வைரம் பாய்ந்த மனசு. வாழ்வை அளந்து முடித்துக் கரைகண்ட ஞானத் துணிவு. அசலான மனித நேயம். மனிதர்களின் நல்லுணர்வுகளின் மீது அசையாத நம்பிக்கை. ஆகாயத்தையே தாண்டுகிற மனுசன், இந்தச் சுண்டைக்காய் நல்லையா விரித்த வலைக்குள் கட்டுண்டா கிடப்பான்? அறுத்தெறிய எத்தனை நேரமாகும்? வெளிப்பட்டுவிடமாட்டானா? வெளிச்சத்தை உணரமாட்டானா? வெளிச்சத்தின் அருமையை— தர்மத்தை— உண்மையை உணர எவ்வளவு நாளாகும்? சாதிப் பகைமையின் ஆபத்தை தொட்டுணர்ந்துவிட மாட்டானா? ஒற்றுமையின் வலிமையைப் புரிந்துகொள்ள எத்தனை நிமிசமாகும்?

உறைந்து படிந்த மனித நம்பிக்கை மட்டுமல்ல... தாழையாவின் போர்க்குணம். இறங்கிய களத்திலிருந்து ஓரடி கூட பின் வாங்கிவிடக் கூடாது என்கிற உறுதி. வெற்றியின் உச்சி வரை, முன்னேறியாக வேண்டும் என்கிற தீவிரம் போர்க்குணம்.

அவர்களுக்குத் தொண்டைத் தண்ணீர் வற்றியதுதான் மிச்சம். முட்டி மோதி, தோற்றுவிட்ட அயற்சி. அயற்சியின் விளிம்பில் வருகிற எரிச்சல்...

எரிச்சலில் கண்டமேனிக்குத் திட்டிக்கொண்டே, பஸ் ஸ்டாண்டுக்குப் போய்விட்டார்கள்.

அவர்கள் வந்துபோன செய்தியறிந்து, சிந்தாமணி ஓட்டமாக ஓடினான், பஸ் ஸ்டாண்டுக்கு. வந்து அவர் களைப் பார்த்தான்.

"மாமா மேலே கோபப்படாதீக... அவரை நா பாத்துக் கிடுதேன்," என்று தைர்யம் சொன்னான். நல்ல வார்த்தைகள் சொல்லி அவர்களைச் சாந்தப்படுத்த முயன்றான்.

இத்தனை ரகளைக்கும் கவலைப்படாமல்— அலுங்காமல், குலுங்காமல் கல் மாதிரி இருந்த பொற்கொடியின் ஞாபகம்...

கலங்காமலிருந்த தைர்யம்...

எல்லாம் இவன் கொடுக்கிற தைர்யம்தானோ...

சட்டென்று மூத்தவனுக்குள் வந்த குறுக்கு வெட்டான நினைவு.

ரொம்பச் சிடுசிடுத்தான். எரிச்சல் பட்டான்.

"ஏய்... இங்கபாரு, நாளைக்கு 'ஏதாச்சும்' ஆச்சுன்னா... எங்களுக்குத் தாக்கல் தரவே கூடாது. கொள்ளி வைக்கக்கூட நா வரமாட்டேன். எல்லாத்தையும் நீயே பாத்துக்கோ..."

என்று கோபம் கோபமாக எகிறினான்.

'தனக்கில்லாத உரிமையா... இவனுக்கு?' என்கிற கோபம்.

பஸ் வந்துவிட்டது.

**நா**லைந்து நாளாக வெளியே வரவேயில்லை, தாழையா. தாங்க முடியாத துக்கம். யாரையும் ஏறிட்டுப் பார்க்க முடியாத தலைகுனிவு. நடுங்குகிற மனசு.

சுப்ரமணி வந்தான். வேல்சாமி வந்தான்.

தேவர் பிரமுகர்கள் சொல்லிவிட்ட தகவலைச் சொன்னார்கள்.

“நாடாக்கமார் எங்க மேலே கேஸ் போட ஏதாச்சும் வழி கெடைக்குமா என்று அலைகிறார்கள். நாங்களே தேர்தல்லே தோத்துப் போய் புண்பட்டுப் போயிருக்கோம். இதுக்கு மேலே கம்பெடுத்து கலகம் பண்ண எங்களுக்குத் தோணலை. சாதியை விட்டுத் தள்ளி வைச்சிருக்கிற உங்களை, நாங்க பகிரங்கமா ஆதரிக்க முடியாது. கலகம் பண்றதுன்னு முடிவானா... உங்களை ஆதரிச்சுடலாம். இப்ப முடியாது... ஆனா... உங்க குணத்துக்காக... நாங்க மறைமுக ஆதரவு தருவோம்....”

தாழையா ஒற்றை வரியில் பதில் சொல்லிவிட்டார்.

“தப்பு பண்ணாத எனக்கு... கள்ள உறவு வைச்சுக் கணும்னு என்ன அவசியம்?”

வருகிற விஷயம் பூராவும், கசப்பாக இருக்கிறது. வெறுப்பூட்டக் கூடிய விஷயங்கள்.

செம்பகம் அன்றைக்குப் பேசியவள்தான். இந்த நாலைந்து நாட்களாக ஒரு பேச்சு பேசவில்லை. அடிபட்டு விழுந்த பறவையாகிவிட்டாள். ஒடிந்துபோய், குறைக் கோலமாக இருக்கிற ‘ராசா’வைப் பார்க்கப் பார்க்க குலை கொதிக்கிறது.

“அம்மா... கஞ்சி குடிங்கம்மா...”

“ஓர் எழவும் வேண்டாம்.”

பச்சைத் தண்ணீர் பல்லில் படவில்லை. ஒரு மடக்கு தண்ணீர்கூட குடிக்கவில்லை.

உயிர் ஒடுங்கி வருகிறது. அவளது கட்டிலை விட்டு எழாமல்— நகராமல்— இவர். அவளையே பார்த்துக் கொண்டு இவர். அலைபாய்கிற மனசு.

அவள் ஓடியாடித் திரிந்த நாட்கள் இவரோடு சங்கமித்துக் குழைந்த அழகு. பதறிப் பதறி பலவீனமாகி தவித்த நாளில் கூட, இவரே முழுத்த ஆம்பளையாகக் கருதி... பரவசப்பட்டு... இவருள் நம்பிக்கையை வளர்த்த அவளது சுபாவம்...

குழந்தை பெற்ற நாட்கள். குழந்தைகளைச் சீராட்டி மகிழ்ந்த அனுபவங்கள். குழந்தைகளையும் கவனித்துக் கொண்டு, காட்டிலும் வீட்டிலும் பாடுபட்ட அவளது சாமர்த்தியம்...

இவரைக் கொண்டாடி மகிழ்ந்த செம்பகம். சண்டை சத்தம் போடாத செம்பகம். இவர்மீது உயிரையே வைத்திருக்கிற செம்பகம்...

அவருள் சுருள்சுருளாக அந்த நினைவுகள். விதம் விதமான காட்சிகள். கடந்த போன நிஜங்கள் மனசின் வேர் வரை தழுவிக் கரைத்து பண்படுத்திய அனுபவங்கள். பக்குவப்படுத்தி மெருகேற்றிய சம்பவங்கள்.

ஒன்றா... ரெண்டா? கோடி கோடி... அனந்த கோடி...

வெவ்வேறு இடத்தில், வெவ்வேறு வகைகளில் வளர்ந்து வந்த ரெண்டு மனசுகள். ஒன்றையொன்று கண்டு மிரள, சேர்த்து வைக்கப்பட்ட பலவந்த நிலைமையில்.... கட்டுண்டு நின்ற மனசுகள்.

அந்த மனசுகள் ஒரு மனசானது என்பது எவ்வளவு அற்புதமான விஷயம்! அதைச் சாத்தியமாக்கியது எது?

சகிப்புத்தன்மை... அவளது சகிப்புத்தன்மை... இவனை இவனாகவே ஏற்றுக்கொண்ட அவளது தாய் மனசு. இவனது பலவீனங்களோடு, நற்குணங்களையும் சேர்த்து அரவணைத்துக் கொண்ட சகிப்புத்தன்மை....

'சகிப்புத்தன்மைதானே... மனுசத்தன்மை' செம்பகம் கூறினாள்.

இதுதான் அவர்களது வாழ்க்கையின் வேதம். பாதை. பட்டறை. சிகரம். வெற்றிமூலம்.

இந்தச் சாதாரண விஷயம், ஏன் இந்த ஊர்ச் சனங்களுக்குத் தெரியமாட்டேன் என்கிறது? சரிவுகளுக்கும் வீழ்ச்சிகளுக்கும் என்ன காரணம் என்று, ஆற அமர யோசிக்க முடியவில்லையே ஏன்? சரிந்து நொறுங்கிக் குவிந்து கிடக்கிற ஏழை சனங்கள், ஒன்னா சேர்ந்தால்... ஒரு சக்தி பிறக்குமே... ஒரு தெளிவு கிடைக்குமே... வாழ்க்கை விடியுமே...

ஏன்... ஒன்று சேர முடியலை? சகிப்புத்தன்மையில்லே. சகிப்புத்தன்மையில்லாம பொழிச் சண்டை..... வரப்புச் சண்டை.... கோழிகுஞ்சுக்காகக்கூட தெருச் சண்டை.... ஒரு குடம் தண்ணீருக்காக கோஷ்டி சண்டை.... சாதிச் சண்டை.... எல்லாமே சகிப்புதன்மை யில்லாததாலேதான். அடுத்த மனுசனும், அடுத்த சாதிக்காரனும் நம்ம அண்ணன் தம்பிகதான்ங்கிற சகிப்புத்தன்மை வந்துட்டா... விழிப்புணர்ச்சி வந்துரும். ஒற்றுமை வந்துரும். சக்தி தெரிஞ்சுரும். துணிச்சல் வந்துரும்.

அவருக்குள் ஆத்மாவாகக் கரைந்திருக்கிற செம்பகமும்... ஊரும்.

அவருள் அவராக... அவளும் ஊரும்.

கலந்து பின்னிக் குழம்புகிற நினைவுகள்.

அன்றைக்கு—

காலை நேரம். சூரியன் மேலேற மேலேற, வெள்ளையாகிற மஞ்சள் வெயில். அவரவர் வேலைகளில் அவரவர் மனசு குவிய... ஊர், தன் போக்கில் இயங்கியது.

ஆறாவது நாளிலும் வெளியே தலை காட்டாமல் தாழையா. கட்டிலின் சட்டத்தில் உட்கார்ந்திருந்தார். செம்பகத்தின் வெளுத்த முகம். ஆடாமல் அசையாமல் சலனமற்ற முகம். அவற்றில் பரவுகிற ஒரு வெளிச்சம். தொண்டைக் குழிக்குள் 'கொரட், கொரட்...'டென்கிற இழுவைச் சத்தம். கண்களின் இரு மருங்கிலும் கரிய கோடுகளாகக் கண்ணீர். உதடுகளில் மெல்லிய நடுக்கம். உலர்ந்து வெடிப்பு கண்ட உதடுகள். சுருக்கங்கள் விழுந்து துவண்டு சரிந்து கிடக்கிற கன்னச் சதைகளில் மெல்லிய துடிப்பு.

இவருக்குள் பதறி வருகிறது. அணைந்து வரும் உயிர்ச் சுடர் பற்றிய திகில். அடிவயிற்றைக் கவ்விப் பிடிக்கிற பீதியும் திகிலும்.

அவருக்குள் சுழன்று வந்து பந்தாக அடைத்துக் கொள்கிற மயக்கம். அவரும் எதுவும் குடிக்கவில்லை. அன்ன ஆகாரம் கிடையாது.

படபடப்பாக வருகிற பய உணர்ச்சி.

"செம்பு... செம்பு... ஏய் செம்பு... ஏங்கண்ணு..."

பதற்றத்தில் அவரது துடிப்பு. கலங்கி உடைந்து கரகரக்கிற குரல். கண்ணில் வருகிற நீர்ப்பெருக்கு அழுகையும் கலக்கமுமாக அவர்.

"செம்பு... செம்பு... ஏங்கண்ணு... ஏஞ் செல்லம்..."

அவளது பஞ்சடைந்த கண்களில், மெல்லிய சலனம். திரண்டு வருகிற கண்ணீர்த்துளி. அதன் நடுக்கம். 'வருந்தாதீக... அழாதீக' என்று ஆறுதல் மொழி சொல்கிற அந்தக் கண்ணீரின் நடுக்கம்.

பறைவயாடுகிற விழிகள். ஓர் உக்கிரமான சலனம். ஒரு வெறியான தடுமாற்றம். வயிற்றில் படிந்து கிடக்கிற

கையில் ஒரு துடிப்பு. அசுரத் துடிப்பு. மொத்த உடம்பே ஒரு குலுங்கு, குலுங்கி அடங்கியது.

செம்பகம் கதை முடிந்துவிட்டது. 'செத்துப் போனாள்' என்று உணர்ந்த கணத்திலேயே, இருட்டிக் கொண்டு வந்த கண்கள். கறுப்பாகக் கிடக்கிற செம்பகம். நெஞ்சுக்குள் கத்தியைச் சொருகின மாதிரி ஒரு வலி. அவரும் அவள் மேல் விழுந்துவிட்டார். உயிரில் கலந்த உயிராக.

## 25

அதே காலை நேரம்.

சுப்ரமணி வீட்டில் நிறைய வாலிபர்கள். சுப்ரமணியின் மனைவி சுப்புலட்சுமி அடுப்பில் நெருப்புக்கு விறகைத் திணித்தாள். அடுப்பில் பெரிய அலுமினியச் சட்டி. அதில் வெல்லமும் தேயிலையும் போட்ட 'காப்பி' கொதித்துக் கொண்டிருந்தது. 'ங்ங்கீய்ய்...' என்கிற இரைச்சல். கொதி நிலைக்கு முந்தைய தண்ணீர். தேயிலையின் சுபாவம் கலையாத நிலை. சூடாகிக் கொண்டிருந்த வெல்லப் பாகாக... நீர்.

கொதிக்கிற போது... தேயிலையின் ஆத்ம சங்கமம். நீர், வெல்லம், தேயிலை எல்லாமே சுயமிழந்து.... முழுசாகக் கலந்து... புதிய உருமாற்றம். புதிய நிற மாற்றம். புதிய ருசி. சுயமிழந்த பொருட்களின் அந்நியத் தன்மை கலைந்து... அந்நியோன்யமான அன்புச் சங்கமிப்பில்... புதிய குணம். புதிய பண்பு. புதிய வீர்யம்.

அப்படித்தான்... இந்த இளைஞர்கள். அமைப்பாகத் திரண்டு, கூட்டங்கள் நடத்தி... சமுதாயக்கல்வியும்,

தத்துவக்கல்வியும் பெறப்பெற... உணர்வு ரீதியான சங்கமிப்பில், புதிய குணம். புதிய பண்பு. புதிய வீர்யம்.

தேவர், நாடார், நாயக்கர், பறையர், சக்கிலியர் என்கிற சாதிகளிலிருந்து தனித்துவங்களோடு கைகோர்த்தவர்கள். சாதி கடந்த கலப்பு. கல்வி பெறப் பெறக் கொதிநிலை. தனித்துவங்களின் கோடுகள் கரைந்து, சுயமிழந்த புதிய சங்கமிப்பு... புதிய புதிய... புதிய...

சிந்தாமணி மாவட்டக் குழு முடிவுகளை விளக்கிப் பேசினான். பேச்சினூடே சமுதாய வரலாற்றையும் கலந்து சொன்னான்.

'ராஜா ராணி ஆண்ட காலத்தில் சாதியடிப்படையில் இருந்த வேலைப் பிரிவினைகள். அதுவே நீண்ட காலம் நீடித்தது... அதனடிப்படையில் உறைந்துபோன சாதி முறையிலான சமுதாய அமைப்பு...

தொழில் யுகம்... கல்வி.... தொழிற்கல்வி எல்லாத் தொழில்களிலும் எல்லாச் சாதியினரும் என்கிற இன்றைய நிலைமை. இதன் விளைவாக சாதீய அமைப்பில் ஏற்பட்டிருக்கிற உடைவுகள்... நிலப்பிரபுத்வம் அகற்றப் படாததால் சாதீயம் நீடிக்கிற நிஜம்...'

'காப்பி' வந்தது. எல்லோருக்கும் சுப்புலட்சுமி விநியோகித்தாள். பின்னும் நடந்த கூட்டம் முடியும் தருவாயில்—

ஒருவன் ஓடி வந்தான்.

"ஏய்... சுப்ரமணி..."

வெளியே வந்தான்.

"என்னப்பா...?"

"ஒங்களுக்கு விஷயம் தெரியாதா?"

“என்ன விஷயம்?”

“வாயடி நாட்டாரும், அவரு சம்சாரமும்...”

“ஆ... ஹ... என்னாச்சு?”

“சேர்ந்தாப்லே செத்துக் கெடக்காக.”

“எப்ப?”

“இப்பத்தான். பொற்கொடி அழுதுக்கிட்டிருக்கா...”

சிந்தாமணிக்குக் கேட்டது. அவனுள் ஓடிப்பாய்ந்த மின்சார அதிர்வு. பக்கென்கிற மனசு. அவனுக்குள் ஏற்பட்ட மனக்கனம். ‘இப்ப என்ன செய்ய’ என்கிற குழப்பம்.

கனத்த பாரம் மனசை அழுத்துவதாக உணர்ந்தான்.

சாதியிலிருந்து தள்ளி வைக்கப்பட்ட கொடுமை. சாதிச் சுடுகாட்டில் இடமில்லை. சாதியாட்கள் வராமல், ஈமச் சடங்குகள் எப்படிச் செய்வது? நீர்மாலைக் கிணற்றுக்குப் போவதற்கு, சாதியாட்கள் வேண்டுமே.... தேர் தூக்க சாதியாட்கள் வேண்டுமே... மயானக்கரை வேலைகளுக்கு நாட்டாமையும், சாதிப் பிரமுகர்களும் வேண்டுமே... பந்தல் போட சாதியாட்கள் வேண்டுமே...

என்ன செய்ய...? எப்படிச் செய்ய?

பயங்கரச் சூன்யத்தின் முற்றுகைக்குள் இவன்...

மாமாவும், அத்தையும் செத்த சோகத்தைவிட.... மறித்துக்கொண்டு நிற்கிற இந்தப் பாரங்கள்தான், பெருங்கொடுமை....

சிந்தாமணிக்குள் தவிப்பு.

சுப்ரமணி உள்ளே வந்தான். அவன் முகத்திலிருந்த பிரேதக்களை.

"விஷயம் தெரியுமா... சிந்தாமணி?"

சிந்தாமணிக்குள் பொங்கிப் பீறிடுகிற துக்கத்தை, பல்லைக் கடித்துச் சமாளித்தான். அவன் முகத்தில் இறுக்கம். கன்னக் கதுப்புகளில் பற்கடிப்பின் புடைப்பில்... அவன் மனச் சோகம்.

"தெரியும்... இதைப் பத்தி நீயே பேசிரு."

சுப்ரமணி கூட்டத்தின் நடுவில் நின்றான்.

"நீயே சொல்லேன்... சிந்தாமணி."

"இல்லே. நீ சொல்றதுதான் பொருத்தம்."

சுப்பிரமணி அழுதுவிடுவான் போலிருந்தது. குரலில் உடைந்த மனசின் கரகரப்பு. எல்லார் முகங்களிலும் எண்ணெய்க் கசிவு போன்ற ஒரு நிறம். ஓர் இறுக்கம்.

"சாதிக இருக்கட்டும். பேதமும் சண்டையும் வேண்டாம். மதம் வேணும்னா, இருக்கட்டும். வெறியும் விரோதமும் வேண்டாம். ஒழைக்கிற ஏழை மனுச மக்கள், ஒத்துமையா இருந்தால்தான்... நாட்டைக் காப்பாத்த முடியும். சமுதாய அமைப்பை மாத்த முடியும். அதுக்கு மக்கள் ஒற்றுமைங்குறது, ரொம்ப ரொம்ப முக்கியம். இதுதான் நம்ம வாலிபர் சங்கத்தோட கடமை, லட்சியம், நோக்கம், குறிக்கோள்.

தாழையா நாடாரு தரகர்தான். ஆனா இதே கொள்கையையே... வாழ்க்கையா வாழ்ந்தவரு. மக்கள் ஒற்றுமைக்காக அவர் போராடுனாரு. அதனாலேதா... சாதிப் புறக்கணிப்புக்கு ஆளாகியிருக்காரு. அவரு அதிசயமான மொறையிலே எறந்துருக்காரு.

மனைவியும் கணவனும் சேர்ந்தே இயல்பான கூட்டுச் சாவு நடந்துருக்கு. அது அவுக அன்புக்குச் சாட்சி. மன ஒற்றுமைக்கு அடையாளம்.

அற்புதமான அன்பு உள்ளமும், மனித நேயமும் கொண்ட இந்த மாமனிதரின் இறுதிச் சடங்குக்கு, அவரது சாதி சனங்க வரமாட்டாங்க. ஆனா சகோதரத்துவத்தை சமத்துவத்தை விரும்புற ஒவ்வொரு இந்தியனும் இந்தியாவை உருவாக்குற— சமத்துவ இந்தியாவை உருவாக்குற கனவுகளோட இயங்குற இந்திய ஜனநாயக வாலிபர் சங்கம், இந்தியாவின் பிரதிநிதியாக நின்று, இந்த ஈமச் சடங்கு நடத்தட்டும்.

கல்யாணத்துக்கு பல சாதிக வந்துட்டு மொய் செய்ஞ்சு போவா. ஆனா இழவுக்கு சுயசாதிக மட்டும்தான் வரும். சுய சாதி மட்டும்தான், இறுதிச் சடங்கை நடத்துவாக.

எல்லாச் சாதி சனத்தையும் மனசார நேசித்த தாழையா நாடாரின் இறுதிச் சடங்கை... எல்லாச் சாதி களையும் சேர்ந்த நாம செய்றதுதா, ரொம்பப் பொருத்தம்.

நமக்கு நம்ம சாதிக்குள்ளேயிருந்து வர்ற நிர்ப்பந்தத் துக்குப் பணியாம... நாம துணிச்சலா நிக்கணும். இதை வெற்றிகரமா முடிக்கணும்."

எல்லாரும் "செய்ஞ்சிருவம்... செய்ஞ்சிருவம்" என்று ஏகோபித்துக் குரல் கொடுக்க... கூட்டம் கலைந்து, தாழையா நாடார் வீட்டை நோக்கிப் புறப்பட்டது.

பொற்கொடியின் அழுகைச் சத்தமும், சிந்தாமணியின் அம்மா அழுகைச் சத்தமும் மட்டுமே கேட்டது. ஓர் இழவு வீட்டுக்குரிய கூட்டு ஒப்பாரியின் சத்தக் கலவையில்லை. சிங்கார நாடார் மனைவி மட்டும், வீடு வாசலை... துணிமணிகளை ஒதுங்க வைத்துக் கொண்டிருந்தாள்.

மற்ற நாடார் வீட்டுப் பெண்கள் வரவில்லை. ஆனால் வேலை ஜோலிகளைப் பார்க்கிற மன அமைதியிலும் அவர்கள் இல்லை. தெரு முனையில் கூட்டமாக.... வருத்தமும், சூள் கொட்டல்களும், முகவாட்டமுமாக நின்றனர்.

"வாயடி எப்பேர்பட்ட மனுசன். 'அவரு மோசம்'னு ஒரு பயலாச்சும், விரல் நீட்டிக் குத்தம் சொல்ல முடியுமா? தங்கமான மனுசன். அதான்... தங்கச் சாவு செத்துருக்காரு. பொஞ்சாதியோட சேர்ந்து உசுர் போகணும்னா.. அவரு எம்புட்டுச் சுத்தமான ஆளாயிருக்கணும்?"

"அதைச் சொல்லு... அப்பேறபட்ட மனுசரு சாவுலே போய் நிக்க முடியாம... ஊர்க்கூட்டம் கூத்துப் பண்ணியிருக்கு. தாயா புள்ளையா இருந்த ஊர்லே... பஞ்சாயத்துத் தேர்தலும் சாதி வெறியும் வந்து, பேய்க் கூத்து போட்டுருச்சே."

"ஊரையே கிழிச்சு, கந்து கந்தாக் கசக்கிப் போட்டுருச்சு, சனியன் பிடிச்ச சாதியெண்ணம்."

"எதைத் தள்ளினாலும்... இழவைத் தள்ளக் கூடாது. நாம பாட்டுக்கு போய் நின்னா... என்ன?"

"நிக்கலாம். தப்பு இல்லே. நிக்கணும். நிக்காட்டா.... பாவம். அந்தப் பாவம், நம்மளைச் சும்மா விடாது..."

"அப்ப... வாங்க போவம்."

"அதெப்படி....? 'சாதிக்கட்டு'ன்னு ஒன்னு இருக்கே. சரியோ... தப்போ... சாதிக்கட்டை எப்படி மீற முடியும்?"

வீட்டிலிருந்து சற்றுத் தள்ளி வட்டமாகவும், வருத்த மாகவும் தர்மசங்கடமான முகபாவங்களுமாக நின்ற

பெண்களை ஒரு பார்வை பார்த்துவிட்டு... சிந்தாமணி வீட்டுக்குள் போனான்.

வாலிபர் சங்கத் தோழர்கள், வீட்டு முன்னால் நின்றனர். அவர்களுடன் சிங்கார நாடாரும் நின்றார்.

சிங்கார நாடார்தான் இருப்பதில் பெரியாள். பையன்களுக்கு யோசனைகள் சொன்னார்.

“சரியப்பா... நாலு கம்புகளைத் தூக்கிட்டு வாங்க. எங்க வீட்லே கிடுகுக்கட்டும், கடப்பாறையும் இருக்கு. எடுத்துட்டு வாங்க பந்தல் போடுவோம்.”

“சிந்தாமணி... சுப்பாநாயக்கரு கடையிலே போய் வெத்தலைக்கட்டு, பாக்கு, சுண்ணாம்புப் பாக்கெட் வாங்கிட்டு வா.”

“குறிஞ்சி நாற்காலி தூக்கிட்டு வரணும்லே?”

“ஆமா. நாடாக்கமாரு தரமாட்டாகள்லே?”

“எங்க வீட்லே ரெண்டு மரச்சேரு கெடக்கு. எடுத்துட்டு வாரேன்...”

“நீ... போக வேண்டாம். வேற பையங்களை அனுப்பு...”

ஆள் ஆளுக்கு வேலைகள். கால்களில் சக்கரம் கட்டிக் கொண்டு பாய்ச்சல்கள். வேலைகள் ரெக்கை கட்டிக் கொண்டு பறந்தன.

வாலிபர்கள் ‘நா முந்தி, நீ முந்தி’ என்று போட்டி போட்டு முண்டியடித்து வேலைகள் பார்த்தனர்.

வீட்டு முன்னால்... பந்தல் ரெடி. ஏகாலி வந்து கட்ட வேண்டிய வெள்ளைத் துணியையும், பந்தலின் அடி வயிற்றில் கட்டிவிட்டனர்.

'தள்ளி' வைக்கப்பட்ட வீட்டுக்கு நாம போனா நாட்டாக்கமாரோட கலகம் பண்ணத் தயார்னு அர்த்தம். வாயடி நாடாரு நல்ல மனுசன்தான். நம்ம மேலே பாந்த முள்ள மனுசன்தா. என்ன செய்ய? ஊரு நெலவரம் சரியில்லியே... யாரும் போக வேண்டாம்."

என்றார் தேவர் நாட்டாமை. ஆனால்... மனம் சகிக் காமல், அதை மீறிக்கொண்டு போகிற தேவர்களை அவர் தடுக்கவில்லை. தடுக்க மனசு துணியவில்லை.

நாயக்கமார், பறையர், சக்கிலியர் எல்லாரும் வந்தார் கள். வீட்டு முன்னால் கும்பல் கும்பலாக உட்கார்ந் தனர். இளமதிய வெயில். கூரை நிழல்களில் கிராமத்து உழைப் பாளிகள்.

மரச்சேர்கள் வந்தன. முன் நடையை ஒட்டியுள்ள திண்ணையில், கிழக்கு பார்த்து மரச்சேர்கள் ஜோடியாகப் போடப்பட்டன. சிந்தாமணியும் சுப்ரமணியும் சேர்ந்து... கட்டிலில் குப்புறச் சாய்ந்து கிடந்த தாழையானை தொட்டுத் தூக்கினார்கள். ஜில்லென்கிற உடம்பு. தூக்கி சேரில் உட்கார வைத்தனர். மாற்று வேட்டி சட்டை கட்டி விட்டனர். வெத்தலை பாக்கை, மென்று வாயில் திணித்தனர். நாடிக்கட்டு போட்டு கால் கட்டும் போட்டனர்.

சிங்கார நாடார் மனைவி ஒத்துழைபோடு செம்பகத் தையும் தூக்கி, சேரில் உட்கார வைத்தனர். அவள் செம்பகத்துக்கு மாற்றுச் சேலை கட்டிவிட்டாள். தேவ மாருக்குப் பாத்தியப்பட்ட பூக்காரர், கொண்டு வந்த பூமாலைகளைப் போட்டனர். மரக்கால்களில் நிறை தானியம் அள்ளி வைத்து... ஊதுபத்தி பொருத்தி வைத்தனர்.

ஆரம்ப வேலைகள் ‘ஜாம், ஜாம்’ என்று நடந்து முடிந்தன. சிந்தாமணி, உட்கார வைத்து முடித்த தம்பதியைப் பார்த்தான்.

மாலையும் கழுத்துமாக மணமக்களைப் போல, உட்கார்ந்திருந்த அந்த அழகு... அந்த ஜோடிப் பொருத்தம்... ஆத்ம சங்கமப் பேரழகு...

சிந்தாமணிக்குள் என்னவோ செய்தது. முட்டிக் கொண்டு வருகிற அழுகை. குத்தலெடுக்கிற கண்கள்.

கவனிப்பில்லாமல், குத்தலும் கொதுக்கலுமாக துவண்டு கிடந்த தாழையா மீசை. அவரது ஆசைக்குரிய மீசை. அவருக்கான அடையாளம்.

வினோதமான துயரம் இவனை ஆட்கொள்ள... கிட்டத்தில் போனான். அவருடைய மீசையைத் தொட்டு நீவிவிட்டான். கைகள் நடுங்கின. கோதி முறுக்கி வைத்தான். மீசையின் நிமிர்வு, அவரை முழுமைப்படுத்தி அழகாக்கியது போலிருந்தது.

முட்டிக் கொண்டு வருகிற அழுகையை கட்டுப்படுத்த முடியவில்லை. கதறியழுகிற பொற்கொடி. அம்மாவின் ஒப்பாரி. பெற்றோரின் காலடியில் துவண்டு கிடந்து, ஏதேதோ சொல்லிச் சொல்லியழுகிற பொற்கொடி.

சிந்தாமணிக்குள் கலக்கம். மாமா... கம்பீரமான மாமா... ஊரையே நற்குணத்தால கைக்குள் வைத்திருந்த மாமா... எல்லாச் சாதி மக்களின் அன்பைச் சம்பாதித் திருந்த மாமா... ‘இதுக்குத்தான் வாயடி வேணும்ங்குறது’ என்று ஒவ்வொருவரும் மகிழ்ச்சியோடு கூவி, அவரது இருப்பை அர்த்தப்படுத்திய— அழகுப்படுத்திய அற்புதம்... அதற்குள்ளிருந்த அவரது உழைப்பு.... நல்ல மனசு...

நெஞ்சுக்குள் அழுத்துகிற கனம். திரண்டு உதிர்ந்த நீர்த்துளியை துடைத்துக்கொண்டு, வெளியே வந்தான்.

சிங்கார நாடாரைத் தேடினான்.

"என்னப்பா...?"

"அவரு புள்ளைகளுக்கு தாக்கல் சொல்லிவிடணுமா?"

"இதென்ன.... இப்படிக் கேட்கே? கொள்ளி வைக்கிற புள்ளைகளுக்கு தாக்கல் அனுப்பாம எப்படித் தூக்குறது?"

அவர்கள் நேற்று சொல்லி விட்டுப்போன கோப வார்த்தைகளைக் கூறினான்.

"அவுக... ஏதோ கோபத்துலே குருட்டுத்தனமா சொல்லிட்டுப் போயிருப்பாங்க. நாம மொறைப்படி தாக்கல் குடுத்துருவோம். வந்தா வரட்டும்... வராட்டா... நாம நம்ம வேலைகளைப் பாப்போம்."

"அதுவும் சர்த்தான்."

'தாக்கல்' பறந்தது. காளிசாத்தான் ஊருக்கும் ஆள் போயிற்று, 'டங்கா மேளம்' கொண்டு வர.

அவர்களை மறித்துக்கொண்டு நின்ற பிரச்சினைகள்— எந்தச் சுடுகாட்டில் போய் குழி வெட்டுவது? யார் கொள்ளிக்குடம் சுமப்பது? எந்த நீர்மாலைக் கிணற்றுக்குப் போவது?

வலுவான மறிப்புகள். அவமானகரமான மறிப்புகள். அற்பத்தனமான மறிப்புகள். தர்மதேவனுக்குச் சூட்டிய முட்கிரீடமாக— சிலுவையாக— மறிப்புகள்.

இதை எப்படித் தாண்டுவது?

சிந்தாமணிக்குள் குழப்பம் எல்லாச் சாதிகளையும் சேர்ந்த வாலிபத் தோழர்கள், கூடிக் கூடிப் பேசினர்.

அதே நேரத்தில்—

நல்லையாவும், அவரைச் சேர்ந்த நால்வரும் மும்முர மாக இருந்தனர். தாழையாவின் சாவின் அதிர்வில் மனம் கலங்கிப் போய்... சாதிக்கட்டை மீறத் துடித்த நாடார்களை யெல்லாம் தனித் தனியாக சந்தித்து மிரட்டினர்.

'சாதிக்கட்டை மீறுவது எவ்வளவு பெரிய குற்றம்' என்பதைச் சொல்லி அச்சுறுத்தினர்.

ஊருக்குள் எங்கும் ஒரு வகையான துக்கமும், மனக் குழப்பமும். உறுத்துகிற மனச்சாட்சிகளின் முள் குத்தல்கள்.

## 26

நல்லையா குரூப்பின் அச்சுறுத்தல்கள், வேலை செய்யாமலுமில்லை; வேலை செய்யவில்லை. நாடார் விவசாயிகள், தெருக்களில் சினைப் பூனைகளாக நிலை கொள்ளாமல் அலைந்தார்கள். சாதியில் ஒரு இழவு விழுந்தால்... யாரும் வேலைக்குப் போக மாட்டார்கள். இப்போதும் ஒரு சுடுகுஞ்சுகூட வேலைக்குப் போக வில்லை.

காலையிலேயே போயிருந்தவர்கள்கூட வீடு வந்து விட்டார்கள். ஆனால், இழவு வீட்டுக்கு வரவில்லை. தலைக்கட்டு வரி ரெண்டு ரூபாய் தரவில்லை. ஈமச் சடங்கு களில் கலந்துகொள்ளவில்லை.

ஆனால் கலந்துகொள்ளாமல் ஒதுங்கியிருக்கவும் மனம் சம்மதிக்கவில்லை. புழுக்கம். தர்மசங்கடமான வேதனைகள். இக்கட்டான சூழல். மனநெருக்கடி. கைகளைப் பிசைந்துகொண்டு முகவாட்டமாய் அவர்கள்.

இயல்பாகவே ஈரமனசுள்ள கிராம விவசாயிகள்... மரணத்திற்கு கலங்குகிற— மனம் பதைக்கிற— மனித நேயமுள்ளவர்கள். அத்துடன் எல்லோருமே, ஏதோ ஒரு வகையில் தாழையாவின் நல்ல மனசையும், உதவியையும் அனுபவித்தவர்கள்.

'மிளகாய் வத்தல் இப்ப விற்கலாமா... சற்றுப் பொறுத்து விலை சொல்லலாமா' என்று பொருத்தமாக யோசனை சொல்பவர். வியாபாரி கூடவே வருவார். ஆனால், சம்சாரிகளுக்கு ஆதரவாகவே நடப்பார். பஞ்சாயத்துகளில் 'டாண், டாண்' என்று மணிகொண்டு அடித்த மாதிரி பேசி... தீராத வழக்குகளையெல்லாம் தீர்த்து வைத்தவர்.

கோர்ட்டுக்குப் போய் சீரழிய வேண்டிய எத்தனையோ பங்காளிச் சண்டைகள்— பாகப்பிரிவினைச் சண்டைகளை சுமுகமாக தீர்த்து வைத்து, சகஜபாவத்தை ஏற்படுத்தியவர்.

அப்பேர்ப்பட்ட புண்ணியவான் செத்துக்கிடக்கிற போது... அந்த ஈமச் சடங்கில்கூட கலந்துகொள்ளாமல் எப்படி இருக்க? இந்தப் பாவத்தை எங்கே கொண்டு போய் கழுவ?

ஆனால்... குறுக்கே நிற்கிற சாதிக்கட்டு. அதன் முடிவு. காணாமற் போன பம்ப்ஷெட் மோட்டார்கள் பற்றிய மனக் கொதிப்பு.

இந்தக் குழப்பங்களில் இவர்கள் தடுமாறித் தத்தளிக்கிறபோது, அவர்கள் இதயமே அதிர்கிற மாதிரி, டங்கா மேளச் சத்தம்.

"டம்டம்... டமார்... டமார்.... டம்டம்" என்று அதிர்கிற சத்தம். மனசுகளின் உள் ஜவ்வுகளில் உரசுகிற மாதிரியான உறுமிச் சத்தம். சங்களின் ஒப்பாரிச் சத்தம், உணர்வுகளைச் சுண்டியதிர வைக்கிறது.

மகன்கள் வருகிறார்களா... இல்லையா என்று மூன்று மணி வரை எதிர்பார்ப்பது. அப்புறம், இறுதிச் சடங்கு வேலைகளைத் துவக்குவது என்று முடிவு.

வாலிபர் சங்கத் தோழர்களுடன் சேர்ந்து இயங்குகிற ரெண்டுபேர். ஒரு நாடார். ஒரு தேவர். தானாக வந்து இவர்களுடன் வேலைகளில் சங்கமித்தனர், துணிச்சலாக.

தேர் கட்டுகிற வேலைகள் நடந்தன. சற்றுப் பெரிய தேர். ரெண்டு பேரையும் ஒரே தேரில் கொண்டு போகிற மாதிரியான ஏற்பாடு. 'மண ஊர்வலப் பல்லக்கா.... பிண ஊர்வலத் தேரா' என்கிற மயக்கம் ஏற்படுத்தும்...

அந்த மாணிக்க நாடாரையும், பழநித் தேவரையும் பார்த்தான், சிந்தாமணி.

நாலைந்து நாளைக்கு முன்னால்—

பருத்திமார்ப் படப்பில் விறகு உருவிக் கட்டிக் கொண்டிருந்த மாணிக்கத்தை பாம்பு கடித்துவிட்டது. அலறித் துடித்தார். அவரை வீட்டுக்குக் கொண்டு வந்தார்கள். 'என்ன செய்ய' என்று புரியாமல் தத்தளிப்பு, தவிப்பு. நல்லையா எங்கோ போய் ஒளிந்துகொண்டார்.

பாம்புக்கடி வைத்தியம், முத்தையாத் தேவர் ஒருவருக்குத்தான் தெரியும். ஊர் கிடக்கிற இந்த அலங்கோலத்தில், அவரைப் போய் யார் கூப்பிட? என்ன 'முகத் தோடு' போய்க் கூட்பிட?

ஏது செய்ய என்று வழி புரியாமல் தவிக்க... நிமிஷ நேரத்தில் நெருங்கி வருகிற மரணம்.

முத்தையாத் தேவருடன் வந்து சேர்ந்தான், சிந்தாமணி. கூட்டத்தில் ஒரே கசகசப்பு. ஆறுதலான பெருமூச்சுகள்.

முத்தையாத் தேவரைப் போய் சிந்தாமணிதான் கூப்பிட்டான். "ஐயய்யோ அப்படியா? இந்தா வரேன்" என்று மறு பேச்சுப் பேசாமல், ஒருகணம் கூடத் தயங்காமல் புறப்பட்ட அவரது பண்பில் மலைத்துப்போனான், சிந்தாமணி.

அடக்க முடியாத பிரமிப்பில் திணறிய சிந்தாமணி வாய்விட்டே கேட்டுவிட்டான். "எப்படியண்ணாச்சி, சொன்னவுடனே கெளம்பிட்டீக? ஊரு நெலவரம், சாதிப்பகை இதையெல்லாம் யோசிக்கலியா...?"

முத்தையாத் தேவர் பெருந்தன்மையாகச் சிரித்துக் கொண்டே நடையை துரிதப்படுத்தினார்.

"தம்பி, வைத்தி தர்மமே தனி. அதுக்கு சாதி பாக்குற, பகை பாக்குற அற்பப் புத்தியெல்லாம் கிடையாது..."

அதேபோல, பழிநி. ஆடுகுட்டிக்கு கொழை ஒடிக்கப் போன இடத்தில் கால் தடுமாறி விழுந்து, வலது பாதம் அடித்து வீங்கிவிட்டது. ரத்த உறைவா, எலும்பு முறிவா என்று தெரியவில்லை. வலி தாளாமல் துடியாய்த் துடித்தான்.

கம்படி வாத்தியாருக்குத்தான் வர்மக்கலை தெரியும். நாடார். அவர்தான் அதற்கு வைத்தியம் பார்க்க முடியும். சிந்தமணிதான் போய்க் கூப்பிட்டான். அவரும் அப்படித்தான். மறுபேச்சில்லாமல் புறப்பட்டார்.

அவரும் அப்படியே சொன்னார். "எங்க 'வாத்யார்' ஆசீர்வாதம் பண்ணி அனுப்புறப்பவே சொன்னார்... 'ஒன்னை நாளைக்கு வெட்டப்போற எதிரி வந்தாலும் கூட... அவனுக்கும் மனச்சுத்தமா வைத்தியம் பாக்கணும். அதுதான் நீ எனக்குச் செய்ற மரியாதை'ன்னாரு. அப்பேர்ப்பட்டதுதான், இந்த வைத்திய தர்மம்."

சிந்தமாணிக்குள் ஓடிய ஒரு கனவு. 'அடடா... இந்த வைத்திய தர்மமே... மானுட தர்மமா... உலக தர்மமா... எல்லா விஷயத்துலேயும் ஆகிட்டா... எம்புட்டு நல்லா யிருக்கும்....'

மதியம் ஆகிவிட்டது.

வீட்டுக்கு முன்னால், சிறுவர் சிறுமி பட்டாளத்தின் முற்றுகை. டங்கா மேளமும், உறுமியும் அதிர... நாதஸ்வரம் ஊத... பொய்க்கால் குதிரை குறுக்கும் நெடுக்குமாகப் போய், வட்டச்சுற்று சுற்றியாட..... சங்கன் வேர்க்க விறு விறுக்க ஒப்பாரிப் பாட்டு பாடினான்.

சங்கன் பெண் வேஷம் கட்டியிருந்தான்.

தெருவின் கீழ்முகப்பில் நாடார்ப் பெண்கள். மேல் முகப்பில் தேவமார்ப் பெண்கள். கிட்ட வரவில்லை. அதேபோல, தூரத்திலேயேயிருந்த தேவமார்க் கூட்டம், நாடாக்கமார் கூட்டம்.

மதியம் மூன்றாகிவிட்டது. மூன்று மணி பஸ்ஸூம் வந்து போயிற்று. மகன்கள் வரவில்லை. சாதியிலிருந்து ஒதுக்கப்பட்ட நிலைமையின் பயங்கரத்தின் குரூரத்தைச் சந்திக்கத் தயங்கிவிட்டார்கள் போலும்!

புதிய இந்தியாவைப் படைக்க இருக்கும் வலிமையுடன் இந்திய ஜனநாயக வாலிபர் சங்கம் திகழ்வதும், அதன்

கடமையாக இந்த ஈமச் சடங்கை எடுத்துக் கொண்டதுவும்... அவர்களுக்குத் தெரியவில்லை.

"சரி... காரியங்க நடக்கட்டும்," என்றார் சிங்கார நாடார்.

கொள்ளிக்குடத்தை மாணிக்கம் உடைப்பது என்று துணிகரமான முடிவெடுத்தனர்.

குழிகள் எங்கே வெட்டுவது என்று ஒரு பிரச்சினை. சுப்ரமணியே நல்லையாவைச் சந்தித்துக் கேட்டான். நாடார்களுக்குப் பாத்தியப்பட்ட சுடுகாட்டில் புதைக்க அனுமதி கேட்டான்.

"சாதிக் கூட்டம் கூடி எடுத்த முடிவு. நா மட்டும் எப்படி மாத்த முடியும்? எனக்கென்ன அதிகாரம் இருக்கு?" என்று சமத்காரமாகப் பேசி மறுத்துவிட்டார்.

வாடிப்போன முகத்தோடு திரும்பிய சுப்ரமணியைப் பார்த்தவுடன் சிந்தாமணிக்குள் வந்த வெறி. ரத்தமெல்லாம் கொதித்தது. மனசுக்குள் மூண்டெழுந்த வன்மத் தீ...

இவன் முன்னாள் ராணுவக்காரன். தேசத்துக்காக பனியிலும் மலை முகடுகளிலும் கிடந்து உழைத்தவன்... இவனுக்கென்று சில சலுகைகள் உண்டு. அதைப் பயன் படுத்திவிட வேண்டியதுதான்.

'முன்னாள் ராணுவத்தினர் சங்கத்திற்கு' ஒரு தந்தி கொடுக்க வேண்டும். அதேபோல... கலெக்டர், தாசில்தார், எஸ்.பி., காவல் நிலையம் எல்லோருக்கும் தந்திகளை அனுப்பிவிட்டு... இவனே தலைமை தாங்கி, சுடுகாட்டுக் குள் நுழைய வேண்டியதுதான். அத்துமீறலாக, கூடை மண்வெட்டிகளோடு நுழைய வேண்டியதுதான்...

எது நடந்தாலும் சரி... பார்த்துவிடுவோம். வந்து மறித்தால்... நாலு தலைகளை உருட்டுவோம்... நடப்பது நடக்கட்டும்...

சிந்தாமணி உன்மத்தம் பிடித்தவனைப் போல காட்டுக் கத்தலாகக் கத்தினான்.

இவன் இவனது வெறியைச் சொல்ல... அது கண நேரத்தில் பரவ... நல்லையாவுக்குள் குலநடுக்கம். நாடார்களுக்குள் பதற்றம். பதைப்பு. ஊரே... பதற்ற நிலவரம். கலவர உணர்வு.

தந்தி கொடுப்பது என்றவுடன்... சிந்தாமணி வீட்டுக்குள் நுழைந்தான், மேட்டர் எழுத ஒரு வெள்ளைப் பேப்பர் தேடி. பலகையில் தேடினான். அலமாரியில் தேடினான். ஒரு குயர் நோட் கிடந்தது. பழசு. அதைப் பிரித்தான். வெள்ளைத் தாட்கள் இருந்தன. கிழிப்பதற்கு வாகாக நோட்டைத் திருப்பினான். உள்ளிருந்து விழுந்த காகித மடிப்பு. நாலாக மடித்த மூன்று பேப்பர்.

குனிந்து எடுத்தான். என்ன என்று விரித்தான். தாழையாவின் எழுத்துகள். ரெண்டு நாளைக்கு முந்தைய தேதி போட்டிருந்தது.

வீட்டுக்குள்ளிருந்த மங்கலான வெளிச்சத்தில் அந்தப் பென்சில் எழுத்துகளை வாசித்தான். ஆத்மாவின் வடிவம் அது...

அவனுக்குள் பிரமிப்பு.

சோகமான ஆச்சரியம்.

மாமா சாகவில்லை— இன்னும் வாழ்கிறார். இறந்த பின்பும், இருந்து இவனுக்கு வழிகாட்டுகிறார். இவனை

நெறிப்படுத்துகிறார். லகான் போடுகிறார். ஊருக்கே வழி காட்டுகிறார். உலகத்துக்கே வழி காட்டுகிறார்.

"சங்கரலிங்கம் நாடாரின் ஒரே குமாரன் தாழையா நாடார் எழுதிக்கொள்ளும் கடைசி ஆசைகள்..."

என்று துவங்குகிற கடிதம். கடிதமல்ல இது... அவரது ஆத்மா. ஆத்ம துடிப்பு. உயில். உயிர் கரைந்து, உருக்கெண்ட உயில்.

'மளமள'வென்று வெளியே வந்தான். கிழக்கிலும்—மேற்கிலும் நின்று தவிக்கிற நாடார்— தேவர் மக்களைச் சத்தம் போட்டுக் கூப்பிட்டான்... வெறிக் கூச்சலாகக் கத்திக் கூப்பிட்டான். உணர்ச்சிப் பிழம்பாக... சிந்தாமணி.

"வாங்க... எல்லாரும் வாங்க... எங்க மாமா உங்களுக்காக— ஊருக்காக— உயில் எழுதி வைச்சிருக்காரு. அதை நா வாசிக்கப் போறேன்... நல்லா காது குடுத்துக் கேளுங்க... அப்புறமா... நீங்க உங்க மனம் போல நடந்துக்குங்க..."

'உயில்... உயில்...' என்றவுடன் ஒரு பரபரப்பு. ஏற்கெனவே தர்மசங்கடத்தில் தவித்தவர்கள்— 'சாதிக் கட்டு' என்ற ஒன்றுக்காக மட்டுமே, கட்டுப்பட்டு உழன்றவர்கள்— மனச்சாட்சியின் நமைச்சலுக்கு பதில் சொல்ல வார்த்தை யின்றித் திண்டாடியவர்கள்— மனம் முழுக்க நல்லுணர்வுத் ததும்பலில் நின்றவர்கள்—

நெருங்கி வந்தனர். ஆர்வமும், பதைப்புமாக கசகசப்பான சப்த அலைகளோடு வந்தனர். அவர்களுக்குள்ளும் வெள்ளமாகப் பரவுகிற நெகிழ்வுணர்ச்சி.

பந்தலுக்கடியில்—

குப்புறக் கிடந்த குத்துரலில் ஏறி நின்றுகொண்டு சிந்தாமணி... உரக்கப் படித்தான்:

“சங்கரலிங்க நாடாரின் ஒரே குமாரன் தாழையா நாடார் எழுதிக்கொள்ளும் கடைசி ஆசைகள்.

இந்த ஊர், எனக்குத் தாய் மாதிரி. இந்த ஊர் தண்ணீரை, தாய் பாலாகக் குடித்து வளர்ந்தவன். எங்கள் வம்சாவளி முன்னோர்களின் மூச்சு கலந்திருக்கிற இந்த ஊர் காற்றை, நுகர்ந்து வாழ்ந்தவன்.

இந்த வட்டாரத்தில் மிளகாய் செடி வெள்ளாமை இருக்கும் வரை, மிளகாய் வத்தலின் கமறல் வாசனை முழுவதும் எங்கள் ஐயா பெயரைச் சொல்லிக்கொண்டே இருக்கும். அதேபோல... இந்த ஊரில்— வட்டாரத்தில்— விவசாயம் இருக்கிறவரை, விளைந்த சாமான்களை வியாபாரிகளிடம் விற்கிற சம்சாரிகள் இருக்கிறவரை இந்தத் தரகன் தாழையா நாடான் பெயரைச் சொல்லிக் கொண்டேயிருக்கும்.

எனக்குத் தரகு தந்தது, வியாபாரிகள்தான். ஆனால், நான் எந்த சம்சாரிக்கும் மனசால்கூட தீங்கு நினைத்த தில்லை. ஒரு சம்சாரியிடமிருந்து கூட ஏமாற்றிப் பிடுங்கி வியாபாரிகளுக்குத் தந்ததில்லை.

நான்... இந்த ஊர் சம்சாரிகள் எல்லாருக்கும் முடிந் தளவுக்கு ஒத்தாசையே செய்திருக்கிறேன். ஆடு மாடு வளர்க்கிற கூலி ஜனத்துக்கும் ஒத்தாசையாகவே இருந் திருக்கிறேன்.

காரணம்... வேறொன்றுமில்லை. என் உடம்புதான் தரகன் உடம்பே தவிர, மனசு பூராவும் சம்சாரி மனசு. என் உடம்பில் ஓடுகிற இரத்தம், சுத்தமான சம்சாரியின் இரத்தம். மண்ணில் வேர்வை சிந்தி, பொன்னாக்குவதை பிறவிக்கடன் என்று நினைத்துப் பாடுபட்ட சம்சாரியின் இரத்தம்.

அதனால்தான்... சம்சாரிகளைப் பற்றி ரொம்பக் கவலைப்படுகிறேன். காலம் பூராவும் உழைத்து விளைய வைத்தாலும், நல்ல விலை இல்லை. பாடுபட்டதற்கேற்ற பலன் இல்லை. கடன் தொல்லைகளும், நஷ்டங்களுமாகவே நலிந்து வருகிற விவசாயம். சமுத்திரமாக இருந்த சம்சாரித்தனத்தை நம்பி, வேலையை உதறிய வாத்தியார்கள் உண்டு, ஒரு காலத்தில்.

இன்றைக்கு ஆடி மாதக் குளமாகக் காய்ந்துபோன சம்சாரித்தனம். காடுகரைகளை விற்று, லஞ்சமாகத் தந்து, வாத்தியார் உத்தியோகம் வாங்குகிற கேவலம். பட்டாளத்துக்குப் பையனை அனுப்ப... பருத்தியை விற்று லஞ்சம் தருகிற சம்சாரி.

இப்படிச் சம்சாரித்தனம் கெட்டழிகிறது. நாசமாகிறது. இதை எப்படிச் சரிப்படுத்த? கட்டுப்படியாகிற தொழிலாக சம்சாரித்தனத்தை எப்படி மாற்ற? உத்தியோக வருமானத்துக்கு நிகராக சம்சாரி உழைப்புக்கும் வருமானம் வருகிறபடி என்ன செய்ய?

இதையெல்லாம் யோசிக்க வேண்டிய சம்சாரிகள்... சாதிச் சண்டை, வரப்புச் சண்டை, தெருச்சண்டை போட்டு ஒற்றுமையைக் கெடுக்காமல்... ஒன்றுபட்டு நின்று யோசிக்க வேண்டிய சம்சாரிகள்... சம்சாரிகளுக்கு யார் எதிரி என்று இனம் கண்டுபிடித்து... கூடி எதிர்க்க வேண்டிய சம்சாரிகள்... கூடிப் போராட வேண்டிய சம்சாரிகள்...

உப்புக்கல்லுக்குப் பெறாத அற்ப விஷயங்களுக்காக சண்டை போட்டு, சாதி பேத உணர்வை வளர்த்து... வெறியாக மூர்க்கம் கொண்டு... நாடார்— தேவர்— நாயக்கர்— அரிஜன் என்று சாதி சாதியாகத் துண்டாகி...

ஒற்றுமை குலைந்து கிடக்கிற இன்றைய நமது ஊரை நினைத்து நினைத்து, இரத்தக் கண்ணீர் வடிக்கிறேன்.

ஒரு சாதியை ஒரு சாதி 'தள்ளி' வைத்து, பகை வளர்த்து... மனிதருக்கு மனிதர் முகம் கொடுத்துப் பேச முடியாமல் போன நிலைமையை நினைத்து நினைத்து ஊமையாக அழுகிறேன். உங்கள் கால்களைப் பிடித்து கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். சாதிப் பகைமையை உண்டாக்காதீர்கள். சகோதரத்துவ உணர்வைக் கெடுக்காதீர்கள். ஒற்றுமையைக் குலைக்காதீர்கள்.

என் சாவுகூட உங்களுக்குள் ஒரு கீறலை உண்டு பண்ணிவிடக் கூடாதே என்று அஞ்சுகிறேன். நாடார் சுடுகாட்டில் எங்களைப் புதைப்பதற்காக ஒரு சண்டை போட்டுவிட வேண்டாம். ஒரு தகராறு வந்துவிட வேண்டாம்.

எங்கள் வம்சாவளி முன்னோர்களின் காலடித் தடங்களும் வேர்வைத் துளிகளும் விழுந்துகிடக்கிற எங்கள் புஞ்சையின் வடகிழக்கு மூலையில் எங்கள் ரெண்டுபேர் களையும் புதைத்துவிடும்படி அன்புடன் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். அதுவே எங்களுக்கு தாய்மடி.

பரம்பரைப் புஞ்சையான அந்த நிலத்தை, என் பிள்ளைகள் மூவரும் மனமொப்பி, என் மகள் பொற்கொடிக்குத் தந்துவிட வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.

எங்கள் சமாதிகள் உள்ள அந்தப் புஞ்சையை என் மகளும் என்றென்றும் பிறருக்கு விற்காமலிருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

என் வீடு... சுய சம்பாத்தியம்.

சாதிக்கொரு மடம் தனித்தனியாக ஊரில் உள்ளன. எல்லாச் சாதிச் சம்சாரிகளும் ஒன்றாகச் சேர்ந்து... நல்ல நோக்கத்துடன் 'விவசாயிகள் சங்கம்' அமைத்தால்... அந்தச் சங்கத்திற்கு என் வீடு பாத்தியப்படும் என்று இதன் மூலம் தெரிவிக்கிறேன். இந்த வீட்டின் பாதுகாப்பாளனாக முத்துமணி நாடார் குமாரன் சிந்தாமணியை நிரந்தரமாக நியமிக்கிறேன்.

நாடார் சாதியைச் சேர்ந்த சம்சாரிகள் மீது எனக்கு எந்த வருத்தமுமில்லை. என்னைச் சாதியிலிருந்து 'தள்ளி' வைத்ததற்காக வேதனையுமில்லை. அவர்கள் நல்லவர்கள். உழைத்துப் பிழைக்கிற நல்ல மனசுக்காரர்கள். நன்றி உணர்ச்சியும் சுயாபிமானமும் நிறைந்த சுத்தமானவர்கள்.

நல்லையா மாமாவும், கார்மேகமும், அவர்களுடன் சேர்ந்த நாலு பேர்களும் செய்த சதிதான், எனக்கான தண்டனை.

இப்படி என்னை அவமானப்படுத்தியதில், எந்த நாடார் சம்சாரிக்கும் சம்மதமில்லை என்று எனக்கு நன்றாகத் தெரியும்.

என் இறுதிச் சடங்கிலாவது எல்லாச் சாதிகளும் ஒன்றுசேர்ந்தால்... என் ஆத்மா சாந்தியடையும். என் ஆத்ம தோழியோடு சேர்ந்து சாகிற பாக்கியம் கிடைத்தால்... அது போதும். அதுதான்... எனது பிரார்த்தனை.

இப்படிக்கு<br>
என்றும் உங்கள்<br>
**தாழையா நாடார்**

சிந்தாமணி வாசித்து முடிக்கிறபோது... தொண்டை யெல்லாம் காந்தல் எடுத்தது. நெஞ்சுக்கூடு வற்றி உலர்ந்து

எரிந்தது. அவனது கண்களில் வழிந்துகொண்டேயிருந்தது கண்ணீர்.

அவன் வாசிக்க வாசிக்க... கூடியிருந்த இரு பகுதி மக்களிடமும் வந்த சலசலப்பு. அலை அலையாக மனசுக்குள் உணர்ச்சிகள் நர்த்தனமிட... ஈர முணுமுணுப்பு கள். 'அடடா...' என்று நெருங்கிப் போன மனசுகளின் சூள் கொட்டல்கள். சின்னச் சின்ன விசும்பல்கள். பெண்கள் மத்தியில் வெடித்துக் கதறிய அழுகைகள். "ஐயய்யோ... பாதரவே" என்று பரிதவித்த பெண்கள். கலக்கமடைந்த உடைந்த மனசுகளின் விசும்பல்கள்.

நல்லையாவும் கார்மேகமும் ஏற்படுத்திய பேத அழுக்குகளை— பகைமை கறையை— தாழையாவின் மரணமும், வாழ்வும், அவற்றை நினைவூட்டிய உயிலும் சேர்ந்து பிரவாகமாகப் பெருக்கெடுத்து சகலத்தையும் கழுவித் துடைத்து இழுத்துச் சென்றன. மனிதர்கள், மனிதத்தன்மையுடன் அன்புப் பிரவாகமாகத் தழுவிக் கலந்து சங்கமித்துக் கொண்டனர்.

கட்டுடைந்த அன்புப் பிரவாகமாக எல்லாச் சாதிச் சனங்களும் கூடிக் கலந்து அலைமோத... எல்லா வேலைகளும் நிமிஷத்தில் நடந்தன.

சாயங்காலம்—

ஐந்து மணிக்குத் தேரைத் தூக்கினார்கள். மண மக்களைப் போல அலங்கரிக்கப்பட்டு தாழையாவும், செம்பகமும்.

தாய்மடியான புஞ்சையை நோக்கிப் புறப்பட்ட இறுதி ஊர்வலம். சகலவிதக் கோலாகலத்தோடு ஜாம் ஜாமென்று

